மூன்றுமாத ஸஞ்சிகை.

ஓம் பரப்பிரம்மணே நம: 160-பக்கங்கள்.

# அமிர்தகுணபோதினி

அறிவை விளக்கி, உற்சாகத்தைப் பெருக்கவல்லதான விகடமும், ஆநந்தகரமான அநுபவ விநோத ஞானகலா விலாஸங்களும் நிறைந்திலங்கும் அமிர்தச் சுவையுள்ள உயரிய மாதப் பத்திரிகை

பத்திராசிரியர்:—திரிசிரபுரம்-எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு.

"எண்ணிய எண்ணியாங் கெய்துப; எண்ணியார்
COPY RIGHT] திண்ணிய ராகப் பெறின்." (திருக்குறள்.) [REGISTERED.

| | | |
|---|---|---|
| கமலம்-6. | சென்னை பிரஜோற்பத்தி தை, மாசி, பங்குனி | இ70,71,72 |
| Vol. 6. | 1932-ம்ஸு ஜனவரி, பிப்ரவரி, மார்ச்மீ | No70,71,72 |




"ஸ்தோத்திரப் பிரியாயை நம:" என்று லலிதா ஸகஸ்ர நாமத்தில் கூறப்பட்டிருக்கிறது. ஜெகதம்பிகையானவள், பிறர் தன்னை ஸ்தோத்திரம் செய்வதில் அதிக பிரீதியை யுடையவளாம். அநேக முறை பகவத்தேவி தன்னை ஸ்தோத்திரம் செய்தவர்களின் மனோரதம் ஈடேறும்படிக் கிருபை செய்திருக்கிறாள். நாம் ஒவ்வொரு தினத்திலும் கணப்பொழுதேனும் அகில லோகநாயகியைத் தியானிப்பது கடமை. ஸ்தோத்திரமானது உண்மையாயும் உள்ளம் உவந்தும் செய்யப்படும் பக்ஷத்தில் அதை யார்தான் விரும்பார்? தேவியின் அநுக்கிரகமும் நிச்சயமாய்க் கிடைக்கும்.

ஃ

"குதிரையின் கொழுப்பையறிந்து கொம்பு கொடாமற் போனது போல" மனுஷ்யனுடைய புத்தி விசேஷத்தையறிந்த பகவான் அவனைப் பூமியில்மட்டும் வாழச்செய்து, ஆகாயம் தண்ணீர் முதலிய இடங்களில் ஜீவிக்கவொட்டாமல் தடுத்திருக்கிறார். ஆயினும் அவன் சும்மா இருக்கவில்லை. அவனுக்குப் பயந்து வளைகட்குள் நுழைந்துகிடக்கும் ஜந்துக்களையும், ஆகாசத்தில் பறக்கும் பக்ஷிகளையும், ஜலத்தில் வசிக்கும் மீன்கள் முதலியவற்றையும் அவன்

ஆகாரமாக உபயோகப்படுத்துகிறுன். ஓடிக்கொண்டிருக்கும் ஈ தன் பாரத்தால் சக்கரம் உருளுகிறதென்று தப்பிதமாய் நினைத்து ஸந்தோஷமடைவதுபோல், உலகத்திற் பிறந்த மனுஷ்யன் தன்னுடைய உபயோகத்திற்காக ஆடுமாடு முதலிய பிராணிகள் சிருஷ்டிக்கப்பட்டனவென்றெண்ணுகிறுன். இத்தகைய மனிதனைத் தம்முடைய ஆகாரமாக நினைத்துப் புலி முதலிய துஷ்ட மிருகங்கள் அடித்துக் கொன்று தின்னுகின்றன. நாய், நரி, கழுகு முதலிய அற்ப பிராணிகள்கூட மனிதன் உயிரோடிருக்கும்வரை அவனருகே வரப்பயந்து, அவன் இறந்து சவமானபின் ஒவ்வொரு அவயவமாய்க் கொத்திப் பிடுங்கித் தின்னுகின்றன. சாகபக்ஷணியாகிய யானைக்கு மனுஷ்யன் ஓர் சத்துரு. ஏனெனில், அவனும் சாகபக்ஷணியன்றே? மாம்ஸ பக்ஷணியான புலிக்கும் அவன் ஓர் சத்துரு. ஏனெனில், புலி தின்னும் ஆட்டை அவன் தின்று அதற்குப் போட்டி செய்கிறுன். இவ்வளவு இழிகுணங்களைக் கொண்டவனுயினும் பகுத்தறிவிருப்பதால் அவன் மற்றப் பிராணிகளைவிட உயர்ந்தோனுகிறுன். மனுஷ்யனிடம் வசிக்கும் ஜீவாத்மாவானது இதர பிராணிகளிடம் வசிக்கும் ஜீவாத்மாக்களைவிட உயர்ந்ததென்பது சாஸ்திரிகளினபிப்பிராயம்.

ஃ

"மனுஷ்யன் மட்டுமே கர்மத்துக்கு அதிகாரி" மற்றப் பிராணிகள் கேவலம் வமிச விருத்தி யென்னும் வியவகாரத்தைமட்டுமே கொண்டிருப்பதால் அவைகள் செய்யும் காரியங்களுக்கு அவற்றைப் பாத்தியப்படுத்துகிற வழக்கமில்லை. மனுஷ்யன் நன்மையின்னது; தீமை இன்னது என்று பிரித்தறியும் அறிவைக் கொண்டிருக்கிறுன். இத்துடன் தன்னை அடக்கியாளும் சக்தி அவனுக்கு விசேஷமாயுண்டு. அவ்வாறமையப்பெற்றும் அவன் ஸதா தீச்செயல்களையே செய்துகொண்டிருந்தால் மனுஷ்யத்தன்மை குறைந்து மிருகத்தன்மை விருத்தியாகும். அம்மிருகத்தன்மையையடைந்த ஜீவன் தனது தீச்செயல்களுக்குத் தக்க இடமாகிய மிருக சரீரத்தையே தேடிச்செல்லுமென்பதிற் சந்தேகமில்லை. ஹிந்து மதமானது மற்றப் பிராணிகளைவிட மனிதன் மேம்பாடுடையவனென்பதை யொப்புக்கொண்டாலும், இதர பிராணிகள் மனுஷ்யனுடைய சௌகரியத்துக்காக சிருஷ்டிக்கப்பட்டனவென்று சொல்லவில்லை.

ஃ

"மனஸ்" என்பது பலவித விருத்திகளையுடைய அந்தக்கரணமாம். இம்மனஸ் சுத்தம், அசுத்தம் என இரண்டு வகைப்படும்.

---

கர்ப்பமாய் விட்டபின்பு அதை மூடிவைத்து அவ்வித தூர்ச்செய்கை செய்தவனுக்கே தங்கள் பெண்ணைக்கொடுத்து மணமுடித்தவர்களுமுண்டு.

பிரம்மசரியாதி விரதங்களாலும், உபாசனைகளாலும், ஸத்கருமங்களாலும் மனம் சுத்தமாகும். காமாதிகளால் பாதிக்கப்பட்ட மனம் அசுத்தமாகும். ஆசைக்குரிய பல பண்டங்களை நாம் நினைத்த தக்ஷணமே மனதுக்கு அசுத்தமுண்டாய்விடுகின்றது. மனுஷ்யனுடைய பந்தத்துக்கும் மோக்ஷத்திற்கும் மனமே காரணம். அம்மனம் பொருள்களிற் படிந்தால் பந்தமுண்டாகிறது. அது ஒன்றிலும் பதியாமல் நிச்சலமாயிருந்தால் மோக்ஷமுண்டாகிறது. நாம் முக்தியடைவதற்கும், ஜெனன மரண துக்கத்தை யடைவதற்கும் மனமே முக்கிய காரணம். நான், எனது என்னும் வியவகாரத்தால் பந்தம் உண்டாகிறது. அவையற்றால் ஆத்மாவின் நிஜஸ்வரூபம் தெரிந்து முக்தி கிடைக்கும். மனதை ஒரே இடத்தில் நிற்கும்படி வசப்படுத்துவதால் அது ஆத்மாவை யறிய முடிகிறது. இவ்விதம் ஆத்மநிலையை யறிவதுதான் மனதை வசப்படுத்தியதின் பயன். இதைவிட அடையவேண்டிய உயர்ந்த நிலை ஒன்றுமில்லை.

ஃ

"சடையைப் பிடித்திழுத்தால் ஸன்யாஸி கிட்டவருவன்" என்ற பழமொழிப்படி, முன் ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மாவை சகாதேவன் என்னும் பக்தன் பக்தி என்னும் பாசத்தால் கட்டினான். அவனுடைய சாமர்த்தியத்துக்காகக் கண்ணன் அகமகிழ்ந்து வேண்டிய வரமீந்து தம்மை விட்டுவிடும்படி கெஞ்சிக் கேட்டுக்கொண்டாராம்!

ஃ

"எது வெகு ஆச்சரியமானது?" என்று தருமதேவதை யுதிஷ்டிரரைக் கேட்டது. அதற்கு அவர் "உலகத்தில் ஜனங்கள் அநேகர் இறந்துபோவதைப் பிரத்யக்ஷமாகப் பார்த்தும், தான் வெகுகாலம் ஜீவனோடிருப்பது நிச்சயமென்றெண்ணிப் பல காரியங்களைச் செய்கின்றனர். இதுதான் ஆச்சரியம்" என்றார்.

ஃ

"பலவித மைகள்" ஒருவித மையைத் தரித்தால் பிரபுக்களெல்லாம் வசியமாவார்களாம். மற்றொருவித மையை இட்டுக்கொண்டுபோனால் யாருக்கும் தெரியாமல் எந்த இடத்துக்கும் செல்லலாமாம் இப்படி உலகத்தில் நானாவித மைகளிருக்கின்றன. இந்த மைகளைவிட சிறந்த வேறொரு மை இருக்கிறது. அதைத்

ஒரு வீட்டிற் குடியேறினவன் மனம் எதில் நாடுகிறதோ அதற்குத் தக்கபடி அவ்வீடு விருத்தியடையும். புஸ்தகங்கள்மீது விசுவாசமுள்ளவன் பலவித புஸ்தக அறைகளை யேற்படுத்திக்கொள்வான். புராதன நாகரீகத்தைக் கௌரவிப்பவன் பூஜார்ஹமான படங்களால் இல்லத்தை அலங்கரிப்பான். நவீன நாகரீகனோ தற்காலத்திய நூதனப் பொருள்களால் கிருகத்தை நிரப்பி மகிழ்வான்.

தரித்தால் சகல காரியங்களும் சித்தியாகும். அதை விலைகொடுத்து வாங்கவேண்டியதில்லை. பிரயாசைப்பட்டுச் செய்யவேண்டியதில்லை. அந்த மைதான் போறுமை.

ஃ

“ஆலயம் தொழுவது சாலவும் நன்று” காவேரியில் ஸ்நாநம் செய்யச் செல்வோர் நல்ல துறைகளிலேயே இறங்குவர். பல ஜனங்கள் போகாத துறைக்கும், மசானத் துறைக்கும் செல்லார். பல ஜனங்கள் போகாத துறையில் இறங்குவதால் பள்ளத்தில் விழுந்து சுழலில் அகப்பட்டு உயிரை இழக்க நேரும். மசானத்துறையில் ஸ்நானம் செய்தால் அசுத்தம் நீங்காது ; தீண்டல் போகாது. ஸ்நானம் செய்து கரையேறிய தக்ஷணம் மசானத்தீட்டு உண்டாகிறது. ஆதலின் இவை நேராவண்ணம் வெகு ஜனங்கள் ஸ்நாநம் செய்யுமிடத்தில் நாம் ஸ்நாநம் செய்வதவசியம். அது போலவே, பகவானுடைய ஸ்வரூபம் எல்லா இடங்களிலும் விளங்கிய போதிலும், கோயிலில் அதிகமாய் விளங்குகிறதென்றும், அங்கு சென்று கடவுளைத் தொழுவது மனோத்ஸாகத்தைத் தந்து புண்யத்தை விளக்குமென்றும் அறியக் கடவோம். இதுதான் பற்பல ஸ்தலங்களுக்கும் யாத்திரை போவதின் முக்கிய கருத்து.

ஃ

“பிம்பமும் பிரதிபிம்பமும்” சூரியன் ஒன்றாயினும் அதன் பிரதிபிம்பம் தரையிலுள்ள பத்து பாத்திரங்களிலும் பத்து விதமாகத் தெரியும். அதுபோல் ஆத்மா ஒன்றாயினும் அது பல மனிதர்களிடமும் பல மாதிரியாக விருப்பதுபோல் தோன்றுகிறது. தண்ணீர் நிறைந்த பாண்டங்களில் சூரிய பிரதிபிம்பங்களைக்கண்டு பல சூரியன்க ளிருப்பதாய் பிரமிப்பதுபோல் உலகிலுள்ள ஜீவராசிகளைக்கண்டு அநேக ஆத்மாக்களிருப்பதாய்ப் பிராந்தியடைகிறோம். ஆகவே, பரமாத்மா ஒன்றுதான். அது மாயையின் காரணத்தால் உலகமாகத் தோன்றுகிறது. எவன் சூரியனைக் கண்ட தக்ஷணம் அது ஒன்றுதான், பத்தல்லவென்று நிச்சயிக்கிறானோ, அதுபோல் ஆத்மாவைத் தரிசித்தவர் அவ்வாத்மா ஒன்றுதான் பலவல்ல என்று நிச்சயிப்பார்கள். பிம்பம் உண்மை, பிரதிபிம்பம் பொய் என்று நாம் அறிந்திருப்பதால் பரமாத்மா மெய்யென்றும், உலகம் பொய்யென்றும் கொள்ளத்தக்கது.

ஃ

“இனிதினிது ஏகாந்த மினிது” எந்த விஷயத்தில் மனுஷ்யன் கர்வ மடைந்தாலும் பகவானைப் பூஜிக்கும் விஷயத்தில் மாத்திரம் கர்வம் கொள்ளத்தகாது. ஒவ்வொரு மகரிஷி எத்தனையோ நூற்

ருண்டுக் கணக்காய்த் தபஸ்செய்து உடம்பில் புற்று வைத்திருப்ப தும் தெரியாமல் உட்கார்ந்திருப்பதாகப் புராணங்கள் கூறுகின்றன. ஆதலின், நம்முடைய பக்தி எம்மாத்திரம்? எவன் திவ்யஞானத்தை யடைய எண்ணுகிறானோ அவன் கூடியமட்டும் மனுஷ்யர்களின் கூட்டுறவை விட்டு ஸ்வயாதீனனாய்த் தனியனா யிருக்கவேண்டும். காற்றடித்து ஜலம் கலங்கினால் ஆத்மாவாகிய நிழல் தெரியாது. ஆத லின், மனுஷ்யன் தியானம் செய்யும்போது ஏகாந்தமான இடத்தி லிருந்து ஆதியைத் தொழுவதே ஆநந்தகரமாம்.

ஃ

"மனஸின் ஸங்கல்பமே பிரபஞ்சம்" 'இல்லை' என்ற ஊரில் மூன்று இராஜ குமாரர்களிருந்தனர். இவர்களில் இருவர் பிறவாத வர்கள்; ஒருவர் கர்ப்பவாசம் செய்யாதவர். இம்மூவரும் ஆகாசத்தி லுள்ள எல்லா நகரங்களையும் முற்றுகை போடவெண்ணி மேனாக் கிச் சென்றனர். அங்கே ரமணீயமான காடுகள் இருந்தன. அவற் றைச் சுற்றி மூன்று ஆறுகள் ஓடிக்கொண்டிருந்தன. இரண்டு ஆறு கள் ஜலத்தை கண்டதேயில்லை. மூன்றாவது ஆற்றில் உலர்ந்த மணல் தான் தோன்றியது. அவ்வாற்றில் மூன்று இராஜ குமாரர் களும் ஸ்நாநம் செய்து பிறவாத சத்துருக்களை ஜெயித்து, சுவரும் கூரையுமில்லாத வீடுகளை யமைத்துச் சுகமாக வாழ்ந்துகொண் டிருந்தனரென்று ஒரு தாய் தனது குழந்தைக்குக் கதை சொல் லிக் கொண்டிருந்தாள். அதை யுண்மை யென்றெண்ணி அக் குழந்தை கேட்டுக் கொண்டிருந்ததாம். அதுபோல் "ஹே ராமா! மனஸின் ஸங்கல்பத்தால் இந்தப் பிரபஞ்சம் தோன்றுகிற தென் பதை யறியாமல் இதை யுண்மை யென்று நம்பி அந்தோ மோசம் போகின்றனரே மாந்தர்கள்!" என, முனி சிரேஷ்டராகிய வசிஷ்டர் மொழிந்தார். இதனால் உலக சுகங்கள் அநித்தியமென அறிந்து கொள்ளலாம்.

ஃ

"பராபரையின் பெருமையைப் பகருவதருமை" என்ற பெரி யோர் வாக்கியப்படி ஜெகதீசுவரியாகிய மகாலக்ஷ்மியின் மகிமையை வர்ணிக்க முடியாது. எவனுக்கு லக்ஷ்மீகடாக்ஷ முண்டோ அவனே பாக்கியவான்; அவனே சிலாக்கியன்; அவனே யோக்கியன். லக்ஷ்மி யின் கடாக்ஷமானது ஒருவனுக்குத் தனத்தை மட்டுமே கொடுக்கு மென்றெண்ண வேண்டாம். மனோ தைரியத்தையும் கீர்த்தியையும் கூட உண்டாக்கும். லக்ஷ்மியை யாராதிப்போருக்கு சீக்கிரத்தில் ஸித்தி யுண்டாகிறது.

ஃ

"அன்பே பிரதானம் அதுவே வெகுமானம்" முன்பு ஸ்ரீகிருஷ்ண பகவான் விதுரருடைய வீட்டுக்குச் சென்றபோது அவர் திவ்ய மான வாழைப் பழங்களை யுரித்துக் கொடுத்தார். பின்பு இழே

பார்த்தபோது பழங்கள் விழுந்து கிடப்பதையும், தோல்களைக் கண்ணன் உண்டு சென்றதையும் கண்டு, "ஐயோ! பேதையாகிய நான் அபாக்கியனே, பகவானுக்கு வாழைப்பழத்தைக் கொடாமல் ஞாபகமின்றித் தோலைக் கொடுத்தேனே யென்று விசனப்பட்டார். பிறகு தமது அபசாரத்தை க்ஷமித்தருளும்படி கிருஷ்ண மூர்த்தியின் காலில் விழுந்தார். பகவான் கருணை கூர்ந்து" விதுரரே! எழுந்திரும், நான் உம்முடைய அன்பையே பெரிதாகக் கொண்டவன், ஆதலின், நீர் கொடுத்த பழத்தோல்களே வெகு ருசியாயிருந்தன" என்றார். விதுரர் கீழே கிடந்த பழத்தைத் தின்று, அதில் கொஞ்சமேனும் ருசியில்லை யென்றறிந்து பகவானுடைய கிருபையை வியந்து கொண்டாடினாராம். இத்தகைய அன்பின் பெருமையைப்பற்றி இன்னொரு கதையுண்டு:—ஸ்ரீராமர் வனவாசம் செய்கையில் அவருடைய வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்த சபரி யென்பவள், தினந்தோறும் நானாவித பழங்களைப் பொறுக்கி அவற்றைத் தன் வாயாற் கடித்துச் சுவை யறிவாள். புளித்ததானால் விட்டெறிவாள். ருசியாயிருந்தால் ஒரு கூடையிற் போட்டு வைப்பாள். இப்படி எச்சில் பழங்களை சபரி இராமபிரானுக்குக் கொடுக்க அவற்றைப் பரம ஸந்தோஷத்தோடு அவர் வாங்கி யுண்டனராம். இங்கும் பகவானுக்கு அன்பே உவப்பாக இருந்தது. கடவுளிடம் தோன்றும் அன்பையே பக்தி என்கிறோம்.

ஃ

"பகவத் ஸ்தோத்திரம்" ஓ கருணாநிதியாகிய அப்பனே! யாங்கள் ஸத்காலக்ஷேபநிமித்தம் ஒருங்குசேர்ந்து ஸதாகாலமும் நின் பரிசுத்தமான பிரஸன்ன விலாஸத்தையும் கருணாபூரிதமான திருநோக்கத்தையும் கண்டு ஆநந்தித்து நிற்கின்றோம். எமதுள்ளங்களில் நினது அருட்ஜோதி நிறைந்துள்ளதென்பதை யுணர்ந்து எவ்வளவோ களிப்படைகின்றோம். இன்றையதினத்தை எங்களை மயக்கும் உலகத்தொல்லைகளுள்ள நாள்களினின்றும் விடுபட்ட ஸார்த்தகமான நன்னாளாகவும், மோக்ஷானந்த காலத்தின் ஓர் ஆரம்பமாகவும் கருதுவோமாக.

என் அய்யனே! நீ எப்போதும் எமது ஹிருதய கமல சிம்ஹாஸனத்தில் வீற்றிருந்து காருண்ணிய சாம்ராஜ்யத்தோடு சத்தியச் செங்கோலோச்சி எம்மைப் பரிசுத்தராக்குவாயாக. உனது சன்னிதானத்தில் அன்றும் இன்றும் அடைந்த பேரானந்தத்தை எப்பொழுதும் அடையும்படி அருள்வாய். எல்லாப் பொருள்களிடத்தும் நின் பிரஸன்னமானது எக்காலும் ஸித்தமென்பதையும்,

---

காமியத் தாசிமகள் கற்பு கொள்வதும், நற்குடும்பத்தி லுதித்தோர் நன்னெறி மீறுவதும் கர்ப்பவாஸத்திலேயே அமைந்தகுணம் போலும்!

இல்லாவிடில் அவை சீதோஷ்ண ருசியாதிகளை யடைந்து விளங்கா வென்பதையும் தெரிந்துள்ளோம். உலகத்தையும் அதிலுள்ள பதார்த்தங்களையும் விரும்பும்போது அவை நின் அருளாற் கிடைத் தவையென்றும், நின்னிடமே பெற்று நினக்கு அர்ப்பிதம் செய் கின்றேமென்றும் உணர்ந்து மகிழ்வோமாக.

ஓ பக்தபராதீனனே! நின் சாந்நித்தியம் எங்குமுள்ளதென்று அறியாமல் அல்லவோ இத்தனை காலம் நீ எங்களைவிட்டு மறைந் திருக்கின்றனையென முறையிடலானேம். எம் ஹிருதயத்துள் உன்னை நினைக்காமையால் அல்லவோ இவ்வளவுகாலம் யாம் உன் சந்நதியினின்றும் பிரிந்தவர்போல் தாக்கித்துக்கொண்டிருந்தோம்.

எம் இறைவனே! எமது குற்றங்களை சீர்திருத்தும்பொருட்டு எமது நன்மையைக்கருதி சிக்ஷித்த நின் அருங்கமலங்களை அன்பு டன் முத்திட்டுக்கொள்ளாது எத்தனையோவிசை நிராகரித்துள் ளோம். இவற்றையெல்லாம் எம்மை அலக்ஷியம் செய்யாமல் நின் ஆணைக்கிணங்கி, நின்மேல் அன்புவைத்து எம் வாழ்நாள் கழிக்கும் படி எம் ஹிருதயத்திட் குடிகொண்டு, ஸுகத்திலும் துக்கத்திலும் எப்போதும் மயக்கமடையாமல் நன்னெறியில் நடத்திக் கடாக்ஷிப் பாயாக. ஓம் தத்ஸத்.

## அது மறுபடியும் அகப்படக் காலம் வரும்.

வந்தது மூன்று ரூபா பத்தணா. அதைத் தான் அப் படியே எடுத்துக் கொண்டு புறப்பட்டிருக்கையில், செல வானது போக ஒரு ரூபாயே மிச்சப்படுகிறது. கணக்கு பார்ப்பின் இன்னும் ஒரு ஆறணா கூட இருக்க வேண்டும், செலவிட்ட ஞாபகம் தனக்குச் சரியாகவே இருக்கிறது. ஆறணா எப்படிப் போயிற்று ?—என்று ஒருவன் வருந்தி எவ ராவது தான் பணப்பையை வைத்தபோது எடுத்திருக்க வேண்டும் என்று எண்ணுகிறான். பிறகு அதை மறந்து விடுகிறான். மறுநாள் தன் சொக்காயில் கைபோடுகையில் ஜோப்பில் ஆறணா இருப்பதைக்கண்டு தான் சில்லரை மாற்றி வாங்கும்போது பணப்பையில் போடாமல் ஜோப்பில் போட் டதாக ஞாபகம் வருகிறது! காணாமற் போனதும் அகப் பட்டு விடுகிறது. எதுவம் அதற்குரிய காலம் வரின் வலி யவே எதிர்ப்பட்டுக் கிடைத்து விடுகிறது.

## நமது சந்தா நேயர்கட்கு

— மூன்றுமாத ஸஞ்சிகைகள். —

அன்பர்காள் !

நித்தியமும் வெகு நேர்த்தியாய்ச் சமையல் நடந்து வந்த இடத்தில் ஒரு வாரத்திற்குச் சமைக்காமலிருந்து மறுபடியும் சமையல் செய்யத் தொடங்கும்போழுது ஒரு புதிய குடித்தனத்தின் புதுச்சமையல் போன்றும் தோன்றி வெகு கஷ்டத்தைக் கொடுக்கின்றது. அவ்விதமே, "அமிர்த குணபோதினி"க்கு நேர்ந்த கனத்த விபத்திற்குப் பிறகு கார்த்திகை, மார்கழி ஸஞ்சிகைகளை வெளியாக்குவதில் அத்தியந்த சிரமத்தை ஏற்க நேர்ந்ததுடன் புதிதாகப் பத்திரிகையைத் தொடங்குவது போலுமிருந்தது. இப் பத்திரிகையின் தலைவர் ஸ்ரீமான் தி. இராஜகோபால் முதலியாரவர்களின் பெருந்தன்மையையும், பத்திரிகை நடத்துவதில் அவர் கொண்டிருக்கும் சிரத்தையையும் தமிழ் நாட்டுச் செல்வர் செல்விகள் நன்கறிவர். 48-பக்கங்களுடன் ஆதியில் ஆரம்பித்த இப்பத்திரிகையை 80-பக்கங்கள்வரையில் உயர்த்திப் பிரபலமடையச்செய்த நிர்வாக நிபுணராவார். அவரது நிர்வாகத்திறனும், தொழில்முறையில் அவருக்குள்ள ஊக்கமும் போற்றற்பாலது. இத்தகைய புனித புருஷர் கனத்த விபத்துக்காளாகவே அமிர்த குணபோதினியும் மூன்று மாதங்களாக வெளிவராது போயிற்று.

ஃ

ஆதலின், இதுசமயம் நமது பத்திரிகாபிமானிகள் இப்பத்திரிகையின் தலைவருக்குப் புதிய ஊக்கத்தையும் தைரியத்தையும் கொடுத்து ஆதரிக்குமாறு கேட்டுக்கொள்கின்றோம். கார்த்திகை-மார்கழி இரண்டு மாதங்களும் சேர்த்து இரட்டை ஸஞ்சிகையாக மாசிமாதம் முதல் வாரத்தில் வெளியிட்டுவிட்டோம். இனி, தை—மாசி—

---

ஒருவர் தாம் செய்த தீச்செய்கையை அவரே தன்னை மறந்த நிலையில் வாய்விட்டுச் சொல்ல நேர்ந்து விடுகிறது. பிறகு அதை எவ்வளவு மறைத்தாலும் முடிவதில்லை.

ஸஞ்சிகைகளை இரட்டை சஞ்சிகையாக வெளியிடமுயன்றதில், இது முடிவுபெற்று சந்தாதாரருக்கு அனுப்புவதற்குள் பங்குனி மாதம் பிறந்துவிடுவேது நிச்சயம். அதற்குப் பிறகு பங்குனி ஸஞ்சிகையையும், அப்பால் புது வருஷம் தோன்றிக்கொள்ளவே சித்திரை ஸஞ்சிகையையும் தயாரிப்பதேனில், அதற்குப் போதிய பொழுது இருக்கவில்லை. எவ்வளவு சிரமப்படினும் குறித்த மாதம் தவறி அனுப்புகிற ஆறிய பழங்கஞ்சியாகவே முடிகிறது. ஆதலின் தை—மாசி—பங்குனி—இம்மூன்றுமாத ஸஞ்சிகைகளையும் 160 பக்கங்களுடன்கூடிய ஒரே பெரிய ஸஞ்சிகையாக வெளியிட்டு, மிக்க சோதனையான இந்த ஆறும் ஆண்டினைப் பூர்த்தி செய்வதென்று தீர்மானித்து, அவ்விதமே இதனை மும்மாத ஸஞ்சிகையாக அன்பர்களுக்கு அனுப்புகின்றேம். சந்தாநேயர்கள் இதனை அன்புடன் ஏற்று நம்மை என்றும் ஆதரிக்க வேண்டுகிறேம். ஏழாவது ஆண்டின் ஆங்கீரஸ வருஷம் சித்திரைமாத ஸஞ்சிகை 64-பக்கங்களுடன் தோன்றி, என்றுமே 64 பக்கங்களோடு கூடியதாய்த் தவறுது வெளிவந்து மகிழ்விக்கும். சுபம்.

எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு,
பத்திராசிரியர்.

---

கணவனே, மனைவியோ, தாயோ, புத்திரனே, சகோதரர்களோ தங்களுக்குள் ஏற்பட்டுள்ள தகராரைத் தீர்க்க மூன்றுவது ஆசாமிக்கு இடங்கொடுத்துவிடின், எந்நாளுமே அந்த மூன்றுவது ஆசாமி அவசியமென்று வாதிக்கப்படலாம். இவர்களே தங்களுக்குள் தகாரைத் தீர்த்துக் கொள்ள முடியாமலும் போய் விடுகிறது. அவ்விதம் முடியாது போகும்படியும், தான் அவசியம் வந்து மத்தியஸ்தம் பேச நேரும்படியும் அந்த மூன்றுவது ஆசாமி அந்தரங்கத்தில் செய்தும் விடுகிறுன், ஆதலின் மூன்றுவது மனிதன் கூடாது.

---

ஒரு பிரசுர கர்த்தா ஒரு நூலாசிரியரிடம் தாங்கள் அமைக்கும் நாவலின் கைக்குறிப்பைக் காட்டுங்கள், அதற்குமேல் நானும் யுக்திகள் சொல்லுகிறேன் என்றார். கைக்குறிப்பு ஒரு பக்கம் எழுதியிருப்பின் அதைக்கொண்டு 450-பக்கம் எழுத நூலாசிரியரின் நெஞ்சில் விஷயங்கள் இருக்கலாம். அதைப் பிரசுர கர்த்தா அறிய முடியுமா? அல்லது கைக்குறிப்பை நூலாசிரியர் காட்டத்தான் முடியுமா? அவ்விதம் அந்தக் குறிப்பைக் கேட்டது தனது மௌடீகபுத்தியையே காட்டும். அந்த ஒரு பக்கக் குறிப்புக்குத்தான் 300 ரூபாய் விலை!

## "அமிர்த குணபோதினி"யின்
## ஏழாவது ஆண்டு.

இந்த ஸஞ்சிகையுடன் நமது "அமிர்த குணபோதினி"யின் ஆருவது ஆண்டு பூர்த்திபெற்று, வருஷ அட்டவணையையும் இத்துடன் அனுப்பி யிருக்கின்றோம். இனி அடுத்த சித்திரை மாதத்தில் ஏழாவது ஆண்டு பிறக்கின்றது. புது வருடமுதல் நமது "அமிர்த குணபோதினி" 64 பக்கங்களுடன் வெளியாகி முன்னிலும் பதின்மடங்கு மேன்மையாகவே ஜ்வலிக்குமென்று உறுதி கூறுகின்றோம். காலந்தவருமல் குறித்த முதல் தேதியிலேயே பிரகடனமாகிச் சரிவர நடைபெற்றுவரும். நம் தமிழ் நாட்டில் "அமிர்த குணபோதினி"க்கு விசேஷித்த மதிப்பும் கௌரவமும் இருந்துவருகின்றது. அது தனக்கென அமைத்துக்கொண்ட ஒரு தனிச்சுவை கொண்டதாய் அமிர்தமயமாய்ப் பரிமளிக்கின்றது. ஆதலின், புதுவருடத்தில் அன்பர்கள் அனைவரும் "அமிர்த குணபோதினி"க்குப் புதிய சந்தாத்தொகைகளை அனுப்பிவைத்து எப்போதும்போல் ஆதரித்து வருமாறு பிரார்த்தித்துக் கேட்டுக்கொள்கின்றோம். இவ்வருடத்தில் நேர்ந்த காலதாமதம் போல் இனி எக்காலத்தும் நேரிடமாட்டாதாதலின் அன்பர்கள் பூர்ணநம்பிக்கைகொண்டு "அமிர்த"த்தை ஆதரிக்குமாறுவேண்டுகிறோம். "அமிர்த"த்தின் ருசிகண்டவர்க்கு "ஆதரியுங்கள்" என்று நாம் சொல்லாமலே அவர்களே முன் வருவார்களென்பதும் நமக்குத் தெரியும். நமது அன்பர்களின் கருணையையும், ஏழாவது ஆண்டின் புது வருஷ சந்தாத் தொகைகளையும் எதிர்பார்க்கின்றோம்.

ஃ

**மணியார்டரில் அனுப்புங்கள்.**

ஏழாவது ஆண்டின் சந்தாத் தொகைகளை இந்த ஸஞ்சிகை பெற்றவுடன் மணியார்டர் மூலமாக

---

*ஒரு அடி முன் வைக்க ஆயிரம் யோசனை யோசிக்கும் பிற்போக்கான புத்தியிருக்கும் வரையில் விருத்தி என்பது அருமையே.*

ஏப்ரல் மாதம் 10-ம் தேதிக்குள்ளாக அனுப்பிவைக்குமாறு கேட்டுக்கொள்கின்றேம். இந்தத் தேதிக்குள் புது வருஷ சந்தாவைச் செலுத்துபவர்களுக்கு நாம் சித்திரை மாதம் புது சந்தாவுக்கு வீ. பி. அனுப்பாமல் பத்திரிகையை வழக்கம்போல் தபாலில் அனுப்பிவிடுகிறேம். அவ்விதம் 10-4-32-க்குள் மணியார்டரில் அனுப்பாதவர்களுக்குப் புது ஆண்டின் ஸஞ்சிகையை வீ. பி.யில் அனுப்பி வைக்கின்றேம். அன்பர்கள் உடனே வீ பி யை ஒப்புக்கொண்டு சந்தாவைச் செலுத்தி ஆதரிக்குமாறு வேண்டுகின்றேம். ஃ

வெளிநாட்டுச் சந்தாதாரர்கட்கு.

வெளிநாடுகளிலுள்ள கையொப்பநேயர்கள் இந்த ஸஞ்சிகை கிடைத்ததும், தங்களின் ஆறுவது வருட சந்தா பூர்த்தியாகிவிட்டதென்று தெரிந்துகொள்ள வேண்டுகின்றேம். அன்னேரிடமிருந்து ஏழாவது ஆண்டின் புதிய சந்தா கிடைத்தபின்புதான் அவர்கட்குச் சித்திரை மாத ஸஞ்சிகை அனுப்பப்படும். ஆகவே, இப்பத்திரிகை கிடைத்தவுடன் புதிய சந்தாவை அனுப்ப வேண்டுகிறேம். அவ்விதம் அனுப்பாமல், புது வருஷத்திய பத்திரிகை தங்கட்குக் கிடைக்கவில்லை யென்று வருந்துவதாகில் அது அவர்களின் குற்றமேயாகும். ஆதலின் 10-4-32-ம் தேதிக்குள் அவர்களிடமிருந்து மணியார்டர்களை எதிர் பார்க்கின்றேம். வெளிநாடுகளுக்கு வீ. பி. கிடையாது.

ஃ

இனி, நமது அன்பர்கள் அனைவரையும் புது வருஷத்தில் சந்திக்கின்றேம். தற்போதுள்ள கையொப்ப நண்பர்களில் ஒருவர்கூட விட்டுப்போகாமல்கஷ்டகாலத்தில் கைகொடுத்து உதவுவதே கண்ணியமென்று கருதி புதுவருஷத்திலும் ஒரே பிடிவாதமாகச் சந்தாதாரராகச் சேர்ந்து "அமிர்த குணபோதினி"யைப் பெற்று இன்புறு

---

சும்மா சும்மா இலவசத்தில் வெட்டிச்சோறு விழுங்கிக்கொண்டு வீட்டில் உட்கார்ந் திருப்போருக்கு நல்ல நினைவுகளும் நற்செய்கைகளும் உண்டாவது அபூர்வம்.

வார்களென்று நம்பியிருக்கின்றோம். “அமிர்த குணபோதினி”யின் இனிமையும் சுவையும் உங்கட்குத் தெரியும். அது தபாலிற் கிடைத்தவுடனே புன்னகையோளிர் வதனமாய் நீங்கள் ஆனந்திப்பதையும் நாங்கள் அறிவோம். அதற்கேற்றவாறு எங்களின் சிறு கல்விக்கும் சிறிய சக்திக்கும் சாத்தியமானவரையில் சிரமம் எடுத்துக்கொண்டு இரவு பகல் உழைத்து எழுதி வெளியிட்டு வருகின்றோம். “அமிர்த குணபோதினி”யின் முக்கால் பாகத்துப் பக்கங்களைத் தாமே அத்தியந்த சிரமத்துடன் பூர்த்தி செய்யும் அதன் ஆசிரியரிடத்து உங்களின் அபிமானம் என்றும் வளர்ந்தோங்கி விளங்குவதாக. பழங்காலத்துப் பத்திராசிரியர்களுள் ஒருவரான நம்மையும் நமது முயற்சியும் புதிய ஏழாவது ஆண்டில் ஆதரித்து, மணியார்டரில் தானே புது சந்தாவைச் செலுத்தி உபகரிக்குமாறு பிரார்த்திக்கின்றோம். புதிய ஆங்கீரஸ வருஷம் இன்பமயமான வருஷமாகவே வெற்றியுடன் விளங்குவதாக.

☞ மணியார்டர்கள் யாவும் சென்னை தங்கசாலைத் தெரு, 302, அமிர்த குணபோதினி ஆபீஸுக்கே நேராக அனுப்பவேண்டும். பத்திராசிரியர் விலாஸத்தில் ஸ்ரீரங்கத்திற்கு அனுப்பி ஆசிரியரைச் சிரமப்படுத்தக்கூடாது. நேராக ஸ்ரீமான் தி. இராஜகோபால் முதலியாரவர்கட்கே மணியார்டர்களை அனுப்ப வேண்டுகின்றோம்.

எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு,

பத்திராசிரியர்.

---

புத்திசாலிகள் மற்றவர்களின் வீட்டிற்கு வந்தால் அந்த எழுதியுள்ள வியாசங்களோ யோசனைக் குறிப்புகளோ கிடந்தால் அவற்றை மெதுவாகப் பார்த்துவிட்டு அதைப்போலத் தாங்கள் எழுதிவிடவோ, அல்லது அந்த வியாசங்களைக்கொண்டு போய்விடவோ முயன்று அப்படியே செய்தும் விடுகிறார்கள்!



சில புத்திசாலிகள் வெகு கபடஸ்தர்களாயிருந்து கொண்டு வெளிக்கு வெகு நேசமாய்க் கொஞ்சுகிறார்கள். வெளியூர்களுக்கும் சென்று அங்கு ஏதோ ஒரு வேலையைப் பிடித்துக்கொள்ளப் பார்க்கிறார்கள். இவர்களின் மதியூக நுட்பத்திற்குச் சிலாகித்தாலும் இவர்களின் கபட குணத்திற்குப் பெரிதும் அஞ்சி இவர்களை அதிகமாகச் சேர்க்காமலே ஒதுங்கிக் கொள்கிறார்கள். கடைசியில் இவர்கள் வெறுங்கையினராகத் தங்கள் ஊர் வந்து சேருகிறார்கள்.




# விசேஷ சக்தியுடன் அமைந்த பலஹீனம்.

“  ரணங்கே! அன்றொரு நாள் உனக்கு ஈந்த இருவரங்களையும் இன்று நான் நிறைவேற்றத் தயார்; ஆனால், பரதன் நாடாள—ஸ்ரீராமன் காடாள என்ற வகையிலின்றி வேறு வகையிற் கேட்டால்தான் தரப்படும்” என்று கண்டிதமான பதிலைத் தசரதர் கைகேசிக்கு ஏன் தெரிவித்திருக்கக்கூடாது? கைகேசியின் வரங்கள் இரண்டையும் தரத் தசரதர் ஒப்புக்கொள்ளினும், புத்திர சோகத்திற்கு இடமின்றி சீதை, லக்ஷ்மணன் இவர்களைப்போல ஸ்ரீராமரைப் பின் தொடர்ந்து ஆரண்யத்திற்குத் தாமும் ஏன் புறப்பட்டிருக்கலாகாது? அங்ஙனம் புறப்பட்டிருப்பின் ராமரின் பிரிவுமில்லை; புத்திர சோகமுமில்லையே. ஏன் அவ்விதம் செய்யவில்லை? என்னவோ தடுக்க முடியாத விசேஷ சக்தியுடன் அமைந்த பலஹீனம் அந்த சந்தர்ப்பத்தில் நேரிட்டுக்கொண்டு தசரதரை எதுவும் துணிந்து செய்யவொட்டாமல் தடுத்து மரணக்குழிக்கு அனுப்பிவிடுகிறது. இந்த விசேஷித்த பலஹீனத்தினின்றும் தன்னை விடுவித்துக்கொள்ள அவரால் முடியாமலே போய்விட்டது. இந்த பலஹீனம் தசரதரை மட்டுமன்று; இந்தப் பெரிய உலகத்தையே ஆட்டிவருகின்றது. வீடு, நிலம், சொத்துக்கள் யாவும் தனக்குக் கிடைக்காதவாறு ரகசியத்தில் ஏற்பாடு செய்துவிட்ட துரோகிகளுக்கே, ஒருவன் காலமுற்றும் உழைத்துத் தன் வருவாயனைத்தையும் அவர்கட்கே செலவிடுகின்றான். அவர்களையே பிராணதாரமாக நம்பியும், அன்பு மனத்தாற் கொண்டாடி விசுவாசித்தும் நிற்பதில், அவர்கள் தனக்கு எவ்வாற்றானும் தீங்கு இழைக்கக்கூடியவர்களல்லவென்று திடமனதாய் நினைத்து விடுகிறான். இவ்விதம் நினைத்து விடுவதிலிருந்தும் உண்டாகின்ற விசேஷ சக்தியமைந்த பலஹீனத்தால் அவர்கள் தனக்குச்

---

ஸ்திரீ புருஷன் என்றிருந்தால் மனம் ஒத்து ஸந்தோஷமாயிருக்க வேண்டும். அவ்விதமின்றி ஊருக்கும் பேருக்கும் வெளிக்குமட்டும் மெய்ப்பித்து உள்ளுக்குள் அன்பும் ஸந்தோஷமும் இல்லாத வாழ்வு என்ன வாழ்வு?

செய்துள்ள படுமோசத்தை இவன் வெகுகாலம் வரை அறிவதே யில்லை. இங்ஙனம் அவனை அறியாமையின் இருட்டிலேயே வைத்து அந்தத் துரோகிகளும் அவன் செலவில் தின்று கொழுத்துத் தங்களை ஆதரிக்கவேண்டியது அவன் தலையில் விழுந்த பாரம் என்பதாகக் காட்டிக் கொள்கின்றனர். அவனை வற்புறுத்தி உதவிகளைப் பெறும் பாத்தியதையையும் கைக்கொள்கின்றனர். பிறகு துரோகிகள் செய்த வஞ்சனையை இவன் உணர்ந்து கொள்ளும்போது, ஹா! இத்தகைய நீசர்கட்கா என் ஸம்பாத்திய மனைத்தையும் செலவிட்டுக் கடனும் பட்டேன் என்று அலறுகின்றான். அது முதல் அவன் விழித்துக்கொண்டு அவர்களிடத்திலிருந்தும் விலகி எச்சரிக்கையாகி விடுகின்றான். அவன் அன்னத்தை நெடுநாள் புசித்த அத்துரோகிகளும் இனி அவனை மயக்க இயலாதெனக் கண்டு கொண்டு நாணித் தூர ஒதுங்கிவிடுகின்றனர். பகிரங்க விரோதிகளு மாகின்றனர். இவ்வாறு ஒருவன் தனது விசேஷ சக்தியமைந்த பலஹீனத்தை யுணர்ந்துகொள்வதனாலும், உணர்ந்து அந்த பலஹீனத்தை உதறித்தள்ளி எழுந்து விழித்துத் தலை நிமிர்ந்து நிற்பதனாலும், தன்னை வஞ்சித்தோரை எதிர்த்து மிதிக்க வல்ல ஒரு புது சக்தியைப் பெற்றுவிடுகின்றான். இந்த விழிப்பு சத்தியவந்தனான அவனுக்குக் கடவுள் காட்டும் ஒரு தனிக் கருணையாகும். மனிதனுக்குக் கஷ்டங்கள் நேருவது இயல்பே யானாலும், அவை நேரும்படி செய்கிறவனுக்கோ என்ன நேருமென்று சொல்ல முடியாது. பொல்லாதது செய்து வாழ்ந்தவன் இல்லை.

ஃ

இவ்விதமே, ஒரு வியாபாரி தன் கையின்கீழ் உள்ளவனை உண்மையாளனாக நம்பிவிடுகின்ற விசேஷ சக்தியுடன் அமைந்த பலஹீனத்தினால் அவன் செய்யும் மோசங்களை யுணராதவனாகவே இருந்துவிட்டு, பிறகு அவன் தான் கொள்ளையடித்தவற்றி லிருந்தும் வேறாக ஒரு தனிக்கடை வைத்துக்கொண்டு விடும்போது, "நம்மிடத்திலிருந்து சிறுகச் சிறுக அபகரித்தல்லவா இவன் இவ்வாறாக ஆனான்" என்பதை யுணர்ந்து கொள்கிறான். தன் கொடிய மனைவியை விட்டு ஒருவன் பிரிய முடியாமைக்கு எது காரணம்? மக்களிடத்துள்ள பாசமென்னும் விசேஷ சக்தியமைந்த பலஹீனத்தால், அக்குழந்தைகளின் பொருட்டாக அவளை விலக்க முடியாதவனாகிறான். தன் கடன் முழுமையும் தீர்த்துவிடுவதாகில் தனது முக்கால்பாக சொத்துக்களையும் இழக்க நேருமேயென்ற பலஹீனத்தில்

---

ஒவ்வொருவனும் விவாகத்தை விரும்புவது போல் லைப் இன்ஷூரன்ஸ் கம்பெனியில் தான் சேர்ந்து கொள்வதையும் விரும்பித் தனது 20-வது வயதிலேயே அதில் சேர்ந்துவிடவேண்டும். அதன் பயன் பின்னுக்குத் தெரியும். இவ்விதம் எவன் செய்கிறானோ அவனே புத்திமான், அவனுக்கே மதிப்பு.

சீக்கிரம் கடனை யொழித்திடாமல் நாட்களைப் போக்குகின்றான். ஒருவன் எவ்வளவோ சாமர்த்தியசாலியா யிருந்தும் எவ்விதமோ நம்பி ஏமாறிவிட்ட ஒரு சங்கதியில், அதன் பொருட்டுத் தான் வழக்கு தொடுத்தால் அது ஜெயிக்குமோவென்கிற சந்தேகத்துடன் மிக்க பலஹீனனாகிறான். அவனுக்கு ஒரு வக்கீல் யோசனைகள் சொல்லி, "உன் கக்ஷி அவசியம் ஜெயிக்கும்" என்று தைரியப்படுத்தவேண்டி யிருக்கிறது. இளையாள் வசமான ஒரு தந்தை தன் மூத்த தாரத்தின் புத்திரனை வீட்டைவிட்டு வெளியேற்ற முடியாமலும், அவனுக்குத் தன் சொத்துகள் கிடைக்காதபடி செய்வதற்கில்லாமலு மிருக்கிற விசேஷித்த பலஹீனத்தால் ஏக்கமடைகிறான். எவ்வளவோ கற்றிருந்தும், எத்துணையோ நூல்கள் இயற்றியிருந்துங் கூட, இன்னொரு புது நூல் வரையுங் காலையில் நினைத்தவாறு எழுதி ஒழுங்குபடுத்திவிடுதற்குப் பொருந்தாமல் தவித்து, இன்னொரு பொழுதை எதிர்பார்த்துக் கடவுளையும் வேண்டுகின்ற விசேஷ பலஹீனம் நூலாசிரியர்களிடத்துக் காணப்படுகின்றது. அதற்கென்று குறித்த வேளை வந்தால்தான் மடமடவென்று எழுத முடிந்து நூலும் பூர்த்தி கொள்கின்றது. இதில் இன்னொன்று; ஒருவர் மற்றொருவருக்கு வியாசங்களை எழுதுதற்கான சிறந்த யோசனைக் குறிப்புகளைக் கொடுக்கின்றார். தாமே அதை எழுத முடிகிறதில்லை. இதுவும் ஒரு பெரிய பலஹீனமே.

ஃ

வெளிப்பகட்டில் மயங்கி மதிமோசமாகி ஓரிடத்தில் தன் பெண்ணைக் கொடுத்துவிட்டு, பிறகு பெண்ணின் க்ஷேமத்திற்காக அந்த மோசப்பாவிகளுக்கு உட்பட்டுப்போக நேருகிற பலஹீனம் சகிக்கொணாதனையாகும். கோபித்துத் தன் பெண்ணை யழைத்து வந்துவிடலாம். வந்து என்செய்ய? அவள் வாழவேண்டிய இடம் தந்தையின் வீடல்லவே? எவ்வளவு கஷ்டப்படுத்திய போதிலும் மறுபடியும் அவர்களிடமே ஒப்புவிக்க வேண்டியுள்ள பலஹீனத்தின் திகைப்பு சாமான்யமானதா? பலநாள் தங்கிப் புசித்து இரண்டு தினங்கட்கு முன்புதான் போய், மறுபடியும் இன்று திரும்பிவந்து உட்கார்ந்து கொள்கின்ற மனைவியின் தாய் வீட்டினரை ஏன் இவ்விதம் அடிக்கடி வருகிறீர்களென்று தடுக்க முடியாததும் ஒரு பெரிய பலஹீனம். இவ்விதமே பலமாய்க் குந்திவிடுகிற மற்றவர்களையும் வெளியேற்ற முடியாமையும் ஒரு விசேஷ பலஹீனம். வாய் திறந்தாலோ வரும் கனத்த விரோதம்! எவ்வளவோ திறனிருந்தும் ஒரு அங்கக் குறைவின் பலஹீனத்தால் தான் எதற்கும்

---

பிரசித்தியைப் பெற்றவர்களின் குழந்தைகள் அந்தப் பிரசித்தியைத் தாங்களும் பெற முயல்வதில்லை. முயல்வோர் பதினாயிரத்திலொருவரே. தந்தை வக்கீலாக யிருக்க, குமாரன் ஜட்ஜியாக இருக்கும் பாக்கியம் அபூர்வமாகத்தான் தென்படுகிறது.

உதவாதவனாகி விடுகிறான்; உதவிக்குப் பிறாது துணையை வேண்டு பவனாகின்றான். எத்தனையோ முயற்சிகள் செய்தும் முன்னேறு வதற்கின்றி பழய தரித்திர நிலையிலேயே கிடக்கின்ற பலஹீனம் கனத்த ஒரு சோதனையன்றோ? தன் பலத்தையும் சக்தியையும் தான் உணராதுள்ள பலஹீனமானது இயற்கையில் பொருந்தி நிற்கும் சக்தியையும் போக்கி விடுகின்றது. பிறர் தனக்குள்ள சக்தியை ஞாபகப்படுத்தித் தூண்டுதல் செய்ய, அதன் மேல் தன் திறனை அறிய முடிகின்றது. அனுமார் இவ்வளவு பெரிய ஸமுத்திரத்தை எவ்விதம் தாண்டி இலங்கை சேர்வதென்று திகைக்கையில், அவரது சக்தியை ஜாம்புவந்தர் தெரிவித்த பின்னர்தான் தன்னால் கடல் கடக்கக்கூடுமென்று அனுமார் துணிபுற்றனராம். தன் சாமர்த்தியத்தை மறந்த பலஹீனத்தில் ஒருவனது துணையை எதிர்பார்க்க நேர்ந்து, அந்த சமயம் அந்தத் துணை கிடைக்காமலாகிவிடும்போது, சரி, எவர் துணையும் வேண்டாம், நானே செய்து முடிக்கிறேன் என்று தைரியப்பட்டு விடுகிறான். அந்தத் தைரியம் அவன் எண்ணிய வேலைகளைப் பிறர் உதவியின்றிச் செய்து முடித்து நிறைவேற்றி விடுகின்றது. இது தன் பலஹீனத்தை உதறி யெறிந்து தன் சக்தியைக் கண்டுகொண்டு அதை முற்றிலும் நம்பியவனுடைய புது வாழ்வாகும்.

ஃ

தான் லஞ்சம் முதலியவற்றில் கை நனைத்துத் தவறு புரிந்து வேலையை இழந்து விட்ட பெரிய பலஹீனமானது வேறு வேலை தேடிக்கொள்ள முடியாமலும், குடும்பத்தை ஸம்ரக்ஷிக்கக் கூடாமலும் திகைத்துத் தவிக்கச் செய்கிறது. ஒற்றுமை கெட்ட குடும்பத்தை ஒன்றுபடுத்த முடியாத பலஹீனம் ஒரு பெரிய கண்ராவி. தான் எதிர்த்துப் பகைத்தவனின் முன்னிலையிலேயே பாயும் படுக்கையுமாகி, தனக்கு உரியதெனக் கைப்பற்றியவற்றை யெல்லாம் அநுபவிக்க முடியாமல் பிராணனும் பிரியவேண்டியதான ஸ்திதிக்கு வந்து விடுகிற பலஹீனம் ஒரு சித்திரவதைக்கு ஒப்பானதாகும். தன் அந்தரங்கங்களை யெல்லாம் தன் கக்ஷி வக்கீலுக்கு அறிவித்து விடுவதில், அவருக்கு அவன் மீது இளப்பமும் அலக்ஷியமாய் விடுகிறது. பிறகு தன்னை மதிக்காது கேவலப்படுத்துகிற தன் வக்கீலைத் தன் சங்கதிகளை யெல்லாம் அவர் அறிந்திருக்கிறாரென்று கலங்குகிற பலஹீனத்தால் எதிர்த்துக்கொள்ள முடியாமலாகி விடுகிறது. 'நீ பிழைக்க மாட்டாயாம், வைத்தியர் இரண்டு தினங்கள் தான் தவணை வைத்திருக்கிறார்' என்று மற்றவர்கள் கூறும்போது

---

கொண்டவனும் கொடுத்தவனும் சண்டையிட்டால் மூன்றாவது மனிதன் நடுவில் உள்ளே நுழைய இடமுண்டாகிறது. அவனுக்குத் தடபுடலாக நல்ல விருந்தும் நடக்கிறது, அது அவனைப் பிடித்த அதிர்ஷ்டகாலம்!

அதையும் கேட்டுக்கொண்டு மரணப் படுக்கையிற் கிடப்பவனின் பலஹீனம் அத்யந்த துக்ககரமானது. தான் ஒருவனது ஒழுக்கத் தவறைப்பற்றிச் சந்தேகித்திருக்க அவனே திரும்பத் திரும்பத் வீட்டிற்கு வருகையில், அவனுலும் சில காரியங்களைச் சாதித்துக் கொள்ள வேண்டியிருக்கிற தனது பலஹீனத்தால், அவனை வர வேண்டாமென்று கண்டிதமாய்த் தடுத்து விடுவதற்குக் கூடாம லாகிவிடுகிறது. வீட்டிற்கு வருகிற விருந்தாளி வரும்போதெல்லாம் பெரிய மிட்டாய்ப் பொட்டணத்துடன் வருவதனுல், அவனை எவ்வளவு கசப்புடனுவது கவனித்து உபசரிக்கவேண்டிய பலஹீனத் திற்கு உள்ளாகும்படி சம்பவிக்கிறது. சிலர் எவ்வளவோ சக்தியும் மதியூகமும் பெற்றிருந்தும் அவர்களின் சோம்பற்றன்மையினது பலஹீனத்தால் எதையும் செய்தோ—எழுதியோ முடிக்க வல்லமை யற்றவராகின்றனர். ஃ

தன்னைத் தொடர்ந்து பற்றும் பால்ய க்ஷயத்தாலும், தீராப் பிணியின் கொடுமையாலும் ஏற்படுகிற பலஹீனத்தால், தனக்கு எவரும் பெண் தராதுபோக, தனது ஏராளமான சொத்துக்களை மனைவி மக்களோடும் கூடி வாழ்ந்திருந்து அனுபவிக்க முடியாமற் போய் விடுகிறது. மோசக்காரனென்று தன் வேலையாளைத் தெரிந் திருந்தும், தனது பல அந்தரங்கங்களை அவன் எங்கு வெளியிட்டு விடுவானேவென்று அஞ்சுகிற பலஹீனத்தால் அவனை வேலையிலிருந் தும் நீக்கக்கூடாமல் தவிக்கும்படியாகிறது. தனக்குப் புத்திரப் பேறில்லாத பெரிய பலஹீனத்தால் விசுவாசமற்ற நாய்களுக்கும் தாயாதிகட்கும் தனது சொத்தைச் சேர்ப்பிக்க வேண்டியிருக் கிறது. அவரின்றி அக்காரியம் முடியாதென்று அறிகிற பல ஹீனத்தால், அவர் அன்பற்றவரென்று தெரிந்துங் கூடத் தன் காரியத்துக்காக அவருடன் சுற்றித் திரிய வேண்டியிருக்கிறது. எவ் வளவோ திறமை யிருந்தும் வியாபாரமாகாமையினுல் தவிக்கும் பல ஹீனமானது பிறரிடத்தில் வேலை செய்து ஜீவிக்கும்படி வைக் கிறது. பிறருக்குச் செய்தால் அங்கு விர்த்தியாகிறது; தனக்குச் செய்து கொண்டால் அது தலையெடுப்பதில்லை. மரித்தோருக்குச் சம மாக இன்னெருவரைப் பெறமுடியா திருப்பதும் ஒரு பெரிய பலஹீ னம். ஒரு சமயம் பெற்றுலும் முன்னது போல் இருப்பதேயில்லை. காலஞ்சென்ற தன் உடற்பிறப்பான அக்காபோல், இந்த புதிய உறவு அக்கா ஆகிறதில்லையாதலின் ஏமாறவே நேர்கிறது. ஒரு காலத்தில் ஆபத்ஸகாயராயிருந்து உதவினோர், பிறகு எத்த னையோ கடிதங்கட்கும் பதில் எழுதாது முற்றிலும் அன்னியர்போ

---

பிராணிகளைச் சித்திரவதை செய்து கொன்றே மாமிசத்தைப் பெற வேண்டுமென்பதைப் பாலர்பாலிகைட்கு விவரித்துக் கூறின், அவர்களின் தூய்மையான உள்ளம் மாமிச ஆகாரத்தை வெறுத்து விடவும் கூடும்.

லாகிவிட, அவர்களைப் பழயபடி திருப்பிக்கொள்ள முடியாதிருக்கிற பலஹீனம் மிக்க ஏக்கமானது. இவனுக்கு உதவி செய்வதில் தங்கட்கு என்ன லாபமென்று அவர்கள் நினைத்துவிட ஆரம்பிப்பதால், அப்படிச் சுயநலமாய்ப் பேதப்பட்டவர்களைத் திருப்ப முடியாது போய் விடுகிறது. தொடர்ந்தாற்போல் மனைவி மாள, ஒரே குழந்தையும் சாக, தனது வேலையும் போக—இங்ஙனம் நேரும் விதிவசத்தைத் தடுத்துக்கொள்ள முடியாததும் ஒரு பரிதாப பலஹீனம். தான் தேடிக்கொண்ட ஒரு கொடிய பிணியிலிருந்தோ, தான் வகை மோசமாய் ஏமாறிக் கையெழுத்திட்டு அகப்பட்டுக் கொண்டதிலிருந்தோ ஏற்படுகிறபலஹீனமானது அவனை வெகுபாடு படுத்தி விடுகின்றது. தன்னைச் சூழ்ந்துள்ள நேசர்கள், அறிமுகஸ்தர்கள், பந்துக்கள் முதலானோர் தன் ஆபத்து நாளில் உதவார் என்று தெரிந்துங்கூட, அவர்களையே சுற்றிக்கொண்டு நிற்க வேண்டியதாயுள்ள வேறு விதியில்லாத பலஹீனத்தை எங்கு சென்றுதான் கதறுவதோ!

ஃ

தனக்கு எவ்வளவோ கல்வித்திற னிருந்தும் பரீக்ஷைகளில் பல முறை தவறிவிடுகிற பலஹீனத்தை யொருவன் பெறுகிறான். அந்தப் பலஹீனம் அவனுக்கே வியப்பாகின்றது. ஸகல தர்மங்களையும் உணர்ந்திருந்தும், தன் மனத்தை யடக்க முடியாத பலஹீனத்தினால் தீயதிலேயே தன் சிந்தையைச் செலுத்திக் கெடுகின்றான். ஆத்திர புத்தியின் பலஹீனத்தால் ஒவ்வொன்றிலும் யோசியாமற் செய்து அகப்பட்டுக்கொண்டு திண்டாடுகிறான். தன்னை எதிர்க்கும் மனைவியைத் தக்கவாறு சிக்ஷிக்கும்படி கடவுளை வேண்டிக்கொள்ள முடியாதிருக்கிற பலஹீனம் மிக்க விசித்திரமானது; தன் பிரார்த்தனையின்படி மனைவி கடவுளின் சோதனைக்குட் பட்டால் தானும் அந்தத் துன்பத்தைப் பங்கிட்டுக்கொண்டு நுகரவேண்டி யிருப்பதில் அவ்விதம் பிரார்த்திப்பதற் கில்லாது திகைக்கும்படியாகிறது. அனுபவ மின்மையால் உண்டாகிற பலஹீனமானது எத்துணையோ கற்றவனையுங்கூட ஏது மறியாதவனாக்கி விடுகிறது. வைத்தியரிடமும், வக்கீலிடமும், தனது கார்டியனிடமும் அகப்பட்டுக்கொண்ட பலஹீனமானது எவ்வளவோ தவிப்பில் வைக்கிறது. தமிழ்மட்டுமே கற்று, ஆங்கிலத்தில் தேர்ச்சி பெறுவதற்கில்லாத பலஹீனத்தால் ஒருவன் பல சௌகரியங்களை இழந்துவிடுகிறான். கணவனை யிழந்த பெண்ணின் உலக சுகங்கள் பயனற்றுப்போய்விடுகிற பலஹீனம்

---

வெற்றிலை, பாக்குச் சீவல், சுண்ணாம்பு, புகையிலை உபயோகிப்போரை B. A., L. T. என்று சொல்லலாமாம்! எவ்வாறெனில், B-என்றால் Betal-வெற்றிலை ; A-என்றால் Arecanut-பாக்குச் சீவல் ; L-என்றால் Lime-சுண்ணாம்பு; T-என்றால் Tobacco-புகையிலை, இந்த நான்கு பதங்களின் முதல் எழுத்து சேரில் B. A., L. T. ஆகுமாம்!

பட்டவரே யறிவார். படித்தவர்கள் படியாதவர்களுடன் வாழ்க்கைப்பட்டுப் படும் பாட்டின் பலஹீனத்தை எவ்விதம் நிவர்த்திப்பதோ? துஷ்டனான பர்த்தாவினிடம் அகப்பட்டுக்கொண்ட பெண்மணியின் பலஹீனமும் விதிவசமே. எவ்வகையிலும் தன் துன்பங்கட்கெல்லாம் தற்கொலையே பெரிய நிவர்த்தி என்று கருதிவிடுகிற பேதமையின் பலஹீனமானது அவனது உயிரை இழக்கச் செய்துவிடுகின்றது. மல—ஜல—காமாதி சேஷ்டைகளை யடக்கமுடியாதிருப்பதும் ஒரு பெரிய பலஹீனம். ஒருவன் ஒரு பொருளை விற்பனையாக்கிவிடுவதில் விசேஷ சாமர்த்தியம் பெற்றிருக்க, மற்றவனுக்கோ அந்த சாமர்த்தியம் சித்திக்காத பலஹீனத்தால் அவன் பொருள் விலையாவதில்லை. முதல் தாரத்தினது உயர்வை, இரண்டாந்தாரமாக வந்தவள் பெற முடியாதவளாகிறாள். இதுவும் ஒரு விசேஷ சக்தியமைந்த பலஹீனமே. தன் கணவனுக்கு எவ்வளவோ பேர் உதவிபுரிவோரா யிருந்திருக்க, தன் கணவனுக்குப்பின் அவர்களின் உதவியைத் தானும் அவ்விதமே பெறுவதற்கில்லாமலாகிவிடுவதும் ஒரு திகைப்பான பலஹீனம்தான். "அவருக்குச் செய்தார்கள், எனக்கும் அப்படிச் செய்வார்களா?" என்று ஏங்குகிறாள். அவரிடத்து மற்றவர்கள் வைத்த மதிப்பாலும் அன்பாலும் உதவிகள் செய்திருக்கலாம். அந்த மதிப்பு அவரது மனைவியாகிய இவள்மீது மற்றவர்கட்கு உண்டாவது மிகவும் அரிதே. தமது மனங்கவர்ந்த ஒருவர்மீது வைத்த அன்பை அவரைச் சேர்ந்தோர்மீதும் வைப்பதென்பது உலகில் அபூர்வமாகவேவுள்ளது. அந்த ஒருவர்மீது தாவிய மனம் அவ்வளவு வேகமாய் அவரைச் சேர்ந்தோர்மீது பற்றித் தாவுவதில்லை.

ஃ

சுவீகாரம் செய்துகொண்டு, பிறகு சுவீகார புத்திரனின் தந்தையிடம் விரோதப்பட்டுக்கொள்ள, அவன் தன் குமாரனைத் தன்னிடம் அழைத்துக்கொண்டு பகையாகிவிட, அந்த சுவிகார புத்திரனை உதறிவிட்டு இன்னொருவருக்குத் தனது சொத்துக்களை ஒப்புவிக்க முடியாமற்போகிற பலஹீனம் பெருமூச்சு விடத்தக்கதே. புருஷனைவிட்டு மனைவியும், மனைவியைவிட்டுக் கணவனும் பிரியமுடியாத பலஹீனம் விவாகமுடிச்சால் ஏற்பட்டதாகும். தான் விலகிக்கொண்டால் தனக்குள்ள மதிப்பு கெட்டுவிடுமென்ற கவலையின் பலஹீனத்தால் கூட்டு வியாபாரத்தை விட்டுப் பிரிய முடியா

---

ஒரு புஸ்தகத்தையோ, பத்திரிகையையோ படித்து விட்டீர்களா என்றால், ஓ! அப்பொழுதே ஆய்விட்டது என்கிறார்கள். பிறகு அவற்றிலுள்ள இன்னின்ன விஷயங்கள் எவ்வெவ்வாறிருந்தனவென்று கேட்கப் புகுந்தால் அதற்கு விடை கூறத் தெரியாது விழிக்கிறார்கள். இவர்கள் படித்து விட்ட லக்ஷணம் அவர்களின் முகத்திலும் கள்ள விழிப்பிலுமே தெரிந்து விடுகிறது.

மல் சேர்ந்திருக்கவே நேரிடுகிறது. நீந்தப் பயிற்சிபெருத பலஹீனத்தால் ஜலத்திலமிழ்ந்து ஆவி துறக்கும்படியாகிறது. எவ்வித சொத்தும் படைக்காமையும், அல்லது இருந்த சொத்து போய்விடுவதும், வேறு புதுசொத்து கிடைக்காமையுமான பலஹீனத்தால் இழிநிலை வாழ்க்கை பிராப்தமாகிறது. பிறந்ததெல்லாம் பெண்ணுகி, ஆண் குழந்தை யில்லாதுபோன பலஹீனத்தால் ஏராளமான சொத்துக்களிருந்தும் திருப்திகொள்ள முடிகிறதில்லை. தந்தைக்குரிய சாமர்த்தியம் மகனுக்கு இல்லாத பலஹீனத்தால் தந்தை தேடியவற்றை வைத்துக்கொண்டு புசித்துக் கையாலாகாதவனுய்க் காலந்தள்ள வருகிறது. வித்வான் பிள்ளை மூடனும், வைத்தியன் பிள்ளை நோயாளியாயும், பஞ்சாங்கப் பார்ப்பனர் வீட்டில் பத்தெட்டு கைம்பெண்களாகவும் ஆகிவிடுவதில் ஏற்படுகிற பலஹீனமும் மிகு பரிதவிப்பே! பெண்களுக்கு சுபாவமாகவே அமைந்துள்ள விசேஷ பலஹீனத்தால் துராத்மாக்களின் பலாத்கரிப்பிலிருந்து தப்பித்துக்கொள்ள முடியாமற் போய்விடுகிறது. தான் புதிதாய் நயமான விலையில் வாங்கிய வீடு, நிலங்களின்மீது ஏற்பட்ட கடன்களை யெல்லாம் பிறகு வரும் வருமானங்களைக்கொண்டு அடைத்துத் தீர்த்துச் சமாளித்துவிடக்கூடிய சக்தி தனக்கு இருந்தும், அதற்கான ஆயுள் பாகமில்லாமற் போய்விடுகிற பலஹீனத்தால் தேடிய சொத்துக்கள் பட்ட கடனுக்குச் சரியாகி யாவற்றையும் இழந்துவிட விதிவசம் வாய்க்கின்றது. மூடத்தனமாய் முடித்துக்கொண்ட விருத்த விவாகத்தில் தனது வாலிபமனைவியைத் திருப்தி படுத்த முடியாமையும் தனது சக்திக்கு மீறிய ஒரு விசேஷ பலஹீனம். தனக்கு வேண்டியவர்கள் தன் அருகிலில்லாத தூரத்திலிருக்கும் பலஹீனத்தால் அவன் இறக்குந் தருணத்தில் அவன் வாயிற் பால் ஊற்றுவதற்குக்கூட அன்பானவர்கள் சமீபத்தில் இல்லாமற்போக நேர்கிறது. கோப ஆத்திரங்களைச் சகிக்க முடியாத பலஹீனத்தால் கொலை படுகாயங்களைச் செய்து கைதியாகும்படி ஸம்பவிக்கிறது. ஒரு செய்கைக்கோ, பிறரின் வற்புறுத்துதலுக்கோ மறுக்க முடியாத பலஹீனத்தால் ஜாமீன் கையெழுத்து, விபசாரம், நன்றித்துரோகம் முதலியவற்றில் சம்பந்தப்பட்டு—சர்வநாசமடையும்படியாகிறது. கற்காது போய்விட்ட பலஹீனத்தால்—"கீறல்" கோடு போடும்படியான கேவலம் வாய்க்கிறது. கடைசியாக, மறதியினுடைய விசேஷ சக்தியமைந்த பலஹீனத்தால் நேரும் துன்பங்களையும், தொல்லைகளையும் எண்ணிடவுங் கூடுமோ?

ஃ

இவ்வாருக, விசேஷ சக்தியுடன் அமைந்த பலஹீனத்திற்காளாயினேர் அதனின்றும் விடுதலைகொள்வது எவ்வாறென்பது வினு? சிலவற்றிற்குத் தனது இடைவிடாத முயற்சியாலும், ஊக்-

கத்தாலும், காலானுகூலம் சித்தித்தலானும் ஒருசமயம் விடுதலை கிடைக்கலாம். சிலவற்றிற்கு மற்றவர்களால் தெளிவுபடுத்தப் பட்டு அந்தப் பலஹீனத்திலிருந்தும் எழுந்து புதிய விழிப்பைப் பெறலாம். பின்னும் சில கடவுளின் கருணையால் நிவர்த்திக்கப் பெறலாம். வேறு சிலவற்றிற்கு எவ்வித விமோசனமும் இல்லா மலே போய்விடலாம். என் செய்வது? அத்தகைய சந்தர்ப்பத் தில் பின்வரும் பாடல் நன்றாகப் பொருந்துதல் கூடும்போலும்.

"ஆழவமுக்கி முகக்கினு மாழ்கடனீர்
நாழி முகவாது நானாழி—தோழி
நிதியுங் கணவனு நேர்படினுந் தந்தம்
விதியின் பயனே பயன்."

## அரிச்சந்திர சரித்திர போதனை.

இந்தக் கதையில், பெரியோர் சொல்லைக் கேட்பது கடனென்பதும், தவ முதலியவற்றைச் செய்தல் அவமாகா தென்பதும், புத்திர பாக்கியமே சிலாக்கிய மென்பதும், நீதி மன்னர் செங்கோல் செலுத்துவது இன்னவா றென்பதும், சற்பாத்திர மறிந்து தானஞ்செய்தல் வேண்டு மென்பதும், உயிர் அழிகிறதாக வரினும் பெரியோர் தாம் சொன்ன வண்ணஞ் செய்யத் தவறாரென்பதும், மலை சலிப்பினும் திடன் மிக்கோர் மனஞ்சலியா ரென்பதும், நல்லார்க்கு நல் லார் துணை செய்வது திண்ணமென்பதும், தெய்வம் நல் லோரைப் பல்லோருமறியப் பரிசோதித்து அவர்களுக்குப் பெரும் புகழை அளிக்கு மென்பதும், குல மகனும், குலக் கொடியும் எவ்வாறான இடுக்கண் வந்துற்ற விடத்தும் உயிரு முடலும் போல இனிதுற்று வாழ்ந்திருப்ப ரென்பதும், நன் மக்கள் தம் தந்தை தாயரை எந்நாளும் மகிழ்ந்திருக்கச் செய்வரென்றும், பரோபகாரம் பெரிதென்பதும், விதி வலி தென்பதும், பெரியோர் கொண்ட கோபம் தணியாதிரா தென்பதும், இன்னும் இவைபோன்ற பல நீதிகளும் நன்கு விளங்குகின்றன வெனினும், மெய்யே வெல்லும் என்பதே இதன் முழு நோக்காம்.

ஒருவன் நன்றாக வாழ்ந்தபோது சுரண்டி ஜீவித்தவர்கள் பின்பு அவனது வாழ்வு கெட்ட காலத்தில் திரும்பிப் பார்ப்பதேயில்லை. கேவலப்படுத்தாதிருந் தால் அதுவே பெரிய கௌரவம்.

# நோயாளிகளைக் கவனித்தல்.



நோயாளிகளை நடத்தும் வகைகளில் தேர்ச்சி பெற்றவர்கள் வெகு சிலரே யாவர். பெரிய பெரிய டாக்டர்கள் கூட இந்தத் தேர்ச்சியில் தவறிவிடுகின்றனர். அவர்களின் அகங்கார சிந்தையாலும் பதவிச் செருக்கினாலுங்கூட இது நேர்வதுண்டு. தங்களுடைய நடத்தைகளும் மனோபாவமும் நோயாளிகளை உபசரிக்க வேண்டிய செயலுக்குத் தக்கவையோ என்பதை வெகு பேர் ஆலோசிப்பதில்லை. உள்ளுக்கு மனக்கசப்புடன் வெளிக்குத் தித்திக்கவே பேசி ஒப்பாரித்தனமான உபசாரம் செய்பவர்களுமுண்டு. தன்னைச் சேர்ந்தவர்களுக்குப் பிணி வரின் அதைச் சிரத்தையுடன் கவனிப்பதும், மற்றவர்களுக்கு நோய் உண்டாகில் அலக்ஷியமாய் நடப்பதும் பலரிடத்துங் காணும்சங்கதி. இவ்விதம் வேண்டுமென்றே கோணலாக நடப்போர் ஒருபுறமிருக்க, தங்களின் அறியாமையால் தவறு இழைக்கும் பேதைகளும் மற்றொரு சார் இல்லாமலில்லை. முக்கியமாக அருவருப்பும் வெறுப்பும் அடையத்தக்க தன்மை யுடையவர்களும், சாந்தமில்லாதவர்களும் ஒருபோதும் அந்தத் தொழிலுக்கு உதவ மாட்டார்கள்.

ஃ

நோயாளிகளுக்கு உயிர்த்தோழர்களாய், நெருங்கிய உறவினர்களாய், உடன் பிறப்பாய் இருப்பவர்கள் அதிக ஆதாவு கொண்டு செம்மையாய் உபசாரம் செய்யத் தொடங்குகிறார்களானாலும், அவர்கள் அதிகமாகப் பயந்துபோன தன்மையைக் காண்பித்துக் கொள்வதில், பிணியாளியின் தைரியத்தை அடியோடு போக்கிக் கலங்கப் பண்ணி விடுகிறார்கள். பிணியாளி பிழைப்பது கஷ்டம் என்று தங்களுக்குள் பேசிக்கொள்ள, அதைப் படுக்கையிலுள்ளவன் கேட்டதும் பாதிபிராணன் போய் விடுகிறது, பிறகு அந்த ரோகத்தைத் தீர்ப்பது வைத்தியர்களுக்குக்கூட அசாத்தியமாய்ப் போகிறது. "நீ இன்னும் மூன்று நாட்களுக்குத் தான் இருப்பாயாம்; வைத்தியர் சொன்னார்" என்று தன் கணவனின் காதில் ஒரு பெண் உறக்கக் கூறினாள், ஐயோ! இசனினும் விஷச்சொல் வேறு வேண்டுமா?

ஃ

தன் பிள்ளை பாயில் படுத்துக் கொண்டு பிராணனுக்கு மன்றாட, அது கண்டு தாய்தந்தையர்கள் கண்ணுங் கண்ணீருமாய் நிற்பது எத்தனை! தன்னை நிமிர்ந்து கண்ணெடுத்துக்கூடப் பார்க்கமாட்டாமல் கணவன் குத்துயிராய் அல்லாட, மனைவி மனம் நொந்து நிற்பதெத்தனை! இத்தன்மையான சோகச்செய்திகளால் பிணியாளியின் மனமும் அதற்கு உட்பட்டு தைரியங் குலைந்து பலவீனப்படுமென்பதற்குச் சந்தேகமுண்டோ? ஆதலால், வியாதியை விலக்குவிக்க வேண்டுமென்று வாஸ்தவமான விருப்பமுள்ளவர்கள் அடக்கமும், அமைதியும், பொறுமையும்,

---

ஒருவரைப்பற்றிச் சரியாகவோ தப்பாகவோ ஒரு அபிப்பிராயம் பரவி விடுகிறது. அந்த அபிப்பிராயபலத்தில் உண்மையும் மறைந்து விடுகிறது.

தைரியமும் பெற்று, பிணியாளிகளைப் போற்றும் விதங்களையும், அவர்களுக்குச் செய்ய வேண்டிய காரியங்களையும் கொஞ்சம் தூரமாவது நன்றாய்க் கற்றுணர்ந்திருக்கவேண்டும். மேலும் ரோகிகளுக்கு அப்போதைக்கப்போது தேகத்திலுண்டாகிற உபாதிகளை நன்றாய்த் தவறாமல் ஆராய்ந்து அறியத் தக்க தன்மையுடையவர்களாய் இருக்கவேண்டும். அப்படிப்பட்டவர்கள் தான் தங்களால் இயன்றமட்டும் நோயாளிகளுக்கு உதவலாம். பலவிடங்களில் பிணியுற்றவர்களுடன் கூட இருந்து பட்டுப் பரிசோதியாமல் அனுபவத்தில்தேர்ச்சியுண்டாகுமோ?

ஃ

"ஐயோ! அவன் நாலு மாதமாக வியாதியாகக் கிடக்கிறான், வந்து பார்க்கவில்லை யென்று சொல்லுவார்கள், போய் ஒருதரம் பார்த்து விட்டு வந்து விடுவோம் வா" என்று ஒருவருக் கொருவர் பேசிக் கொண்டு கூட்டமாய் வந்து வியாதியஸ்தனைப் பார்த்துவிட்டு, "ஏதேது பிழைப்பது கடினம்" என்று அங்கேயே பேசிவிட்டு விடை பெற்றுப் போவதுதான் பந்துக்களில் வெகுபேர் செய்யும் சங்கதி. பிறகு இவர்கள் மறுபடி வருவது வியாதியஸ்தனின் மரணம் கேட்ட பிறகு தான். ஒரு சமயம் தப்பிப் பிழைத்துக் கொண்டாலோ "ஹ! எப்படித்தான் பிழைத்தானோ அம்மா" என்று வியப்புறுவார்கள். இவ்வளவே இவர்கள் செய்யும் ஒப்பாரி உபசாரம்!

ஃ

உலகத்தாரனைவரும் தங்கள் தேகத்தில் மிகவும் அற்பமான தலை நோய் முதலிய உபாதி நேர்ந்தாலும் அதற்குக்கூட அயலான் கையை எதிர்பார்த்திருப்பது எவ்வளவு குறைவாயிருக்கிறது? அப்படியிராமல் ஒவ்வொருவரும் எளியநோய்கள் உண்டாவதற்குக் காரணம் இன்னின்னதென்பதும், அவைகளைத் தீர்க்கும் உபாயங்கள் இவை யென்பதும் அறிந்திருந்தால் எவ்வளவு நலமாயிருக்கும்? வைத்திய சாஸ்திரத்தில் அனைவரும் பெரிய பண்டிதராயிருக்க வேண்டுமென்பதாக நாம் சொல்ல வரவில்லை. தேகத்தில் ஒரு அரிப்பு உண்டாக, அதைக்கையால் சொறிந்து கொண்டதும் குணப்படுவதில் அது கூட ஒரு வைத்தியமுறைதான். தங்களனுபவத்திலேயே தமது தேகக்கூறு இப்படிப்பட்டதென்றுதெரிந்துகொண்டு அதற்குத் தக்கவை இவையென்பதும், தகாதவை இவை யென்பதும் அறிந்து தக்கவைகளை உபயோகித்துத் தகாதவைகளை நீக்கி வருவார்களாயின் உலகத்தில் வியாதிகள் விசேஷமாய் ஏன் உண்டாகும்? விதிவசத்தால் ஒருக்கால் சம்பவித்தாலும் அவை எளிதில் நீங்கி விடுவதாயிருக்க, அவ்வழி தெரியாமையாலும் உபேக்ஷையாலும் அவைகளை வளர்த்துகிறார்கள். பிறகு இது விபரீதமாய் முடிகின்றது. வைத்தியர்களென்போரில் பலர் முதன் முதலிலேயே நல்ல மருந்துகள் தருவதில்லையென்பது ஒருபெரிய வைத்திய ரகசியம். பல உபயோகமற்றவை தந்து, தாங்கள் மிக்க பிரயாசைப்பட்டது போல் காண்பித்துக்கொண்டு, பிறகே வியாதியைக் கண்டிக்கத் தக்கதான சரியான மருந்தைக் கொடுக்கிறார்கள். இது வயிற்றுப் பிழைப்புத் தந்திரம். பத்திரிகைகளில் பிரசுரமாகும் மருந்

---

தனக்குப் பிடிக்காத ஒரு பெண் தன் மனைவிடம் பேச அடிக்கடி தன் வீட்டிற்கு வருவதை யொழிப்பதற்கு ஒருவர், தான் அப்பெண்ணிடம் காமுற்ற மனிதர்போல் உர் என்று சதா அவளை நோக்கி அபிநயித்தாராம். அவளும் அஞ்சிவரா தொழிந்தாளாம்!

துகளில் சில குணமிருந்தாலும் ஒரு டப்பி, ஒரு புட்டி மட்டும் வரவழைப்பதில் குணம் ஒருபோதும் ஏற்படாது. முதலிலேயே மூன்று டப்பி, புட்டிகளுக்கு எழுதித் தருவித்தால் தான் குணம் காண இயலும். இது பத்திரிகா பிரசுர கேட்லாக் மருந்துகளின் வியாபார ரகசியமாகும்.

ஃ

முக்கியமாய் ரோகஸ்தனைக் கவனிக்க வேண்டிய காலம் இரவு வேளைதான். எந்த ரோகமும் பகலில் அவ்வளவு உபாதி செய்யாது. மாலைப் பொழுது சென்ற பிறகே பிணியின் உக்கிரகமும் ஆரம்பமாகும், இரவு போவது ஒரு பெரிய யுகமாக இருக்கும். இரவு முற்றும் விழித்திருந்து வியாதியஸ்தனைக் கவனிப்பது தான் பிரதானமான வேலை. பிராணன் போவது கூட இரவிலேயேதான் அதிகம். நன்றாகத் தூங்கிவிட்டுப் பிறகு அந்த வியாதியஸ்தனைத் தொட்டுப் பார்த்து அசைக்க அவன் சவமாயிருப்பதைக் கண்டு அலறியவர்களும் பலருண்டு. ஆகவே, இரவு முற்றும் விழித்திருப்பது ஒரு பெரிய மகா முக்கிய சங்கதியாகும்.

ஃ

அருவருப்பும் கூச்சமும் மன நெகிழ்ச்சியுமில்லாமல் எப்படிப்பட்ட காரியத்தையும் தைரியமாய்ச் செய்யத் தகுந்தவர்களே நோயாளிகளை உபசரிக்க உதவுவார்கள். அருவருப்பு உண்டாக்கத்தக்கவை எதைப் பார்த்தாலும் அவர்களுக்கு மனதில் கலக்கமுண்டாகாமலிருக்க வேண்டும். வைத்தியர் சொல்லுவதைத் தடையில்லாமல் நடத்தத் தகுந்தவர்களாயிருக்கவேண்டும். உபயோகமில்லாத வீண் கேள்விகள் கேட்கக் கூடாது. வைத்தியர் சொல்லுவதிற் சந்தேகமுங் கூடாது. அப்படிப்பட்டவர்கள் தாம் பிணியாளிகளுக்குத் தக்க உதவியாவர்கள்.

ஃ

ஆனால் பல இடங்களில் நாம் காண்பதென்ன? வைத்தியர் சொல்வதைச் சரியாய்க் கேட்பதில்லை. தங்கள் மூடபுத்திக்குத் தோன்றிய வீண் ஆக்ஷேபங்களையெல்லாம் பேசி எதிர்க்கிறது. வைத்தியர் சொல்லிவிட்டுப் போனதையும் சரியாய் நடத்துகிறதில்லை. இத்தன்மையானவர்கள் நோயாளிகளண்டை வரக்கூடுமா?

ஃ

சிலர் நோயாளிகள் பசித்துத் தவிக்கும்போது சோறிடுகிறதில்லை; சோற்றில் அபேக்ஷை யில்லாதபோது தின்னும்படி பலவந்தம் செய்கிறது. பக்கத்திலிருந்து அவர்களைத் தாங்க வேண்டிய காலங்களில் கூவின குரலுக்கு ஏனென்று காத்திராமல் தமக்குத் தோன்றியபடி எங்கேயாவது போய் விடுகிறது; அல்லது அந்த சமயம் வீட்டில் ஒரு கலகம் நேர்ந்து கொண்டு அதில் கோபம் துள்ளிப் போய் நோயாளி எவ்வளவு கதறியும் கவனிக்காமலே தூர இருந்து விடுகிறது. வீட்டுக்காரன் பாயிற் படுத்து வாதனைப்படுகையில் அவனோடு கடும் போரிட்டு வேளையறிந்து கஞ்சிதராமல் பக்கத்து வீட்டிற்குப் போய் உட்கார்ந்து விடும் சண்டாளமனைவிகளுமுண்டு. பின்னும் ரோகஸ்தர்கள் அயர்ந்து படுத்திருக்கும் காலத்தில் நச்சு நச்சென்று எழுப்பிப் பேசி வேதனைசெய்வோரும் பலர். இத்தன்மையான துர்க்குணங்கள் அநேகருக்கு உண்டு. இவ்விதமான குணமுள்ளவர்கள் நோயாளிகளை உபசரிக்கும் தொழிலுக்கு உதவார்கள். கடை

ஒருவன் ஒன்றை விரும்பி ஒருவனிடம் போகிறான். போன காரியம் முடிவதில்லை. அது முதல் அவனைப் பார்க்கப் போவதுமில்லை.

சியாக ஒருவார்த்தைசொல்லுகிறோம். நோயாளிகளை உபசரிக்க உள்ளன்பு தேவை. உள்ளன்பு மிகுந்தோர்தாம் உபசரிக்கும் கருணைத் தொழிலுக்குத் தக்கோராவார்கள். அன்பு இல்லாத கள்ள மனத்தினர் வீணுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து ஒப்பாரி உபசாரம் பேசுவதிற் பயனில்லை.

## அதோ அவன் சோர்ந்து விழுகிறான், அவனைத் தைரியப்படுத்துங்கள்.

அவனுக்குப் புத்தி சரியில்லை. பெரிய திகில் பட்டு நிற்கிறான். அவன் மனம் குழப்பமாய் இருக்கிறது. மிகவும் கலங்கிப் போயிருக்கிறான். குழந்தைகளின் முகத்தைப் பார்க்கும்பொழுதெல்லாம் இவர்கள் பசியை யறியாமல் உண்டு சுகமாய் வாழவேண்டுமே, இவர்கள் என்ன கஷ்டப் படுவார்களோ என்று ஏக்கம் கொள்ளுகிறான். ஒரு குறித்த ஜீவனத்தை நம்பியிருந்து அந்த ஜீவனம் தத்தளிப்பிலாகி விடும்போது பாவம் பெரிய குடும்பியான அவன் ஏது செய்வான்? தேள் கடித்தவன் தன்னால் ஆனமட்டுக்கும் அதன் உபாதையைப் பல்லைக் கடித்துக்கொண்டு சகிக்க முயற்சிப்பது போல் அவனும் தனக்கு வருமானம் தவறியிருக்கும் நிலையைச் சிந்தையில் கொள்ளாமல் மறந்து விட்டது போன்ற நிலையிலிருக்க ஆனமட்டும் சமாளித்துப் பார்க்கிறான். ஒரு பயங்கர நிலை தன்னை எதிர்நோக்கி வருவதாக அவன் நினைத்து விட்டு கடவுளே என்னைக் காப்பாற்று என்று ஓலமிடுகிறான். அவன் சோம்பேரியா? அல்ல, உழைப்பாளியே. அத்தகையோனை இந்த சமயம் தேறுதல் சொல்லித் தைரியப்படுத்துங்கள். பயப்படாதே என்று திடப்படுத்துங்கள். நாங்களெல்லாம் துணையிருக்கிறோம் என்று ஒரு பலத்தை அவன் நெஞ்சில் ஊட்டுவியுங்கள். "மனதைப் பேதிக்க விடுவது நல்லதல்ல" என்று அவனுக்குச் சொல்லுங்கள். "நாம் தைரியமாய் வாழ்நாட்களைக் கழிக்கக் கடமைப் பட்டுள்ளோம்" என்று அவனுக்குச் சொல்லித் தைரிய புத்தியை உண்டாக்குங்கள். அத்துடன் அவன் செலவுக்குச் சமய உதவியாய் ஒரு தைரியமாயிருக்கும்படி. பத்துரூபாய்மணியார்டரை அனுப்பிவிடுங்கள். அது பெரிய ஆறுதலளிக்கும். புதிய தைரியம் தரும். இந்த முதல் சிகிச்சையை அவனுக்குச் செய்து உபகரியுங்கள். பிறகு அவன் சக்தி பெற்றுக்கொள்வான்.

# விவசாயமும் கைத்தொழிலும்.

## இதில் அளவு உள்ளது எது?—அளவு இல்லாதது எது?

எத்தேசத்திலும் ஜனங்களுடைய வாழ்க்கைக்கு விவசாயம். கைத்தொழில் இரண்டும் அவசியம். இதில் விவசாயம் ஒரு குறித்த அளவில் நிற்பதாகும். கைத்தொழிலோ ஒரு அளவுக்கு உட்படாததாகும். விவசாயத்தால் கிடைக்ககூடியபொருளைக்கொண்டே மனுஷ்யன் ஜீவிப்பதரிது. கேவலம் மிலேச்சர்களாய் வயிற்றுக்கு உணவு கிடைத்தால் போதுமென்று எண்ணி மேலே சுகசௌகரியங்களை விரும்பாத ஜனங்களுக்குத்தான் விவசாயம் ஒன்றே போதுமென்று தோன்றும். நிலத்தில் விளையும் தானியங்களையும், மிருகங்களைக் கொன்று கிடைக்கும் மாமிஸங்களையும் புசித்து, நிலையான வாசஸ்தலங்களின்றி நாடோடிகளாய்த் திரியும் ஜனங்களுக்குக் கைத்தொழில்கள் அவசியமில்லையெனலாம். ஆனால், இந்த நிலமையைத் தாண்டித் தாழ்ந்த நாகரீகத்தையாவது ஜனங்கள் எப்போது பெறுகிறார்களோ, அதாவது, ஸ்திரமான வாசஸ்தலங்களையடைந்து அற்ப சுகங்களை எப்போது விரும்புகிறார்களோ, அப்போது தொழில்கள் அவசியமாகின்றன. வசிக்க வீடும், தரிக்க வஸ்திரமும் எப்போது ஏற்படுகின்றனவோ, அப்போது தொழில்கள் இன்றியமையாதனவாகின்றன. தச்சன், கொத்தன், கருமான் ஆகிய தொழிலாளிகளும், வஸ்திரம் நெய்யும் நெசவுக்காரர்களும் அவசியமாகின்றனர். தொழில்கள் செய்யப்பட்டுப் பிரபலமாகும்போது, தொழிலாளிகள் செய்யும் சாமான்களை மாற்றிக்கொண்டு வியாபாரம் வர்த்தகம் செய்வது அவசியமாகின்றது. ஆதியில் கிராமத்திலேயே தொழில்கள் செய்யப்பட்டு, அங்கேயே உபயோகப்பட்ட சாமான்கள் நாகரீகம் பரவப்பரவ அன்னிய இடங்களுக்கும் எட்டி, மேற்கண்ட வியாபாரமும் வர்த்தகமும் பரவுகின்றன.

ஃ

இவ்வாறு, காலக்கிரமத்தில் வண்டிகளும் ரோட்டுகளும் ஏற்பட்டுத் தூரமான தேசங்களும் ஒன்றுக்கொன்று சாமான்களை மாற்றிக்கொண்டு வியாபாரம் வர்த்தகம் முதலியவைகளை நடத்துகின்றன. விவசாயத்தால் மனுஷ்யனுடைய ஜீவனத்திற்கு அவசியமான பொருள்கள் மட்டும் கிடைக்கின்றன. ஆனால், அறிவும் நாகரீகமும் பெறுவதிலிருந்து சுகசௌக்கியாதிகள் அதிகப்படுகிறபடியால், அவைகளுக்கு அவசியமான சாமான்கள் தொழில்களாலேயே கிடைக்கவேண்டும். மனுஷ்யனுக்கு ஜீவாதாரமான அவசியப் பொருள்கள் வேறு; சுகப்பொருள்கள்வேறு. ஜீவாதாரமான அவசியப் பொருள்களுக்கு ஓர் அளவுண்டு; சுகப்பொருள்களுக்கோ அளவில்லை; சுகப்பொருள்கள் தொழில்களின்

---

ஒரு பெண்ணுடன் பேசுவதற்கு அவளது கணவன் அருகிலுள்ள சமயம் கிட்டினாலன்றி மற்றபடி சிலர் பேசுவதேயில்லை. இது யோக்கியர்களின் லக்ஷணம். அயோக்கியர்களோ கணவனில்லாத காலத்தையே தேடுவர்.

மூலமாய்க் கிடைப்பனவாகும். கற்ப கோடி காலமாய் மனுஷ்யன் தன் பசியை யாற்ற எவ்வளவு ஆகாரம் புசித்தானோ, அவ்வளவே இப்போதும் ஏறக்குறையப் புசிக்கிறான். அவன் அனுபவிக்கும் சுகங்களோ ஆதிகாலத்தில் இருந்தவற்றைவிட, இப்பொழுது எத்தனை மடங்கோ அதிகமாக வளர்ந்திருக்கின்றன. ஆதியில் மனிதன் தன் கால்களால் நடந்தான்; பிறகு மிருகங்களின் மீது ஊர்ந்து சென்றான்; பிறகு மிருகங்களைப்பூட்டி வண்டிகளிற் சென்றான்; இப்போதோ ரயில்வண்டிகள் ஏற்பட்டு விட்டன; அவைகள் போதாதவென்று சைகிள்களும், மோட்டார் வண்டிகளும் புறப்பட்டுக்கொண்டன; ஆகாசரதங்களும் இந்நாளில் தோன்றி யிருக்கின்றன; ரயில் வண்டியில் 12—மணிநேரம் செய்த பிரயாணம் ஆகாய விமானங்களால் ஒரு மணி நேரத்தில் சுகமாய்ச் செய்ய சாத்தியமாகின்றது.

ஃ

கால்களால் நடக்குங் காலத்தில் இதரர்களின் சகாய மில்லாமலும், பணச்செல வில்லாமலும் ஆகக்கூடிய காரியமானது, இப்போது, ரயில் வண்டிகளாலும், சைக்கிள்களாலும், மோட்டார் வண்டிகளாலும், ஆகாசரதங்களாலும் ஆகவேண்டியதாயிருக்கும்போது, அன்னியர்களான எத்தனை தொழிலாளிகளுடைய சகாயமும், எத்தனை பணச்செலவும் வேண்டி யிருக்கின்றன? இடம் விட்டு இடம் பெயருமிந்த ஒரு விஷயத்தில் மட்டும் மனுஷ்யனுடைய சுகமானது எவ்வளவு தூரம் பெருகிப் பல தொழில்களின் சகாயத்தை அவசியமாக்கிக் கொண்டிருக்கின்றன வென்பதைச் சற்று சிந்திக்கக்கடவோம். அப்படியே, ஆதியில் மரத்தின் கீழே ஒரு சிறுகுடிசையில் வசித்தவன் இப்போது அலங்காரமான மாளிகைகளில் வசித்து, நாற்காலி, சோபா, கட்டில் முதலான சுகங்களை அமைத்து, இன்னும் தனது புத்திக்கு எட்டின மட்டும் சுகங்களையும் பெற்று வாழ்கிறான். இன்னும் நாகரீகம் பரவி ஜனங்கள் தங்கள் தங்கள் தேசத்திற்குள்ளேயே பழகுவதை விட்டு அன்னிய தேசங்களுக்குப் போய்ப் பழகி ஒருவரைப் பார்த்தொருவர் சுகபோகாதிகளைப் பெருக்கிக் கொள்ளக் கற்றுக்கொள்ளும்போது, தொழில்களும் வியாபாரங்களும்புதிது புதிதாய்த்தோன்றி ஜனங்களில் பிரதி மனுஷ்யனதும் கூட்டங்களினதும் முயற்சிகள் கணக்கில்லாமற் பெருகுவனவாய் விடுகின்றன. இப்படி அளவிற்குட்பட்ட ஜீவாதாரப் பொருள்களுக்கும், அளவிற்குட்படாத சுகபோகாதிப் பொருள்களுக்கும், உள்ள வித்தியாசமே--விவசாயத்திற்கும் கைத்தொழிலுக்கும் உள்ள வித்தியாசத்தைக் காட்டுகின்றது.

ஃ

இந்த வித்தியாஸத்திற்குற்றபடி விவசாயத்தால் கிடைக்கும் பொருள்கள் அளவிற்குட்பட்டனவாயும், தொழில்களாற் கிடைக்கும் பொருள்கள் அளவிற்குட்படாதனவாயு மிருக்கின்றன, பூமியில் பயிரிட்டு நாம் விரும்பின அதிக அளவு சம்பாதிக்கலாமென்பது சாத்தியமல்ல. தக்கபடி

---

ஒருவன் தான் நன்கு உழைத்து ஒரு காரியத்தில் முயன்று சித்தி யடையாதபோது "நான் நன்றாகவேதான் உழைத்தேன்; ஆனால் நான் போதுமானபடி கஷ்டப்படவில்லையென்று ஸர்வக்ஞனை பகவான் நினைக்கிறாரோ என்னவோ எனக்குத் தெரியவில்லை"—என்று தான் சொல்லிக் கொள்ள வேண்டிவரும்.

உரம் இட்டு, நீர் பாய்ச்சி, மற்ற சௌகரியங்களையும் அமைத்து விவசாயம் செய்தால் பூமி சளைக்காமல் ஏறக்குறைய விளையுமேயன்றி நாம் விரும்பின அளவு அது விளையும்படி செய்தல் சாத்தியமல்ல. நவீன முறைகளைக்கொண்டு பயிரிட்டாலும் அதிலும் ஒரு அளவு திட்டத்திற்கு உள்ளாகத்தான் விளையக்கூடும். ஒரு கதிர் தோன்றிய இடத்தில் நான்கு கதிர்கள் தோன்றச் செய்யலாம்; அவ்வளவே சாத்தியம். எவ்வளவு சாமர்த்தியம், எவ்வளவு ஊக்கம், எவ்வளவு முதல் பிரயோகம் செய்தாலும், ஒரு அளவுக்குட்பட்டு அதற்குள்ள காலங்களில் பூமி விளையுமே யல்லாமல் அளவு மீறி விளையாது. மேலும், விவசாயத்தின் அளவு பூமியின் அளவினதாயிருக்கின்றது. அதாவது, பூமியின் விஸ்தாரமும், பூமியின் ஜலமும், பாய்ச்சல் உரம் முதலிய சௌகரியங்களும் விளைவிற்கு அளவாகும். ஆனல், இந்த சௌகரியங்கள் எவ்வளவுக்கெவ்வளவு கிடைக்கின்றனவோ அவ்வளவுக் கவ்வளவு பூமி விளையுமென்பதில்லை. எல்லாவற்றிற்கும் மேலாக மழையும் தேவை. இங்கிலாண்டில் பூமியின் விஸ்தாரம் ஜனங்களின் முழு உணவுக்கும் போதுமான அளவிவில்லாமல், உணவுப் பொருள்கள் அயல் நாடுகளிலிருந்து வரவேண்டி யிருக்கின்றன. அப்படியே சுவிட்ஜர்லாண்டு, பெல்ஜியம், டென்மார்க் இத்தேசங்களில் பூமி ஸாரமற்று இளப்பமானதாயிருந்தாலும், உரம் முதலிய சாதனங்களால் விளைச்சல் அதிகப்படுத்தப்படுகின்றது. ஆயினும், ஜனங்களுக்குப் போதுமான உணவு கிடைக்காமல் சில பாகம் அன்னிய தேசங்களிலிருந்து வரவேண்டியிருக்கின்றது.

ஃ

தொழிலோ இவ்விதமான ஒரு அளவுக்குட்பட்டதல்ல. மனிதனுடைய ஸாமர்த்தியத்திற்குத் தக்கபடி சிறு தொழில்களும் பெருந்தொழில்களும் நடத்திஜீவிக்க ஸாத்யமாகிறது. சுவல்ப முதல் போட்டு சுவல்ப வியாபாரம் செய்கிறவர்களும், கோடிக்கணக்காய் முதல்போட்டு ரயில்வே போன்ற பெருத்த தொழில்கள் செய்கிறவர்களு முண்டு. ஒரு தொழிலில் பிரவேசித்தவன் அந்தத் தொழிலிலேயே மேன்மேலும் முதலைப்போட்டும், ஊக்கத்தைக் காட்டியும் பெருகச் செய்து அதிக லாபத்தைச் சம்பாதிக்கக்கூடும். ஒரு தொழில் ஒருவனால் நிர்வகிக்க முடியாவிட்டால் ஆயிரம் பத்தாயிரக் கணக்கான ஜனங்களைச் சேர்த்துக் கம்பெனிகளை வைத்து அதை நடத்தலாம். அதே தொழிலை ஆயிரம் ரூபாய் முதல் வைத்தும் செய்யலாம். கோடி ரூபாய் முதல் வைத்தும் செய்யலாம். முதலும் ஊக்கமு முள்ளவனுக்கு ஒரு தொழில் பொருந்தா விட்டால் வேறு தொழிலைச் செய்யலாம். தொழில் செய்து உண்டாக்கும் பொருள்கள் ஓரிடத்தில் விலைப்படா விட்டாலும் வேறிடங்களுக்குங் கொண்டுபோய் அவைகளை விற்கலாம். இங்கிலாந்தில் மான்செஸ்டரில் வசிப்பவர்களுக்குப் பருத்தியினல் செய்யப்பட்ட துணிகள் அவசியமில்லா விட்டாலும், இந்தியர்களுக்கு அது அவசியம் என்றறிந்து அதை அங்கே செய்து இங்கு

---

இன்று பகல் முழுதுக்கும் நான் என்னவேலை செய்தேன், எவ்வளவு உழைத்தேன். இன்னும் முடியாத வேலைகள் என்னென்ன பாக்கியிருக்கிறது —என்று ஒவ்வொருவனும் பிரதி இரவிலும் நினைத்துப் பார்த்துக் கடவுளிடம் அன்றன்றுதான் செய்த வேலைகளின் விவரத்தை ஒப்புவித்துப் பரிசுத்தனாகக் கடவன். பாக்கிப்பட்ட வேலையை மறுதினமே முடித்துவிடக்கடவன்.

கொண்டுவந்து விற்கிறார்கள். இந்தியருக்கு வேண்டிய துணியை மான்செஸ்டர் மட்டுமல்ல, ஜர்மனி, ஆஸ்டிரியா, பிரான்ஸ், ஜப்பான் முதலிய தேசங்களும் செய்து இங்கு அபரிமிதமாய் விற்கின்றன. ஆகையால், விவசாயத்திற்கு ஏற்பட்டிருக்கும் எல்லைகளும் அளவுகளும் கைத்தொழில்களுக்கு இல்லை என்பதை நாம் உணர வேண்டும். கைத்தொழில்களுக்கு வேண்டிய பொருள்கள் நம் சொந்த தேசத்தில் கிடைக்காவிட்டாலும், அவைகளை அன்னிய தேசங்களிலிருந்து வரவழைத்து வேண்டிய தொழில்களைச் செய்யலாம். மான்செஸ்டரில் பருத்தி உண்டாவதில்லை. அதை இந்தியாவிலிருந்தும் தருவித்துத் துணி நெய்கிறார்கள். அப்படியே போல் விவசாயத்தில் செய்வது சாத்தியமல்ல. அதற்கு வேண்டிய பூமி, நீர், உரம் இவைகளை அன்னிய தேசங்களிலிருந்து தருவிக்க முடியுமா? ஆகையால், அளவில்லாமல் செல்வம் குவிக்க வேண்டுமானால், அது தொழில்களால் மட்டும் சாத்தியமேயல்லாமல், விவசாயம் ஒன்றினாலேயே சாத்தியமாகிவிட மாட்டாது.

ஃ

இதனால், விவசாயத்தை இளப்பமாகச் சொல்லிவிட்டதாக எண்ணக்கூடாது. விவசாயமே மனிதனின் பசியையாற்றுவது. கோடி பொன்னிருந்தும் ஒரு படி அரிசி கிடைக்காவிடில் அத்தனை பொன்னிருந்தும் பயனில்லை. ஆகவே, நிலத்திற் பணம் போடுதல் ஒருபோதும் வீணாக மாட்டாது. ஆனால், எதிலும் நிதானம் வேண்டும்; ஓர் அளவு இருக்கவேண்டும். பணம் மிகுத்தவர்கள் எல்லோரும் நிலங்களை வாங்க முற்படும்போது நிலங்களுக்குப் பொய்யான கிராக்கி உண்டாகின்றது. அதாவது, நிலங்களில் கிடைக்கும் வரும்படி அதிகப்பட்டு, அந்த வரும்படியின் ஆசையால் அவைகளுக்கு உண்மையான கிராக்கி உண்டாகாமல், பணமுடையோர் வேறு வழியை யறியாமல் லாபம் கிடைக்காவிட்டாலும் முதலாவது தங்குமே என்ற எண்ணத்தால் நிலங்கள் வாங்கும்போது, அவைகளுக்குப் பொய்யான கிராக்கி யுண்டாகி விலையும் அதிகப்படுகிறது. இந்தப் பொய்யான கிராக்கியை மெய்யான கிராக்கி யென்று சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் நினைத்து அடுத்த செட்டில்மெண்டில் தீர்வைகளை ஜாஸ்தி செய்து விடுகிறார்கள். இது முதலுக்கே மோசமாய் விடுகிறது.

ஃ

பட்டணங்களில் வசிக்கும் பெரிய மனிதர்கள் பெருந் தொகைகளைக் கொண்டு விஸ்தாரமான பூ சொத்துகள் வாங்கி அவைகளைக் குத்தகைக்கோ, ஏஜண்டுகள் வசமோ ஒப்புவித்து விடுகிறார்கள். ஏஜண்டுகளுக்கும் சொத்துக்களைப் பலப்படுத்த வேண்டுமென்ற அக்கரையில்லை. எஜமானர்களும் விவசாய விஷயம் ஒன்றும் தெரியாதவர்களாகிப்—போனது வந்தது எதையும் கவனிக்காமல் பட்டணத்துச் சுகங்களில் மூழ்கிக் கிடக்கின்றனர். இந்த நிலைமையில் பூமியின் விளைச்சல் எப்படி அதிகப்படும்? எனவே, கிராமத்திலேயே வசித்து விவசாயமே தொழிலாகக் கொண்டு படாத பாடு பட்டு நேராக அதில் உழைப்பவர்களுக்கே பூமி பயனைத் தருமேயன்றி பெருமைக்கு நிலங்களை வாங்கிச் சுக ஜீவனம் செய்பவர்களுக்குத் தாராது.

ஃ

நம்முடைய தேசத்தில் பெரும்பான்மையான ஜனங்கள் விவசாயம் செய்து, தொழில்கள் வேண்டின மட்டும் இல்லாமையினாலேயே நாம் வறுமையினால் பீடிக்கப்படுகிறோம். விவ

சாயத்தினாலேயே செல்வம் பெற்று வாழும் ஜனங்கள் உலகத்தில்லை. விவசாயத்தை மட்டும் நம்பியிருக்கிற ஜனங்கள் வறுமையுள்ளவர்களாகவே யிருப்பார்கள். இந்தியாவைப் போல ருஷியாவும் விவசாயத்தையே நம்பி வறுமைப்பட்டதுண்டு. ஜர்மனி தேசம் சுமார் 70—வருஷங்களுக்கு முன்னால் விவசாயமே செய்கின்ற தேசமாயிருந்து, பிறகுதொழில்கள் விருத்தியானபடியால் உலகம் பிரமிக்கும்படியான நிலைமையையடைந்தது. ஜப்பானும் விவ்சாயத்தால் செல்வம் பெருகாதென்றறிந்து ஐரோப்பிய தேசங்களைப்போல் தொழில்கள் செய்து வருகிறதுமன்றி, தொழிற் பொருள்களை அன்னிய தேசங்களுக்குத் தங்கள் கப்பல்களில் கொண்டுபோய் விற்றுப் பெரும் லாபங்கள் பெற முயலுகின்றது. ஆகையால், இந்தியாவும் விவசாயத்தையே நம்பியிராமல் தொழில்களைப் பெருக்கவேண்டும். அப்படிப் பெருக்குவதற்குச் செல்வம் படைத்தவர்களும், தேசாபிமானிகளும் தொழில்களில் பணத்தைப் போட்டுத் தாங்களும் லாபம் பெற்றுத் தேசத்திற்கும் நன்மை செய்வ தவசியம்.

## நகைப் பைத்தியம்.

"நகைப் பைத்தியம்" என்று இரண்டு பாகங்கள் கொண்டதான 600-பக்கங்கள் போலுள்ள விஸ்தாரமான நூல் ஒன்று தமிழில் உண்டு. நகையணிவதாலுண்டாகும் நஷ்டங்களையும், தீங்குகளையும், கலக விரோத பழி பாவங்களையும் அந்நூலில் வெகு தெளிவாக விளக்கி யுள்ளது. அந்நூல் இப்பொழுது விலைக்கு அகப்படா. தற்கால நிலையை நோக்கின் நகைகளைச் செய்யக்கூடிய காலமாக இல்லை. $13\frac{1}{2}$ ரூபாய்க்கு விற்ற பவுன் இப்போது $18\frac{1}{2}$ ரூபாய்க்கு விற்கிறது. அதாவது ஐந்து—ரூபாய் விலையேறி விட்டது. இவ்வளவு அதிக விலை கொடுத்து வாங்கி நகை செய்வது வெகு கஷ்டம். திடீரென்று பவுன் விலை இறங்கிவிடின் நகை விற்கும்போது பெரிய நஷ்டம் ஏற்படும். இதில் தட்டான் சேதாரம் என்று பல குன்றுமணி எடைப் பொன்னை எடுத்துக்கொள்வதும் வேறே. ஆகவே, நகை யாசையைப் பவுன் விலை இறங்கும் வரையில் ஒதுக்கி வைத்து, சேர்ந்த பணத்தைத் தபாலாபீஸில் ஐந்து வருஷ ரொக்க சர்டிபிகேட்டுகளுக்காகக் கொடுத்து வாங்கிக்கொள்வதே உத்தமம். 100-க்கு 6-வட்டியும் கிடைக்கிறது. ஒவ்வொரு ஏழரை ரூபாய்க்கும் பத்து ரூபாய் பெறுமான சர்டிபிகேட் வாங்கலாம். இப்படிச் சேர்த்துவைத்து ஐந்து வருஷத்திற்குப் பிறகு பெரிய நகையாகச்செய்து கொள்ளலாம். அப்போது பவுன் விலையும் இறங்கிப் போயிருக்கும்.




## 3. இல்லறம்.

(612-ம் பக்கத் தொடர்ச்சி.)

246. "என்னிலும் கதிகேட்டவன் என்னை வந்து மாலை யிட்டான்."

இளமை முதல் அவனைத் தனக்குத் தெரியும். அவனுக்கே தன்னைத் தரப்போவதாகப் பெற்றோர்கள் பேசிக்கொள்வதும் தெரியும். தாய் மாமன் என்ற சொந்தமும் தெரியும். அவன் நன்றாகப் படிக்கவில்லை யென்பதும், சோக்குக் கிறுக்கு பிடித்துத் திரிபவன் என்பதும், அழகன் அல்ல வென்பதும், விசேஷ சொத்து அப்படிப் பிரமாதமாகப் படைத்து விட்டதுவ் கிடையா தென்பதும் தெரியும். அவனுக்குத் தருவதில்லை யென்று சில சமயங்களில் தன் பெற்றோர் மறுத்திருந்தாலும், அது நீடிக்காமல் மறுபடியும் ஒன்றுபட்டுப் போய் விடுவார்களென்பதும் தெரியும். இல்வளவு தெரிந்த பிறகு கடைசியில் அவனுக்கே தன்னை நிச்சயித்து விவாக நாளும் ஏற்பட்டு விடும்போது "என்னிலும் கதிகெட்டவன் என்னை வந்து மாலையிட்டான்" என்று அங்கலாய்ப்புடன் சொல்லிக் கொள்வதுண்டு. இவ்விதம் சொல்லிக்கொண்ட போதிலும் இரத்த சம்பந்த முள்ள உறவாதலின், விவாகத்திற்குப் பிறகு அந்தத் தாய் மாமனே மிக்க மனோகரனாகவும் அதி ரூபவந்தனாகவும் தோன்றி மனது சரிப்பட்டுப்போய் அவனுடன் ஒத்து வாழ்ந்து குடித்தனம் செய்யத் தொடங்கி விடுவது சாதாரணம். இது ஏற்கெனவே யுள்ள நெருங்கிய பந்தத்துவத்தின் நெருங்கிப் பிடித்த சங்கதியாதலின் பிரிந்துபோக நேர்வதில்லை. அவன் தனக்குத் தகுந்தவனல்லவென்று விவாகத்திற்குமுன் எவ்வளவு சலித்துக்கொண்ட போதிலும், விவாகமான பின்பு தன் கணவனோடு மனமொத்து வாழ்க்கை நடத்துவதே உத்தமமாம். பெண்ணும் ஏழையாக இருந்து, அவளைவிட ஏழ்மைப்பட்டவ னொருவனுக்கு விவாகம் செய்து கொடுத்துவிடும்போது தன் தாய் வீட்டுக்காவது வாசற்படியை மூட ஒரு கதவாவது உண்டு; இங்கே அதுவும் காணமல் கதவுக்குப் பதிலாக சாக்குத் திரையையே போட வேண்டியிருக்கிறதைத் தெரிந்து கொண்டு, அதற்கேற்றபடியே மற்ற நிலைமைகளும் அமைந்திருப்பதைப் பார்த்து வயிறெரிந்து "என்னிலும் கதிகெட்டவன் என்னை வந்து மாலையிட்டான்" என்று கூறி நொந்து கொள்வதும் உண்டு. ஆயினும், பிறகு பழகப் பழக அந்த இடமும், அந்த கணவனும் மனதுக்குப் பிடித்ததாய் மாறி விடுவதும் சாதாரணம், இதில் முக்கிய விஷயம் யாதெனில், பெண் மக்களின் உத்தமகுணமே. குணம் நல்லதாயிருந்தால் தாங்கள் புகுந்த இடம் எத்தகைய ஏழ்மைப்பட்டதாயிருப்பினும் அதையே தங்கட்குத் திருப்தியாகக் கொண்டு விடுகிறார்கள். குணம் கெட்டதாயிருந்தால் புகுந்த வீட்டில் சதா கலகமே. புகுந்த வீடு ஏழை வீடாக இன்றிப் பணம் படைத்த வீடாக இருந்த போதிலுங்கூட, அங்கும் தங்களின் இழிந்த புத்தியையும் அல்பத்தனத்தையும் வார்த்தைத் துடுக்கையும் காண்பித்துக் குடித்தனத்தை அலங்கோலப்

படுத்தி விடுகிறார்கள். ஏழை வீட்டுப்பெண் அடங்கி நடப்பாள் என்று கொள்ளப்போக, அவளோ படுபாவியாய் இராக்ஷஸியாய் மாறி விடுவது முண்டு. ஏழை வீட்டுப் பெண்களில் எவ்வளவோ பேர் பெரிய குடும்பங்களில் வாழ்ந்து மகா உத்தமிகளாய் விளங்கியதுமுண்டு. இவை யாவும் அந்தப் பெண்ணின் குணத்தைப் பொருத்த விஷயங்கள். அந்தக் குணம் விவாகம் செய்துகொண்ட பிறகுதான் தெரிகிறது. அதற்கு முன்பு தெரிவது பெரும்பாலும் கூடாமையாகிறது.

247. "காட்டில் புதைத்த கனதனமும், பாட்டில் புதைத்த பழம் பொருளும், வீட்டில் மனையாள் மனமும் நாட்டில் அறிவதரிது."

எத்தனை வருஷங்கள் தன் மனைவியுடன் பழகியிருந்த போதிலும், சிற்சில சமயங்களில் அவள் மனத்தை அறியவே முடிகிறதில்லை. ஒரு விவாகத்திற்கு அழைக்கும்போது அவள், தான் எதற்காக வர, தனக்கு வர இஷ்டமேயில்லை யென்று விடுகிறாள். அவள் மனதுக்குள்ளோ அந்த விவாகத்திற்குத் தானும் செல்ல வேண்டுமென்ற விருப்ப மிருப்பினும் அதை யவள் காண்பித்துக் கொள்வதில்லை. சிற்சில விஷயங்களில் கணவனுக்கு மாறுபட்ட அபிப்பிராயமுடையவளா யிருப்பினும் அதையும் வெளியிட்டுக் கொள்வதில்லை. தன் மனத்தில் பல விஷயங்களை மறைத்துக் கணவனோடு கொஞ்சுகிறாள். அதை அவன் உண்மை யென்றே மயங்கிப்போகிறான். ஒருவரிடத்தில் அளவு கடந்த பிரியம் வைத்துவிட்டுத் தான் அங்கே மிக வெறுப்பாக இருப்பதாய்க் கணவனுக்குக் காட்டிக்கொள்கிறாள். இதையும் கணவன் மெய்யென்றே நம்பிக் கொள்கிறான். தன் ஆசையை வேறொரிடத்தில் ரகசியமாய் வைத்து அதை மறைக்கிறாள். இது கணவனுக்குத் தெரிவதில்லை. தானே சிலரை வரச் சொல்லிவிட்டு, அவர்களே வலியவந்தது போல் தன் கணவனிடம் காட்டுகிறாள். தான் போய் அந்த இடத்தில் நாலைந்து நாள் தங்கவிருப்ப மிருந்தும், போனதும் வந்து விடுவோமென்று கணவனிடம் சொல்லுகிறாள். பிறகோ நாளை வந்து விடுவதாகக் கணவனுக்குச் சொல்லியனுப்பி விட்டுத் தான்போன இடத்தில் நாலைந்து நாள் தங்கி விடுகிறாள். பிறகு கணவனே இவளை வந்து அழைக்க வேண்டியதாகிறது. எவர்களிடம் தன் கணவனின் முன்பு அலக்ஷியமாக இருக்கிறாளோ அங்கு அவள் அதிக ஆழ்ந்த அன்புகொண்டிருக்கிறாள். கணவனுக்கு வேண்டியவர்களை யெல்லாம் விரோதித்து விட்டு, தன் கணவனுக்கு ஆகாதவர்களை யெல்லாம் மிகவும் சொந்தக்காரர்களென்று அவள் எண்ணி வருவதை யுணர்ந்த கணவனும் அவள் மனப்போக்கைத் தெரிந்து கொள்ள முடியவில்லையே என்று திகைக்கிறான். சில சமயங்களில் பல முக்கிய விஷயங்களை அவள் கேட்க, இவனும் மனைவியென்று மறைக்காமல் அப்படியே கொட்டி விடுகிறான். அதிலிருந்தும் இவனது இழி நிலைமை, கேவலம், திகைப்பு இவற்றை அவள் கண்டுகொண்டு அவனைத் தாழ்வாக மதிக்கத் தொடங்கி விடுகிறாள். இன்னும் இதில் மற்றொரு முக்கிய விஷயம் யாதெனில், புருஷன் ஆண்மை குறைந்துவிட்ட காலத்தும் அவள் அவனை நேசிக்கிறாளா என்பதுதான். கணவனோ அவளை விசுவாசியாக எண்ணப்போக, அவளோ அவனது ஆண்மைக் குறைவை அவனிடமே வெளியிட்டுக் கேவலப் படுத்துகிறாள். அதில் வீட்டுக்காரன் தன் மனைவியின் நன்னடத்தையை ஸம்சயிக்கிறான். தன் காலத்திற்குப் பிறகு அவள் கற்பு கெட்டு விடுவளோ

என்பது ஒரு புற மிருக்க, தான் இருக்கும் பொழுதே அவள் ரகசியத்தில் கெட்டலைய நேருமோ வென்று கலங்குகிறான். வைத்தியர்களிடம் சென்று மருந்துண்டு தன் புருஷத்வத்தை மீட்டுக்கொள்ள முயலுகிறான். இந்த சம்பவங்கள் வயோதிக காலத்தில் மணம் செய்து கொண்டோரிடத்துக் காணக்கூடியதாகும். என்றாலும், உத்தம பதிவிரதைகள் எக்காலத்திலும் இருந்து கொண்டே யிருக்கிறார்கள். தன் கணவன் ஆண்மை குன்றினும் அதற்காக மனம் சலியாமல் சந்தோஷமாகவே அவனோடு காலங்கடத்தும் பதிவிரதாங்கனைகள் எவ்வளவோ பேர் இருக்கிறார்கள். எல்லாம் அந்தந்தப் பெண்கொடியினிடத்து இயற்கையில் அமைந்து விடுகிற நல்ல—தீய குணங்களைப் பொருத்து நடக்கும் விஷயங்களா யுள்ளன. பெரும்பாலும் இல்வாழ்க்கையில் மனைவியின் மனத்தைச் சில சமயங்களில்—பல சமயங்களிலும்கூடக் கண்டறிய முடிகிறதில்லை யென்பது பட்டோரின் அனுபவமாயிருக்கிறது. (தொடரும்.)

## ருசிப்பது எப்படி?

ஒருவரைப்பற்றிய விஷயமோ, செய்தியோ, அவரது காரியமோ தனக்கு ருசிகரமாய்த் தோற்றவேண்டுமாயின், அவரிடத்துத் தனக்கு ஒருவித மதிப்பும், உண்மையான பிரீதியும் இருந்தால்தான் முடியும். ஒரு அற்பமான சிறு துண்டுக்கடிதம் கீழே விழுந்துகிடப்பினும், அது தனக்கு மிகவும் ருசிப்பவர்கள் வரைந்ததாயிருப்பின் அன்போடு அதை எடுத்துப் பத்திரப்படுத்த நெஞ்சு மிகத் தூண்டும். தன் மனதிற்கு அத்தனை பிடிக்காதவர்கள் ஒருவிஷயம் எழுதியிருப்பின் அதில் குற்றமே காணவைக்கும். அவர்கள் செய்கிற வேலைகளோ, விருந்துகளோ எதுவும் தனக்குச் சுவையாகத் தோன்றமாட்டா. ஏற்கனவே ஒன்றில் ஆழ்ந்த அன்பு கொண்டுவிட்டபின், அதனைவிட சிலாக்கியமாய் இன்னொன்று எதிர்படினும் அது அவ்வளவாக ருசிக்க மாட்டா. தனக்கு ஆகாத ஒருவன் ஒரு பத்திரிகையிலிருந்த செய்தியைச் சொல்லவர, அதை அலக்ஷியமாய்க் கேட்டு விட்டு ஒரு பதிலும் பேசாது ஒதுங்கிய ஒரு பெண், அதே விஷயத்தைத் தன் கள்ளக்காதலன் கூறியபோது அப்போது தான் புதிதாக அச்செய்தியைக் கேட்பதுபோல் நடித்து, ஆ! அப்படியா என்று வியப்புமுகம் காட்டித் தன் பரவசத்தைத் தெரிவித்தாள். எனவே, ஒன்று ருசிப்பது அவர் மீது தான் வைத்துள்ள மதிப்புக்கும் அன்புக்கும் தனது ஆவலாதிகளின் சித்திக்கும் தக்கபடியே யிருக்கும். தாய் ஊட்டிய பிடிசாதத்திற்கு இணையில்லை யென்பதும் அங்கு வைத்துள்ள அன்பையே குறிப்பிடுகிறது.




1. நுண்ணிய துவாரங்கள் நிறைந்த ஒருவித அற்புதமான ரப்பர் கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது, ஈரத்தையும் இழுக்கக்கூடிய சக்தி அதற்குண்டாம். வடி கட்டுவதற்கும், எண்ணெய் படாதபடி பாதுகாக்க சுற்றி யனுப்புவதற்கும் அது உபயோகப் படுகிறதாம். பிளாட்டிங் கடிதமாகவும் உபயோகிக்கலாமாம். மிக உறுதியாகவும், கெட்டியாகவும் இருப்பதால் அதை மாவு ஆகும்படியும் தூள் செய்யலாமாம்.

2. 1911ஞ செப்டம்பர் மாதம் 23உயில் ஆகாயவிமான தபால் முதன் முதலாக ஆரம்பிக்கப்பட்டதாம். கார்டன் நகரத்திலிருந்து மினியோலி என்ற இடத்திற்கு ஓவிங்டன் என்பவரால் (Earl Ovington) செலுத்தப் பட்டதாம்.

3. உடல் நலமும் மனித சுபாவமும் ஆகிய இரண்டும் ஒன்றோடொன்று சம்பந்தப்பட்டதாம். ஆத்ம தத்துவத்தில் நிபுணர்களான டாக்டர் எல். பி. ஹார்ரிங்டனும் டாக்டர் W. R. வைல்ஸூம் 550 மனிதர்களை பரீக்ஷித்துப் பார்த்தபோது கோழைத்தன முடையவர்களெல்லாம் பலத்தில் குறைந்தவர்களாக இருக்கிறார்களாம்; வைத்தியத்தைப் பெரிதும் நம்பியவர்களாக இருக்கிறார்களாம்.

4. கண் பார்வை மங்கிவிட்டால் படிப்பதற்கு பூதக்கண்ணாடியை எகிப்து (Egypt) தேசத்தார் பண்டை நாட்களில் உபயோகித்து வந்தார்களாம்.

5. ஸ்டோனி போர்ட் (Stoney Ford) என்பவரால் ஓர் அற்புதமான கிளி யொன்று வளர்க்கப்பட்டு வருகிறதாம். அதற்கு இரண்டு தலைகளாம். இரண்டு விதமான தொனியுடன் ஒரே பாட்டை ஒரே சமயத்தில் பாடுகிறதாம்.

6. பாஸ்டன் நகரத்தின் செத்த காலேஜை காவல் செய்வதற்கு இரண்டு பெரிய நாய்களை வைத்திருக்கிறார்களாம். இரவில் காவல் செய்பவர்களோடு இவை இருக்கின்றனவாம். ஒரு நாயும் ஒரு காவல்காரனும் காவல் செய்து கொண்டிருக்கும்போது மற்றொருவன் மற்றொரு நாயுடன் கட்டிடத்தை சுற்றி பார்த்துக் கொண்டு வருவானாம். அக்கட்டிடத்தின் சமீபத்தில் எவனாவது ஒளிந்து கொண்டிருந்தாலும் மோப்பத்தால் கண்டு பிடித்து விடுகிறதாம். அந்தக் கட்டிடத்தை ஒருதரம் சுற்ற ஒன்பது மைல் நடக்கவேண்டுமாம்!

7. நூதனமான யந்திரம் ஒன்று கண்டு பிடிக்கப்பட் டிருக்கிறதாம். மெத்தைக்கு தளம்போட கற்களை உபயோகப் படுத்துவதற்குப் பதில் இந்த யந்திரத்தால் இரும்பால் தளம் போடப்படுகிறதாம். இவ்விதமான தளம் போடுவதால் எவ்வளவோ ரூபாய் மிச்சப்படுகிறதாம்.

8. செயற்கை வஸ்துக்களால் கடல் பஞ்சு ஜர்மனியில் செய்யப்படுகிறதாம். அதற்கு 'ஆப்கா விர்கோர்ஸ் ஸ்பாஞ்சு' (Afga Viercose Sponge) என்று பெயராம். இயற்கையான கடல் பஞ்சைவிட இது மிக்க உபயோகமுள்ளதாம். இதைத் தண்ணீரில் போட்டு கொதிக்க வைத்தாலும் தன்னுடைய வடிவத்திலும், குணத்திலும் மாறுபடவில்லையாம். அதை இஷ்டப்பட்ட வடிவமாக பெரியதும் சிறியதுமான துவாரங்களோடு செய்துகொள்ளலாமாம்.

P. G. குலசேகரன்.






பொங்கலுக்குப் பிறகு இன்று தான் நமது கடை கூடிற்று. "ஒரு சங்கதியில் இருவருக்கும் ஒரு தகராறு ஏற்பட்டிருக்கிற தென்றால், அந்தத் தகராறுக்குக் காரணமென்ன வென்று சொல்லப்படுகிறதோ அந்தக் காரணத்துக்குக் காரணம் வேறென்றிருக்கும் என்று சொல்லலாம். உதாரணமாக, இந்த வீட்டுக்குழந்தைகள் எதிர்வீட்டுக் குழந்தைகளுடன் விளையாடுகையில் விளையாட்டாக அவற்றின்மீது மண்ணை எறிகின்றன. அதை எதிர்வீட்டுக்காரி பார்த்துவிட்டு எப்படி என் குழந்தைகளின் மேல் மண்ணைப்போடலாம் என்று ஒரு பெரிய சண்டைக்கு ஆரம்பிக்கிறாள். இந்த வீட்டுக்காரி தன் குழந்தைகளை ஏன் அங்கேபோய் விளையாடினாய், ஏன் மண்ணைப்போட்டாய் என்று கண்டித்துத் திட்டி யடித்துவிட்டு, பதிலுக்குப் பதில் எதிர்வீட்டுக்காரியுடன் சண்டைக்குத் தொடங்குகிறாள். இப்பொழுது வெளிக்கு ஒரு குழந்தை மற்றொரு குழந்தையின் மீது மண்போட்டதே இந்த சண்டைக்குக் காரணம் என்று தெரிகிறது. ஆனால், உள் நுழைந்து ஆராய்கையிலோ, இந்த சண்டையின் காரணத்துக்கு இன்னொரு காரணம் இருப்பதாகப் புலனாகும். இந்த வீட்டுக்காரி அந்த வீட்டு நாரிக்குத் தன் கணவன் அறியாதபடி அரிசி விற்றதில், அந்த வீட்டுநாரி அதற்கு ரூபாய் தாராமலே ஏய்த்துவிட, அதில் இந்த வீட்டுக்காரி ஏமாறிப் பெரிய சண்டையிட, அதில் ஏற்பட்ட மனஸ்தாபமே ஆதிமூலமான காரணமாகும். இந்தக் காரணத்திலிருந்துதான், சாதாரணமாகக் குழந்தை சிறு விளையாட்டாய் மண்வாரிப்போட்டது ஒரு குற்றமாகத்தோன்றும் காரணம் புறப்பட்டது. அதிலிருந்தும் ஒரு பெரும் சண்டையும் ஆரம்பமானது. ஆகவே, இப்போதைய சண்டைக்குக் காரணம் மண். இந்தக் காரணத்துக்கு ஆதிகாரணம் அரிசி விற்ற சங்கதி. இதிலிருந்தும் இப்போது தென்படுகிற கலக காரணத்திற்கு மற்றொரு ரகசிய காரணம் ஒன்றிருக்கும் என்று நான் சொல்வதின் கருத்து நன்கு விளக்கமாகும்'' என்று தாண்டவக்கோன் நவின்றார்.

ஃ

"இருவரிடையும் உண்டாகிற ஒரு சச்சரவில் மூன்றாவது மனிதரின் ராஜிமுயற்சி பலன் தருமா என்பது கேள்வி. தன் பக்கத்தில் தான் அதிக பலம் இருக்கிறதென்று குப்புவுக்கு எண்ணம். அதைப் பலர் சரி என்றும் சொல்லித் தட்டிக் கொடுக்கிறார்கள். ஆனால், கோபுவோ சட்ட சம்பந்தமான முக்கிய அம்ஸங்கள்

---

அவரவர்கள் பேசும் பேச்சுக்குள்ளேயே அவரவர்கள் காட்டும் நேசமும் விரோதமும் குடியிருப்பாயிருப்பது தெரியாமலில்லை.

தன் பக்கத்திற்கே அதிக அநுகூலம் செய்யுமென்றும், குப்பு தன்னை ஏமாற்றி யிருக்கிற மோசத்தைத் தான் ருஜு செய்துவிடும்போது தன் கக்ஷியே யதார்த்தமானதென்று ஏற்பட்டு ஜெயிக்குமென்றும் நினைத்துத் தலை நிமிர்ந்தே நிற்கிறான். கோபுவின் நிமிர்ந்த தலையைப் பார்த்துக் குப்பு அதிகமாக யோசிக்கிறான். தான் மோசடியாக அவனை ஏமாற்றியது ருஜுவாகிவிடின் தன் பக்கத்துக்குத் தோல்வி ஏற்படுமோவென்று கலக்கமும் சந்தேகமும் கொள்கிறான். பிறகு மத்தியஸ்தர்களைக்கொண்டு கோபுவை ஒரு ராஜிக்கு வரும்படியாகவும், அதற்கு இன்னின்ன நிபந்தனைகவென்றும் தெரிவிக்கிறான். கோபுவோ குப்பு ஒருபடி இறங்கிவிட்டதைப் பார்த்துத் தன் கக்ஷிக்குள்ள சட்ட அம்ஸங்களின் பலத்தை யறிந்தவனாய்க் குப்பு சொல்லும் கடின நிபந்தனைகளுக்குச் சம்மதிக்க முடியாதென மறுத்துவிடுகிறான். குப்பு இன்னும் தன் நிபந்தனைகளைச் சிறிது குறைத்துச்சொல்ல, அதையும் கோபு கடின நிபந்தனைகளென்றும், அதில் பல படிகள் குறைத்தால்தான் ஒப்ப முடியுமென்றும், அதுவும் தயா விஷயத்திற்கே ஒப்புவதாகு மென்றும் தெரிவிக்கிறான். கோபு சொல்லுகின்றபடி இன்னும் நிபந்தனைகளைக் குறைக்கக் குப்புவுக்கு இஷ்டமின்றி நாட்கள் செல்லுகின்றன. கடைசியில் இந்த ராஜி முயற்சி பலன் தருமா என்பது குப்பு தன் நிபந்தனைகளை இன்னும் தளர்த்துவதைப் பொறுத்து இனிமேல் தான் தெரியவேண்டுமென்று சொல்லும்படியாகி விடுகிறது. இது ராஜி பயன் தருமா என்பதைப்பற்றிய கேள்விக்கு விடையாகும்'' என்று தொந்திச் செட்டியார் தொகுத்துரைத்தார்.

ஃ

"முதலில் செய்த காரியம் நியாயமா, இல்லையா வென்பது முடிவு செய்யப்படவேண்டி யிருக்கையில், அதையே மேற்கொண்டு செய்து கொண்டு போவது முந்திச் செய்த காரியத்தைத் தவறல்லவென்று ஸ்தாபித்துக் கொள்ளுவதற்காகக் கையாளப்படும் யுக்தியென்றே கருதப்படும். உதாரணமாக, தன் வீட்டின் பக்கத்துச்சுவர் அடுத்த வீட்டுக்காரனுடையதா யிருக்க அதில் இடிந்துகிடக்கும் ஒரு பாகத்தை அடுத்த வீட்டுக்காரன் ஊரிலில்லாத சமயம் பார்த்துத் தான் கட்டிவிட முயற்சிக்கிறான். இவன் செய்த காரியம் நியாயமா, தவறா என்று தீர்மானிப்பதற்கு முன்பு அந்தச் சுவரைக் கட்டி முடித்துவிடுவதானது அந்தப் பக்கத்துக்கு முழச்சுவரும் தன்னுடையதென்று பிறகு பாத்தியங் கொண்டாடுவதற்கும், தான் முதலில் சுவர் வைக்கப் போன தவறான காரியத்தைச் சரியான காரியமென்று ஸ்தாபித்துக் கொள்வதற்கும் செய்கிற தந்திரமாகவுமே ஏற்படும். இது அக்கிரமத்தின் மேல் அக்கிரமமாகச் செய்யும் சங்கதியாகும்" என்று ஆமவடைப் பண்டாரம் சாற்றினார். ஃ

"ஒரு புஸ்தகத்தைப் படித்துவிட்டுக் கீழே போடுகிற அறிவுமட்டும் போதாது. அது விருத்தியின் மேற்படிக்கு ஏறுகிற ஏணியாகவும்ஆகாது. அந்தப் புஸ்தகத்தை அந்த விதமாக இயற்றுவதற்கு அதன் ஆசிரியருக்கு

---

இக்கடிதம் நாளை கிடைக்கும்; நாளையே பதில் எழுதுங்கள்; மறுதினம் எதிர் பார்ப்பேன் என்று ஒவ்வொரு கடிதத்திலும் சிலர் எழுதுவதை வழக்கமாகக் கொள்வதில், அவ்வித கடிதங்களைப் பெறுவோர் இது வழக்கமாக எழுதும் பாட்டு என்று ஒதுக்கிப் பலநாள் கழித்தே பதில் எழுத முற்படுகின்றனர்.

எவ்விதமாக எந்த எண்ணம் எதைப் பார்த்து, எந்த சம்பவத்திலிருந்து உண்டாயிற்றென்றும், எந்த எண்ணத்தின்-எந்த சிந்தனையின் பயனாக அதன் ஆசிரியர் அப்புஸ்தகத்தை எழுதும் ஆற்றல் படைத்தாரென்றும், அவ்விதம் எழுதுவதற்கு எந்த வழியிலே அவர் சென்று அதற்கான விஷயங்களைச் சேகரிக்க முயன்று முடித்தாரென்றும், தமது நூல் முற்றுப் பெறுவதற்கு எந்த விதமான போக்கை—மனோ பாவனையை—மதிநுட்பத்தை அவர் கையாண்டாரென்றும், நூலினூடே ஆங்காங்கு எந்தெந்த முறையில் விஷயங்களை அமைத்திருக்கிறா ரென்றும், அவ்விதம் அமைக்க அவர் என்னென்னவெல்லாம் ஆராய்ந்து நூலினுட்புகுத்தியிருக்க வேண்டுமென்றும், நெடுக யோசித்துப் பார்க்கப் பழகவேண்டும். இவ்விதம் பழகித் தம் அறிவை நாளடைவில் வளர்த்துத் தேர்ந்து அந்தப் புஸ்தகத்தின் போக்குப்படியே தாங்களும் ஒரு நூல் எழுதுதற்கு ஆற்றல் உண்டாக்கிக் கொள்ளவேண்டும். முடிவில் அப்படியே ஒரு நூலை இயற்றிவிடவும் திறன்படைக்கவேண்டும். இதுதான் ஒரு புஸ்தகத்தைப் படித்துப் பெறும் அறிவின் பயனாகும். மற்றபடி எவ்வித எண்ணமுங் கொள்ளாமல் ஒரு நூலைப்படித்து முடித்தலானது தான் அபிவிருத்தியடைவதற்குரிய வழியாகாது. தான் போகும் வழிதான் மேலானதென்று எண்ணாமல் மற்றவர்கள் போகும் வழியையும் ஆராய்ந்து, தன்னதைவிட அது மேன்மைப்பட்டதா, கீழ்மைப் பட்டதா என்று பரிசிலனை செய்து, அங்கு நல்ல அம்ஸங்கள் தென்படின் அவற்றைத் தன் முறைகளோடும் சேர்த்துக்கொண்டு உயருகிற பக்குவ நுட்பமும் மதியூகமும் வேண்டும்" என்று அல்லாபிச்சை இயம்பினர்.

ஃ

இந்த சமயத்தில் தாண்டவக் கோனின் மனைவி அங்குவந்து உங்கள் சிறிய தகப்பனாருக்கு உடம்பு சரியில்லை என்று ஆள் வந்திருக்கிறது. மாலை 6-மணிக்குப் போகிறோமென்றான். அதற்குத் தாண்டவக்கோன் "அப்படியே செய்யலாம்; ஆனால் வீட்டிலேயே புசித்துவிட்டுச் செல்லுங்கள்; அங்கு இரவு 7-மணிக்குப் போய், அதன்மேல் அவர்கள் உங்களுக்காக சமைத்துப் பரிமாறுகிற கஷ்டத்தை வைக்கவேண்டாம்; நம்மால் யாருக்கும் எந்தக் கஷ்டமும் உண்டாகாதபடி பார்த்துக்கொள்ள வேண்டும்" என்றார். அதற்கு அவர் மனைவி, அவர்கள் இரவு 10-மணிக்கு வந்தாலும் நாம் ஆக்கிப்போடவில்லையா என, அதற்கு அவர் "நாம் மற்றவர்களுக்கு உழைப்போம்; ஆனால் நாம் மற்றவர்களுக்குப் பாரமாகவாவது, நமக்காக மற்றவர்கள் கஷ்டப்படும்படியாகவாவது இருக்க இடம் தரக்கூடாது என்றார். அதற்கு அவர் மனைவி "இவ்வளவு சாப்பாடு அவர்கள் போடுவதற்கு அதை ஒரு பிரமாதமாகச் சொல்கிறீர்களே; முதல் தினம் நம் வீட்டிலேயே புசித்துச் சென்றாலும், மறுதினம் அவர்கள் வீட்டில் தானே உண்ணவேண்டும்" என்றாள். அதற்கு அவர் "திடீர் என்று சிலர் வீட்டுக்கு வந்துவிட்டபோது அவர்களுக்காகத் தனிச் சமையல் மறுபடி செய்வதற்கும், ஏற்கனவே வந்திருப்பவர்களுக்கு மறுநாள் சமைத்துப் போடுவதற்கும் பேதம் இருக்கிறது; திடீர் என வந்தவர்களுக்கு அவசரம் அவசரமாய் சமைப்பதில் கஷ்ட

---

யோக்கியர்களுக்குத்தான் பலவித கஷ்டங்கள் வந்து சேருகின்றன. யோக்கியமற்றவர்கள் சுகமாகவே காலந்தள்ளுகிறார்கள். ஆனால்****

முண்டாகும்; முதல் நாளே வந்தவிட்டவர்களுக்கு மறுதினம் செய்வதில் அவ்வளவு கஷ்டமே ஏற்படாது; சரி, நீங்கள் வியாதியஸ்தரைப் பார்க்க வந்ததாகச் சொல்லிக்கொண்டு நாலைந்துநாள் அங்கேயே தங்கி அவர்களுக்குப் பளுவாயிருந்து பெரிய செலவுகள் வைத்துவிட வேண்டாம்; மறுநாளே திரும்பிவிடுங்கள்; பிறகு இன்னொருதரம் போகலாம்'' என்றார். அதைக் கேட்டுக்கொண்டு அவர் மனைவி சென்றாள்.

ஃ

"அது நடவடிக்கையில் சாத்தியமில்லை யென்று எந்தெந்த விஷயங்களுக்குக் கூறலாம்? சிலர் ஒரு உறுதி வார்த்தை சொல்கிறார்கள்; சிலர் அந்தப்பணம் வந்தவுடன் இன்னின்னது செய்ய வேண்டுமென்று திட்டம் போடுகிறார்கள். சிலர் தங்கள் வீட்டுக்கு வந்தவர் புறப்பட்டுச் செல்லுகையில் ஏதேனும் மரியாதை செய்து அனுப்பவேண்டுமென்று நினைக்கிறார்கள்; அடுத்தமாத சம்பளத்தில் அவசியம் நகை செய்து விடுவோமென்கிறார்கள்; சில புது சட்டங்களை இயற்றும் பொழுது எல்லோரையும் இந்த சட்டம் பாதிக்காது, குறித்த சிலரை மட்டுமே இது அடக்கும் என்று சொல்லிக் கண் துடைக்கிறார்கள். இவைகளெல்லாம் நடவடிக்கைக்கு வரும் பொழுது முன் சொன்னது எதுவும் சாத்திய மில்லாமல் முன் பேசியதற்கு எதிரிடையாய் மாறி விடுகின்றன. பழய உறவை இன்னும் ஸமீபித்துப் பிடிப்பதற்கென்று அங்கு பெண் கொடுக்கப்போக கடைசியில் அது நடவடிக்கையில் சாத்தியமின்றி உறவுக்குப்பதில் பகையே வளருகிறது'' என்றார் ஈசீப்சேட். இத்துடன் நமது கடையும் பூர்த்திபெற்றது.

'பஹதூர்' பொன்வண்டு செட்டியார்.

## ஆரோக்கிய வழி.

சென்னை ஜஸ்டிஸ் ஸர். வி. ராமேசம் அவர்களின் பிரஸங்கசாரம் பின்வருமாறு:—கோதுமை உஷ்ணம். குளிர் காலத்திற்கு மாத்திரம் அதை ஒருவேளை யுண்ணலாம். இயந்திரத்தில் தீட்டிய அரிசி கூடாது. மாவுப்பண்டங்கள் ஜீரணமாவது கஷ்டம். அவல் மிகவும் நல்லது; அதில் முக்கியமான எதுவும் கெட்டுப்போகாமலிருக்கிறது. வேகவைக்கப்பட்ட உருளைக்கிழங்கு, பீட்ரூட் முதலியன உத்தம வஸ்து. வெள்ளை ரொட்டி, சாக்லேட் உதவாது. பழங்களை உபயோகிக்கையில் தோல்களை நீக்கிவிடக்கூடாது. பழச்சாற்றில் ஆஸிடும், தோலில் ஆல்கலியும் இருக்கின்றன. நமது ரத்தத்திற்கு இரண்டும் வேண்டும். குழந்தைகளுக்கு சக்கரைத் தின்பண்டம் கூடாது. வெள்ளைச் சக்கரை குழந்தைகட்கு விஷஸமானமே. பட்டினியிருக்கும்போது பால் அருந்தவொண்ணது. அது ஒரு முக்கிய பெரியதான ஆகாரமேயாகும்.

# உலகில் நீ புகும் வழி.

பழய பெருச்சாளிகளைத் தெரிந்து நட.
பிறாது படுகுழி அறிந்து ஒதுங்கி நில்.
மனம் பிடிக்காவிடினும், பேசி அனுப்பு
ஈனரே இகழ்வர்; அதில் புகழ் கெடாது.
மன்னித்துபழகினால்தான் நட்புமுறவும்
வீட்டுச் செய்தியைப் பிறரிடம் ஏன்கூற?
மருந்து வாங்கிவர விரோதி கூடாது.
அந்த சிலவை நிறுத்தின் ஓரணு மிச்சம்

பிறர் தீங்கும் நலமே.
அதுஒரு எச்சரிக்கையே,
மிதித்தவனை வணங்கேல்.
தினமும் கடவுளிடம் உன் உழைப்பின் கணக்கு ஒப்பி.

திடீரேன்று வந்த நேசத்தை நம்பாதே.
ஏமாறியதுபோல் காட்டி விழிப்புடனிரு.
வருபவர் பறிப்பவரே. தருபவர் சிலரே.
வருத்தம் பொறுது பிறர் பேசினதை நீமற.
மூடிவைத்தது தங்கம்; திறந்தது பித்தளை.
மூர்க்கனிடம் பல்லிளித்து மவுனமாகிவிடு.
கடிதம் எழுதாதார் குலாவிஎன்? பிரிந்தென்?
விபசாரக் கள்வனை வீட்டில் சேர்க்காதே.
உன்னால் ஒரு சேலவு எவருக்கும் கூடாது.
பணம் தேடும் பாடு பெண்கள் அறியநட.
ஒன்றின் குறைவு மற்றொன்றில் தீர்ந்திடும்.

இழிவை மனதில் வை; வேளைபார்த்திரு
உனை எதிர்த்தவனை அழிப்பார்கடவுள்
கேடுகாலக் குறியே அவன் தீய துணிவு
நல்லவனாக நடந்தே பின் துரோகி.
கடு நெஞ்சு, கள்ளக் கருத்து விடியாது.
ஈசனை நம்பு; எவர் கோபம் என் செயும்.

# சிநேகத்தின் மதிப்பு.



வாழ்நாட்களைக் கழிப்பதற்கு ஒவ்வொரு மனிதனுக்கும் பணத்தைவிட சிநேகிதர்கள் இன்றியமையாதவர்கள். அவர்கள் அவனுக்குப் பேருதவியாய் நிற்பர். ஒவ்வொரு பெரிய காரியத்திற்கும் பக்கத்திலிருந்து அவர்கள் தம் தோள்களைக் கொடுத்துச் சுமந்து செல்வர். சிநேகிதர்களில் சிறந்தோர் அதிக பணமோ அதிக படிப்போ செய்துவிடமுடியாத ஒரு ஜெயத்தைக் கொடுக்கவோ சந்தோஷப்படுத்தவோ ஸமர்த்தராயும் காரணகர்த்தராயுமிருக்கின்றனர். எத்தனையோ பேர் தங்கள் காரியம் நிறைவேறாமல், அதனால் மனச்சோர்வுற்று உடைந்திருக்கும் தருவாயில் தங்கள் சிநேகிதர்களினாலே தங்கள் காரியத்தை நிறைவேற்றியிருக்கின்றனர். ஜனங்களெல்லோராலும் கொண்டாடப்பட்டுக் குதூகலிக்கப்படும் நூற்றுக்கணக்கான பிரக்யாதி வாய்ந்தவர்கள் தங்கள் பிரக்யாதிக்கும் ஜெயத்திற்கும் விருத்திக்கும் தங்கள் தாய், தகப்பன், அக்கா, தங்கை அல்லது நெருங்கிய சிநேகிதர்களின் தூண்டுதலே காரணம் எனக் கூறுகிறார்கள். சாதாரண மனிதன் தன் உயர்ச்சிக்குத் தன் சிநேகனே காரணமெனச் சிறிதும் நினைப்பதில்லை. அவன் அவனுடைய உழைப்பாலேயே அப்பதவியை அடைந்ததாகக் கருதுகிறான். இப்படியிருப்பவரும் நினைப்பவரும் எங்கோ அபூர்வம்.

ஃ

ஒரு புதிய வக்கீல் தான் வக்கீலாக புறப்படுகையில் அநேக சிநேகிதர்கள் சம்பாதிக்க வேண்டும். அதுதான் சிறந்த வழி. ஏனெனில் எவனெவன் அவனுக்குத் தெரிந்தவனோ அவனவன் அவ்வக்கீலின் ஜெயத்திற்குக் காரணமாகின்றனர். அவன் சிநேகிதர்கள் பிறரிடம் அவனைப்பற்றிப் பேசி அவனிடம் அழைத்து வருகின்றனர். எவ்வளவு சட்டத்தில் படித்திருந்தாலும் எவனும் வக்கீல் நடவடிக்கைகளில் அனுபவமும் பிரக்யாதியும் பெறாத எவனிடமும் தன் கேஸை ஒப்புவிக்கமாட்டான். அப்படியேதான் ஒரு புதிய டாக்டருக்கும். அவன் சிநேகிதர்களே இங்கும் உதவி புரிகின்றனர். அவர்கள் பழகாத வைத்தியன் எவ்வளவு படித்திருந்தாலும் சிறிதும் உபயோகமற்றவன் என நன்றாய் அறிவர். அவன் திறத்தைப் பற்றிப் புகழ்ந்து பலரிடம் பேசி நோயாளிகளை அறிமுகமாக்குவார்கள்.

ஃ

டாக்டர் ஹல்லில் என்பவர் நம் வாழ்நாள் சிநேகர்களினாலேயே ஆக்கப்படுகிறது என்று கூறுகிறார். ஒருவன் தன் சிநேகிதர்களைப் புறக்கணித்தால் அதனால் அவன் வாழ்நாள் கெட்ட வழியில் செல்கிறது. குணம் சிநேகத்தினால் மாறுதலடையும். நாம் சிநேகிதர்களின் கெட்ட குணங்களையோ அல்லது சற்குணங்களையோ இரவல் வாங்குகிறோம். நாம் அவர்கள் நற்குணங்களையோ கெட்ட குணங்களையோ உருஞ்சிவிடுகிறோம். மனிதர்கள் பொய்யருடன் சகவாசிப்பின் பெரிய பொய்யனாவர். சத்யவந்தருடன் கூடின் சத்தியவந்தராவர். சிறந்த சிநேகிதர்கள் ஒருவனுக்குக் கிடைக்கப்பெற்றால் அவன் முன்னிருந்தவனைப்போலிருக்கமாட்டான். சிறந்த எண்ணங்கள் அவன் மனதில் தாண்டவமாடும்.

சிலர், சிநேகிதர்களுக்கு புத்துயிர் அளிக்கின்றனர். அவர்கள் நம் பக்கவில் இருக்கும் தருவாயில் நம்மளவிற்கு மீறியவைகளையும் நமக்குத் தெரியாதவாறே செய்கின்றோம். ஒருவகை சிநேகிதம் புத்திக்குப் புத்துயிர் அளித்து மூளையைக் கூறுபடுத்தி நமக்கு மேலானதைச் செய்யத் தூண்டுகிறது. இன்னொரு வகை நம் புத்தியை மந்தப்படுத்தி உற்சாகத்தை அடக்கி நம்மைப் பாதாளத்தில் தள்ளுகிறது. நம் வாழ்நாளில் வேண்டுவது எதுவெனில் நம்மால் ஆகக்கூடிய காரியத்தை நம்மைச் செய்யும்படித் தூண்டும் சிநேகமே. அவனுடன் நாம் விரைவில் பெரியவர்களாகிறோம். ஃ

ஒரு சிநேகனுடைய தூண்டுதல் அனேகருடைய வாழ்க்கையின் மாறுபாட்டிற்குக் காரண மாகின்றன. உபாத்தியாயர்களால் அவமதிக்கப்படும் எத்தனை மந்தமதிகள் தங்கள் சிநேகர்களால் தங்களிடம் மறைந்து கிடந்த சக்தியை யுணர்ந்தவராய் எழுப்பப்பெற்றுப் பிரக்யாதி யடைந்திருக்கின்றனர்.

ஃ

சிநேகிதம் எப்போதும் ஒருதரத்துச் சங்கதி அல்ல. அதாவது பொதுவாக ஒரே தினுசான சங்கதியல்ல. அது பலவகை திரிந்து நிலவுவது. ஒருவன் தனக்குத் தெரிந்தவற்றையெல்லாம் பிறருக்குக் கொடுத்துவிட்டு,தான் ஒன்றும் அடையப் பெறுமலாவது, அல்லது தான் எல்லாவற்றையும் பிறரிடமிருந்து பெற்றுத் தான் பிறருக்கு ஒன்றும் கொடுக்காமலாவது இருக்கப்போவதில்லை.

ஃ

சிநேகம் செய்ய விரும்புவோர் எந்த சிநேகம் புகழப்படுமோ அல்லது வசீகர சக்தி அமைந்ததுவோ அச்சிநேகத்தை அடையவேண்டும். நீ ஒரு லோபியாயும் தன்னலம் கருதுவோனுயும் இருந்தால் உன்னிடம் எவனும் சிநேகம் பண்ணமாட்டான். நீ பெருந்தன்மை பொருந்தியவனுயும் ஜீவகாருண்ய புருஷனுயும் விளங்கல் வேண்டும். நீ தைரியமுள்ளவனுகவும்,வீரம்பொருந்தியவனுகவும் ஆக முயலவேண்டும். ஏனெனில், ஒரு கோழையினிடம் ஒருவனும் சிநேகிக்கமாட்டான். உன்னை நன்றய் நம்பவேண்டும். நீ நேர் நிமிர்ந்து புன்முறுவல் புரிந்து ஜெயமடையும் புன்னகையுடன் நடமாடவேண்டும். நீ ஒரு தன்னலம் கருதுவோனுய், உன் மேன்மைப்பாட்டிற்கு உழைப்பவனுய், எவரெவர் உனக்கு எப்படி உதவக்கூடுமென்று நினைப்பவனுயிருந்தால், அவர்களும் உன்னை அப்படியேதான் கருதி நடப்பர்.

ஃ

உனக்குச் சிநேகிதர்களிருந்தால் அவர்களிடம் உன் சிநேகத்தையும், நீ எவ்வளவு அவர்களை விரும்புகிறுய் என்பதையும் வெளியிடப் பயப்படாதே. நீ குறித்த ஒருவருடன் இருந்தால் அதிக சந்தோஷப்படுகிறுய் என்பதை ஏன் பிறரிடம் கூறுவதில்லை? அதில் உனக்கு ஒரு செலவும் இல்லையே. ஃ

ஒரு பெண்ணை "நீ எப்படி மனதிற்கு ஒவ்வாத மனிதர்களிடம் சகவாசம் செய்கிறுய்" என அவளை வினவினதற்கு, அவள்தான் அவர்களின் நற்குணங்களை மட்டும் பொறுக்கிக்கொண்டு கெட்ட குணங்களைக் களைந்துவிடுவதாக மறுமொழி பகர்ந்தாள். ஒவ்வொருவனும் தன்னுயுள்நாளில் எச்சிநேகத்தையும் தள்ளிவிடக்கூடாது என மனவுறுதி செய்துகொள்ளவேண்டும். உன்

சிநேகர்களில் எவனாவது ஒருவன் இறந்தால் இன்னொரு தக்கோரை சிநேகம் பண்ணிக்கொள். நீ சிநேகி தர்களின் எண்ணிக்கையைக் குறைவு படுத்தாதே. ஏனெனில், அவ்வெண் ணிக்கைக்குத் தகுந்தவாறே உன் கரு மத்தில் ஜெயமும் சந்தோஷமும் சிநே கிதர்களின் குணமும் அமையும். ஆனால், கடைசியாக ஒரு எச்சரிக்கை பெறு. நீ எல்லா நண்பர்களிடமும் சகவாசம் செய்யலாம். அவர்களின் துர்க்குணங்களில் மட்டும் பழகி விடாதே. அதேதான் உன்னை வீழ்த் துகிற நீ மீளமுடியாத பெரிய படுகுழியென அறிந்துகொள்.

S. ஸ்ரீரங்கராஜு,

"ஜெகநாதபாக்" சைதாபேட்டை.

## கெட்ட காலமும் நல்ல காலமும்.

காலம் நல்லதாகில் தான் முதலில் சந்திக்கப் போன இடத்திலேயே வெற்றியிருக்கும். பிறகு, அதற்கு மேல் போன வெவ்வேறிடத்திலும் தன்னுடைய அந்தந்தக் காரி யங்களும் தான் வேண்டிச் சென்ற மனிதர்கள் அந்த நேரத்தில் அங்கிருந்து ஜெயமாகவே முடியும். கடைசியில் எல்லாம் வெற்றியாகி வீட்டிற்குத் திரும்பலாம். காலம் கெடுதியாகில் முதன் முதலில் புகுந்த இடத்திலேயே தன் காரியம் நடவாது. தான் கருதிச் சென்றவரும் இரார். பிறகு மற்ற இடங்கட்குச் செல்லினும் அங்கும் ஒட்டைதான். முதல் கோணல் முற்றும் கோணல்தான். தான் குறித்த ஸ்டேஷன் வந்துவிட்டதென்று ஸ்டேஷனின்பெயரை அவ சரத்தில் தவறுதலாக வாசித்து விட்டுத் தன் பெட்டி சாமான்களுடன் இறங்கி விட்டதும் வண்டியும் புறப்பட்டு விடுகிறது. பிறகு ஸ்டேஷன் பெயரைப் பார்க்கையில் அது வேறாக இருப்பதைக் கண்டு திடுக்கிடுகிறான். வண்டியும் போய் விடுகிறது. இது கெட்ட காலத்தின் கேடு. அதே வேளையில் தனக்கு நல்ல காலமே யிருப்பின், புறப்பட்டு விட்ட வண்டி இன்னொரு வண்டியின் வருகைக்கு இடம் தருதற்கு அடுத்த பாதைக்குமாறி அங்குபோய் நிற்கும்படி யாகி, தவறுதலாக இறங்கியதான் மறுபடியும் தன் பெட்டி களுடன் அதே வண்டியில் ஏறிக் கொள்ளவும் முடியும். நல்லகால மிருந்து செய்த தவறுகள் சுலபத்தில் தீர்ந்து விடும். கெட்டகாலம் தோன்றிக் கொண்டபோது செய்யும் பிழைகளோ துரும்பைத் தூணாக்கித் தூக்கிலும் ஏறவிடும்.

ஒரு பெண்தான் மதிக்கப்பட வேண்டுமானால் தன் மாமனார் மாமியா ரைத் தான் மதிப்பதிலிருந்து உண்டாகவேண்டும்.

# வெண்மேகத்தின் கருணை.



வீரத்தன்மையும் வேண்டும்; அத்துடன் கருணையும் வேண்டும். உயிருக்குத் துணிவது வீரத் தன்மை; எத்தனை இடர்கள் இருப்பினும் அத்தனையையும் லக்ஷியம் செய்யாது தன்னால் ஆன உதவியைச் செய்ய முற்பட்டுக்கொள்ளுகை கருணையின் பான்மையாம். 52-வருஷங்கட்கு முன்பு அமெரிக்கருக்கும் அவ்விடத்திய "சுதேசி" களுக்கும் நடந்த ஒரு சண்டையில் அமெரிக்க சேனாதிபதியின் இரண்டு பிள்ளைகள் எதிரிகளாகிய "சுதேசி"களுடைய கையில் சிறையானார்கள். அந்த இளஞ்சிறைகளை என்ன செய்யலாமென்று வெகு நேரம் யோசனை நடந்தது. சிலர் அமெரிக்கருக்குப் பழிவாங்கும் நிமித்தமாயும், மற்ற அமெரிக்கருக்குப் பயமுண்டாகும்படியாயும் அந்த இளஞ்சிறைகளை ஒரு மரத்தில் கட்டித் தொங்கவிட்டு அம்புகளை ஒவ்வொன்றாக அவர்கள் மேல் எய்து பிராணவதை செய்து கொன்று விடலாமென்று யோசனை சொன்னார்கள். சிலர் எதிரிகளின் நல்ல நடக்கைக்கு அவர்களைப் பிணையாக வைத்துக்கொள்ள வேண்டும் என்றார்கள். ஆனால், அந்த சுதேசிகளுக்குள் **வெண்மேகம்** என்று பெயர் பெற்ற ஒரு வீரன் "அந்தச் சிறுவர்களை நானே பிடித்தேன்; அவர்களை என்னிடத்திலேயே ஒப்புவிக்க வேண்டும்" என்று சொல்ல, மற்றவர்களும் அதற்கு இசைந்து, "அந்தச் சிறுவர்கள் அவன் வசத்திலேயே இருக்கவேண்டுமென்றும், உடனே அமெரிக்கருடைய சேனையை அப்புறப்படுத்தி, தாங்கள் கேட்ட நிபந்தனைகளுக்கு இணங்காத பக்ஷத்தில் அவன் பிள்ளைகள் இருவரும் கொலை செய்யப்படுவார்களென்று அவர்கள் தகப்பனுக்குச் சேதி சொல்லி அனுப்ப வேண்டுமென்றும்" தீர்மானித்தார்கள். சேனைத்தலைவனிடம் தூதுபோன மனிதன் திரும்பிவரக் கொஞ்ச காலம் சென்றபடியால் அதுவரையில் வெண்மேகம் என்னும் வீரன் அந்தப் பிள்ளைகளைத் தன்னால் கூடிய மட்டும் தயவாய் நடத்தி வந்தான். இதுமற்ற "சுதேசி" களுக்கெல்லாம் இஷ்டமாய் இராமையால் அவர்கள் அந்தக் குழந்தைகளைக் கடுகடுத்துப் பார்த்து வந்தார்கள். ஃ

இந்தச் சிறு பிள்ளைகளுக்குத் தாங்கள் நிர்ப்பந்தமான ஸ்திதியில் இருந்த சங்கதி தெரியாதிருந்தாலும், மூத்தவனான எட்கர் (Edger) என்பவன் மாத்திரம் சுதேசி வீரர்களின் முகக்குறிகளைப் பார்த்துத் தங்களுடைய அபாயமான ஸ்திதியை ஒருவாறு ஊகித்தான். வெண்மேகத்திற்குக் கொஞ்சம் இங்கிலீஷ் பேசத் தெரியுமாதலால், அந்தப் பிள்ளைகளை எப்போதும் ஆயுத பாணிகளாய் "சுதேசிகள்" காத்துக் கொண்டிருந்த போதிலும், அவர்களை அடிக்கடி

---

ஒரு விஷயத்தில் ஒத்துப்போக இருந்தவர்கள் பிறகு யாருடைய பேச்சையோ கேட்டுக் கொண்டு எதிலும் சம்பந்தப்படாமல் தூரவிலகி விடுகிறார்கள். இவர்கள் எவர்களுடைய பேச்சைக் கேட்டார்களென்பதும் பிறகு தெரியவாமலில்லை.

வெளியே அழைத்துக்கொண்டு போவான். ஒரு நாள் அந்தத் தலைவன் அந்த ஊரிலுள்ள குதிரைகள் எல்லாவற்றிலும் அதிக வேகமுள்ளதென்று பேர் பெற்ற தன் குதிரை மேல் தானும், அந்த சிறுவர்களுமாக ஏறி அந்த "சுதேசி"களின் சேனைகளிருந்த கூடாரத்தைச் சுற்றிச் சவாரி செய்து கொண்டிருக்கையில் சிறுவர்களைப் பார்த்து; "குழந்தைகளே! இந்தக் குதிரையின் வேகத்தை நான் என்னவென்று சொல்லப்போகிறேன்; இதன் குணம் அதிகம் புகழத்தக்கது; மேலும் குறிப்பும் இதற்கு நன்றாய்த் தெரியும். இதன் வேகத்தால் நான் எத்தனையோ தரம் எதிரிகளினிடத்தினின்றும் தப்பி உயிர் பிழைத்திருக்கிறேன்" என்று இவ்வாறு குதிரையின் குணங்களை அந்தப் பிள்ளைகளுக்குச் சொல்லிக் கொண்டிருக்கையில், கூடாரத்தில் ஒரு விதமான குழப்பமும் சந்தடியும் உண்டானதைக் கவனித்தான். அதென்னவெனில், அமெரிக்க சேனைத் தலைவனிடத்துக்குத் தூது போயிருந்த மனுஷன் திரும்பி வந்ததனால் உண்டானது. ஃ

உடனே வெண்மேகம் மூத்த பிள்ளையைப் பார்த்து, "நீ குதிரைச் சவாரி பண்ணுவாயா?" என, "எங்கள் தகப்பனார் கற்றுக் கொடுத்திருக்கிறார்" என்று அவன் மறுமொழி சொல்லவே, அவனைப் பார்த்து. "உங்கள் தகப்பனிடத்தில் போன மனுஷன் அவர் நாங்கள் சொன்ன நிபந்தனைகளைக் கேட்க மாட்டேனென்று சொன்னதாகத் திரும்பி வந்து விட்டான். இனி உங்களுக்கு மீட்சியில்லை. எங்களைச் சேர்ந்தவர்கள் உடனே உங்களைக் கொன்று விடுவார்கள். நான் உங்களைக் காப்பாற்றக்கூடுமாவென்று பார்க்கிறேன். அதோ சிறிது தூரத்தில் இருக்கிறதே அந்தத் தோப்பு உனக்குத் தெரிகிறதா? அந்தத்தோப்பிலேதான் உங்கள் தகப்பனார் பாளயம் இறங்கி இருக்கிறார். நான் உங்களைக் கொஞ்சதூரம் குதிரை மேல் ஏற்றிக்கொண்டு போய் உங்களைக் குதிரைமேல் விட்டு விட்டு இறங்கி விடுகிறேன். நீ உடனே குதிரையின் காதைப் பிடித்துக் கிள்ளினால் அது அதி வேகமாய் ஓடும். அந்தத் தோப்பை நோக்கிக் குதிரையைச் செலுத்தினால் உன் தகப்பனாரிருப்பிடம் போய்ச் சேரலாம். ஆனால், எங்களின் கல்லடிக்கு மாத்திரம் தப்பித்துக் கொள்ளவேண்டும்" என்றான். இவ்வண்ணம் வெண்மேகம் சொல்லக்கேட்ட மூத்த குமாரன், "உம்முடைய தயவே தயவு, நீர் எங்களை இப்படி விட்டு விட்டால் உங்களைச் சேர்ந்தவர்கள் உம்முடைய உயிரை வாங்கிவிட மாட்டார்களா?" என, அதற்கு வெண்மேகம் "நீங்கள்எனக்காகச் சிந்திக்கவேண்டாம்; எனக்கு 45–வயதுக்கு மேலாய் விட்டது; நீங்களோ சிறுவர்கள்; ஒரு குழந்தையல்ல, இரண்டு குழந்தைகளையும் ஒரு தந்தை இழந்து விடுவது சகிக்க முடியாத கொடுமை; அந்தக் குழந்தைகளின்மீதுள்ள ஆசைக்காக இராஜாங்க காரியத்தை விட்டுக் கொடுப்பதும் தன் வேலையில் தவறு செய்ததாகும். ஆகவே, அவர் தன் கடமைப்படி குழந்தைகள் போனாலும் சரி என்று எங்கள் நிபந்தனைகளுக்கு மறுத்து

---

ஒரு வியாஸம் எழுதி வைத்திருந்து அது தவறிவிடின் அதைப்போல் இன்னொன்று எழுத இயலாது. எழுதினும் முதலில் வரைந்ததற்கு இணையாகாது. அதன் ஸ்வாரஸ்யத்தை இரண்டாம்முறை எழுதுவதில் காட்டவும் முடியாது. முதல் மனைவிபோல் இளையாள் ஆக மாட்டாள்.

விட்டார்; இரண்டு பேரைக் காப்பாற்ற ஒரு உயிர்போனால் நிமித்தமில்லை; என்னுயிர் அவ்வளவு மேலானதல்ல; பச்சைக் குழந்தைகளாகிய உங்களை, அதிலும் என்னிடமிருந்து பழகிப்போன உங்களை என்னைச் சேர்ந்தவர்கள் சித்திரவதை செய்து கொல்லும்போது அதைப் பார்த்துப் பிராணனுடன் சகிக்க என்னால் முடியாது'' என்றான். இவ்வாறு வெண்மேகமும் சிறுவனும் பேசிக் கொண்டிருக்கையில், ''சுதேசி''ப்போர்ச் சேவகர்களெல்லாம் அமெரிக்க சேனாதிபதியினிடமிருந்து சமாசாரம் கொண்டுவந்த மனுஷன் மேலேயே ஞாபகமாகிச் சிறுவர்களைக் கவனியாமல் இருந்தார்கள்.

ஃ

இப்படி அவர்கள் அயர்ந்திருக்கிற தருணம் பார்த்து வெண்மேகம் குதிரையை விட்டுக் குதித்துப் பிள்ளைக்குக் குதிரையை முடுக்கும்படிச் சமிக்கை பண்ணினான். மூத்தவனாகிய எட்க்ரின் நெஞ்சு பட பட வென்று துடித்துக்கொண்டிருந்தாலும் அவன் உடனே குனிந்து குதிரையின் காதைப் பிடித்து நசுக்க, அது வாயு வேக மனோவேகமாய் ஓடி ''சுதேசி''கள் என்னவென்று பார்த்து விழித்துக் கொள்வதற்கு முன்னே 100—கஜதூரம் போய்விட்டது. அப்போது அவர்கள் பின்னே தங்களைத் துரத்திக் கொண்டு வருகிற சப்தத்தையும், ''விர் விர்'' என்று தங்கள் சமீபத்தில் வந்து விழுகிற பாணங்களின் ஓசையையும், கேட்டுப் பயந்து, மூத்தவன் இளையவனைநோக்கி, ''லெயோனெல்! கெட்டியாய்ப் பிடித்துக்கொள், பின்னே அவர்கள் வருகிறார்களா பார்'' என்று சொல்லவே, ''லெயோனெல், ஆம் அவர்கள் வருகிறார்கள், ஒரு பெருங்கூட்டம் அவர்களைப்பின் தொடர்ந்து வருகிறது; வெண்மேகந்தான் அவர்களை நடத்தி வருகிறான்'' என, அதற்கு எட்கர்: ''வெண்மேகம் ஒருக்காலும் நம்மை எதிர்க்க வரமாட்டான், இன்னும் யாரோ பார்'' என்றான்.

ஃ

அச்சமயத்தில் இவர்களைச் சுற்றிச் சரமாரியாய் அம்புகளைப் பொழியவே, எட்கர் தானே திரும்பிப் பார்த்தபொழுது தம்பி சொன்னது சரியென்று காணப்பட்டது. இவர்களைத் தொடர்ந்து வந்தவர்களுக்குள் வெண்மேகம் அதிக சமீபத்துக்கு வந்து விட்டான். அவன் சேணமில்லாத ஒரு குதிரையின் மேல் சவாரி செய்து இந்தச் சிறுவர்களைக் கிட்டி சுதேசிகளின் பாஷையில் பிள்ளைகளுக்குத் தெரியாமல் ஏதோ சில வார்த்தைகள் சொல்லிக் கத்தினான், இப்படிப்பேசினது தன் எஜமானன் ஆபத்துக் காலத்தில் காட்டுங் குறி என்று அறிந்த அந்தக் குதிரை, இதுவரைக்கும் காற்றாய்ப் பறந்தால் இப்போது மின்னலைப்போல் பாய்ந்தது. இப்படிச் சென்ற குதிரையின் வேகத்தால் பின்னே வருகிறவர்கள் இன்னார் என்று காணக்கூடாதபடி அவர்கள் அதிகதூரம் போய் விட்டார்கள். சிறிது நேரத்தில் அவர்கள் அம்புகளுக்குத் தப்பி க்ஷேமமாய்த் தோப்பை அடைந்து, அங்கிருந்து ஒரு மலையிறக்கத்தில் அடித்திருந்த தங்கள் தகப்பனுடைய கூடாரத்தை அன்றுசாயந்திரம் போய்ச் சேர்ந்தார்கள். இதுவரையில் பிள்ளைகள் இறந்திருப்பார்களென்று எண்ணியிருந்த தகப்பன் இவர்களைக்கண்டு கட்டித் தழுவிக்

---

சிலாது துர்க்குணத்தாலும் ஒதுங்கும் தன்மையாலும் அவர்களுடைய நற்குணத்தையும் நன்றிகளையும் கூடப் பொருட்செய்ய முடியாமல் மனதுக்கு வெறுப்புண்டாகிவிடுகிறது.

கொண்டு, இப்படித் தன் குழந்தைகளைக் காப்பாற்றின "சுதேசி" வீரனை வாழ்த்தித் தன்னால் கூடுமானால் வெண்மேகத்துக்குத் தக்க பிரதியுபகாரம் செய்வதாகத் தீர்மானித்தான்.

ஃ

ஆனால், அந்த "சுதேசி" த்தலைவன் அப்படிக்கொத்த வெகுமானம் பெறும் வரையில் உயிரோடிருக்கவில்லை. எப்படி யென்றால், அப்பிள்ளைகளைத் தொடர்ந்துபோன "சுதேசி" ஒருவன், வெண் மேகம் குதிரையுடன் பேசின வார்த்தைகளின் கருத்தை அறிந்து, அந்தப் பிள்ளைகள் தப்பித்துக்கொண்டு போனதற்கு இவன் தான் காரணமென்று கண்டு, அதிக கோபங்கொண்டு கையில் இருந்த அம்பை வெண்மேகத்தின்மேல் எறிய, அது அவன் மார்பில் பொத்திக்கொண்டு உருவிப்போக, வெண்மேகம் உடனே குதிரையிலிருந்து விழுந்து மடிந்தான். இப்படி அவன் குரூரமாய்க் கொலை செய்யப்படவே, உபகாரியாகிய அந்த மேகவீரனுக்கு ஒன்றும் பிரதியுபகாரம் செய்ய இடமில்லாமற் போயிற்றே என்று அமெரிக்க சேனாதிபதி வெகுவாய் விசனப்பட்டு, வெண்மேகம் விழுந்து மரித்த இடத்தில் ஒரு கோரி கட்டி, அதன்மேல் "சிநேகிதனுக்காக உயிரைக் கொடுப்பதிலும் பேருதவி வேறொன்றுமில்லை" என்கிற வாக்கியத்தை எல்லாரும் பார்த்துப் புகழும்படிச் செதுக்கிவைத்தான். இதுவன்றோ அன்பு! இதுவன்றோ சிநேகம்! இவ்வறிவில்லாமல் அன்பும் நட்பும் காட்டுவதுபோல் நடித்துப் படுகுழிதோண்டும் சண்டாளர்களைப்பற்றி என்னென்று கூறுவதோ! நரகத்திலுங்கூட இவர்களுக்கு இடங் கிடைக்காது.

## கொடுத்ததில் கவனம் வை.



ஒரு வியாபாரத்தில் ஒருவரிடம் நோட்டு கொடுத்த பிறகு அதிலேயே கவனம் வை. இடையில் என்னபேச்சு வரினும் அதில் புத்தி செலுத்தாமல் நோட்டுகள் கொடுத்ததிலேயே நினைவாயிருந்து அதற்கு ரசீது பெறுவதில் ஜாக்கிரதைப்படு. நோட்டைப் பெற்றுக்கொண்டவனே பிறகு திடீரென்று நோட்டைக்கொடு என்பான். நீ துணிந்து ஓ! நோட்டு கொடுத்துவிட்டேனே என்று சொல்லத் தியங்கினால்—நோட்டை யிழந்ததுபோல்தான். நோட்டு வாங்கிக்கொண்டே வாங்கவில்லை யென்பவர்களும் இருக்கிறார்கள். ஆதலின் ஜாக்கிரதை. ரூபாயை நீ தர கடைக்காரன் பெற்றுக்கொண்டு பிறகு வாங்கவில்லை யென்றும் சொல்லக்கூடும். ஆகவே, ரூபாயைக் கொடுத்ததும் அதன்மேலேயே கண்ணாய் எங்கே சில்லரை யென்று கேட்டபடியிருந்து பெறு. இல்லாவிடில் நீ ஏமாறி மோசம் போவாய். ஜாக்கிரதை!




## கல்லடைப்புக்குச் சுலப சிகிச்சை.



தயை செய்து கீழ் குறிக்கும் நிகழ்ந்த சம்பவத்தைத் தங்கள் பத்திரிகையின் வாசகர்கள் கண்ணுறுமாறு பிரசுரிக்கக் கேட்டுக் கொள்கிறேன்.

ஓர் நாள் எனது பர்மாக்கார நண்பர்களிலொருவரிடம் ஓர் காரணத்தைப்பற்றிப் போயிருந்தேன். சம்பாஷித்துக்கொண்டிருக்கும்போது இடையில் தாம் கல்லடைப்பினுல்சிறுநீர் வெளிப்படாமற்போய் கஷ்டிப்பட்டுக்கொண்டிருந்து ஆச்சர்யப்படும்விதமாய் குணமடைந்ததைப்பற்றித் தெரிவித்தார். இவ்வியாதியைப் போக்கத் தமக்குத் தெரிந்த டாக்டர்களிடமறிவித்து உள்ளுக்கு அவிழ்தம் சாப்பிட்டு சவுக்கியப்படுத்திக்கொள்ளலாமென்று எத்தனஞ் செய்தபோது டாக்டர்கள் அதினுற் பயன்படாது; சிகிச்சை செய்து கல்லை வெளிப்படுத்தவேண்டும். உள்ளுக்கு மருந்து சாப்பிட்டால் பிரயோஜனப்படாது என்று மறுத்து, சிகிச்சைக்கு முக்கிய இடம் ஆஸ்பத்திரிதான் என்று வற்புறுத்திச் சொன்னுர்கள். தாம் அதற்கு மனஞ்சாயாமல் வீட்டுக்குத் திரும்பும்போது வழியில் தமது சிநேகிதர் ஒருவரைச் சந்திக்க நேர்ந்தது. அவரிடம் தமது குறையைச் சொல்ல அவர் அதற்கு எம்மருந்தும் சாப்பிடவேண்டாம், சிகிச்சையும் செய்துகொள்ள வேண்டாம். தாம் அநுபோகத்தில் அறிந்ததான எலுமிச்சம்பழச் சாற்றில் ஒரு துண்டு கந்தகமும் கொஞ்சம் சீனியும்சேர்த்து ஒரு டம்ளர்ஜலத்தில் சர்பத்து செய்து அருந்தச்சொன்னுர். அதற்கிசைந்து அப்படியே செய்து சாப்பிட 1-மணி நேரத்துக்குள் சிறுநீர் வெகு பலத்தோடு ஒருகல் (குண்டு மணி பிரமாணம்) வெளிக்கு கொண்டு வந்துவிட்டதாம். பிறகு குணமடைந்தாராம். இதைக் கண்ணுறும் நண்பர்கள் தமக்குத் தெரிந்த எவரேனும் இக்கொடிய நோய்க்குட்பட்டிருந்தால் பரீக்ஷித்துப் பார்க்கச் சொல்லவும்.

கா. வீ. சாமிவேல்,
மோல்மேன்.

[கந்தகமென்பது சுத்தி செய்த கந்தகமாயிருத்தல் அவசியம். அது பாஷாண வகைகளில் ஒன்ருதலின், அதைச் சேர்த்து அருந்துவதில் அபாயம் நேரக்கூடும். எனவே, தக்க அனுபவமுள்ள வைத்தியரிடம் இதைப்பற்றி ஆலோசித்தேதான் எதுவும் செய்யவேண்டும். வைத்தியரைக் கேட்காமல் செய்யவொண்ணுது. மேலும், ஒரு துண்டு கந்தகமென்று மட்டும் இதில் குறிப்பிட்டுள்ளது. ஒரு துண்டு என்ருல் எவ்வளவு எடை என்பதையும் இதை எழுதினேர் தெரிவிப்பாராக. நீர் இறங்காமல் மூத்திர துவாரம் அடைபட்டுக் கொள்ளும் வியாதி மிக்க பாடானதென்றே அனுபவித்தவர் கூறுவர். இதற்கு இந்த சிகிச்சை பயன்படின் பெரிய உபகாரமே. ப-ர்.]

# பிரபா



## சதீ குண்டத்தில்

வஸந்த காலத்து இளந் தென்றலில் அசைந்தாடிய பலவகை விருக்ஷ ஜாதிகள் பிராதக்காலத்து பாலசூரியனின் கதிரொளியில் மந்தஹாஸம் புரிவதுபோல் விளங்கின. இராஜ குமாரியான பிரபா பறவைகளின் இனிய நாதத்தைச் செவியுற்றும், நறுமணங் கமழும் இளந்தென்றலின் இன்பசுகத்தை அனுபவித்தும், உல்லாசமாய்க் குளிர் நிழல் விரிக்கும் லதாக் கிருகத்தில் உலாவிக்கொண்டிருந்தாள். நவ யௌவனம் பூத்து மந்தஹாஸத்துடன் விளங்கும் அந்நங்கையின் வடிவம் 'சந்திரபிம்பத்தை உடைத்து வார்த்தெடுக்கப் பெற்ற நாரீமணி இவள்' எனக் கண்டோர் வியந்து கூறத்தக்க அமுத எழிலாயிருந்தது. பிரபா ஒரு மரக்கிளையில் இருந்த பறவையை நோக்கிக் கொண்டு பின் வருமாறு கூறினாள்:—

"தோழீ! அதோ பார்! அப்பறவை எவ்வளவு ஆனந்தமாகப் பாடுகின்றது. இதுபோல் ஒரு பறவையாக முடியுமானால் நான் எவ்வளவோ ஆனந்தமடைவேன்."

உமா:—(இதுவே அத்தோழியின் பெயர்) புன்னகையுடன் அதென்ன நீ கூறுவது?

பிரபா அப்பறவையை நோக்கிய வண்ணம் மீண்டும் கூறினாள்:— "அந்தப் பெரிய மரத்தின் கிளைகளிலிருந்து பாடும் பறவைகளின் இன்னிசையால் இப் பிரதேசம் ஆனந்தமாய்த் திகழ்வதைப் பார்! ஆ! என்ன சுதந்தரம்! என்ன பரமானந்தம்!

உமா:—நவ கட்டத்தின் இராணியாகப் போகிறவளுக்கு இப் பறவைகளின் கானத்தை மட்டுந்தான் கேட்கக் கூடுமோ? இதைவிடப் பன்மடங்கு இனிமை............"

பிரபா நாணத்தோடு அவளைத் தடுத்துக் கூறினாள்:—எனக்கு நவ கட்டத்தின் இராணியாக வேண்டுமென்ற எண்ணமேயில்லை. நிசப்தமான ஓர் ஆற்றங்கரை, மனோகரமான ஓர் வீணை, அழகிய பறவைகள்,— இவ்வளவே நான் விரும்புவது. மதுரஸ்வரத்தைப்போல் பண்டிதனுக்கும் பாமரனுக்கும், குபேரனுக்கும் குசேலனுக்கும், துஷ்டனுக்கும், சிஷ்டனுக்கும், பசுவுக்கும், சிசுவுக்கும் ஒரே விதமான சந்தோஷத்தை அளிக்க வல்லது வேறொன்றுளதோ?"

பிரபாவுக்கு சங்கீதத்தில் அளவு கடந்த பிரியம் இருந்ததென்பதை அவளது சம்பாஷணையி லிருந்தே நன்கு உணரலாம். உமா அதற்குப் பதிலளிக்குமுன் சற்று தூரத்தில் எழுந்த ஓர் அபூர்வமான கீதத்தொனி இருவர் கருத்தையும் கவர்ந்தது.

"கர்கயே தோடே தின்கீ ப்ரீதி"
(சில நாட்கள் என்னை நேசித்துச் சென்றாய்.)

ஃ

பிரபா அப்பாட்டில் ஈடுபட்டுப் பரவச மெய்தி, "அன்பெனும் ஆறு

---

பிறருக்குக் காலணா தருவதும் கிடையாது; பிறரிடம் காலணா தான் கடனாக எதிர்பார்ப்பதும் கிடையாது. இது சிலரது பிறவிக் குணம்!

கரையது புரள, உரை தடுமாறி உரோமம் சிலிர்ப்ப," சிறிது நேரம் இருந்துவிட்டு, தோழியை நோக்கிக் கூறினள்:— "சோதரீ! அத் திவ்விய பதங்களின் சக்தி எல்லே கடந்தது. நான் இதுபோன்ற மனேகரமான பாட்டை இதற்கு முன் கேட்டதில்லே. நீ போய் அப் பாடகனே அழைத்து வா."

ஃ

அந்த சக்தி வாய்ந்த கீதம் உமாவின் கடின இதயத்தையும் உருகும்படி செய்ததால் "இதுபோன்ற பாடலே இதற்குமுன் நானும் கேட்டதில்லே" என்று கூறிக்கொண்டே ஓடிப்போய் அப் பாடகனே அழைத்து வந்து பிரபாவின் முன் விடுத்தாள். பாடகர் திடகாத்திரமுள்ள சுந்தர புருஷனய் விளங்கினர். அவர் நெற்றியில் விபூதி திரிபுண்டாமும் சந்தனமும் விளங்கின. வண்டெனக் கருத்த மீசை தாடிகளுடன் கூடிய அவரது சுந்தர முகமண்டலம் அபூர்வ சேர்வையுடன் ஒளிர்ந்தது. கழுத்தில் ருத்திராக்ஷ மாலேகளும், அரையில் ஒரு காவியாடையும், கையில் ஒரு வீணேயும் காணப்பட்டன. அச் சந்நியாசியின் முக கமலத்தில் ஒரு யோகியின் தேஜஸ் தாண்டவமாடிக்கொண்டிருந்தது. ஒரு தியாகியின் லக்ஷணங்கள் இடை யிடையே தோன்றிய தெனினும், அவர் முகத்தில் தவழ்ந்த புன்னகை எத்தகையோரையும் மனன சஞ்சலத்துக் காளாக்குவதாயிருந்தது. அவர் தமது அன்பு நிறைந்த பார்வையை இருவர்மீதும் செலுத்திவிட்டுத் தலே குனிந்துகொண்டு கீழே உட்கார்ந்தார். பிரபா அவரை ஒரு முறை யேறெடுத்து நோக்கி விட்டு நாணத்தோடு தலேகுனிந்து நின்றுள்.

உமா:—சுவாமீ! தங்கள் பாட்டைக் கேட்கவே நான் தங்களே அழைத்து வந்தேன்.

யோகி:—ஸ்ரீமத் நாராயணனின் திருநாமங்களே உச்சரித்த வண்ணம் உலகெங்கும் அலேந்து திரியும் என் போன்ற சந்நியாசிக்கு ஒரு மகாராணியின் முன்பு பாடும் திறமை கிடையாது. ஆயினும், தாங்கள் வேண்டிக் கொள்வதால் எனக்குத் தெரிந்த சில பாடல்களேப் பாடுகிறேன். அம்மணி! பார்த்தீர்களா! ஒரு சாண் வயிற்றின் பசியை அடக்க மனிதர் என்னவெல்லாம் வேடமணிய வேண்டியிருக்கிறது!

ஃ

அவர் வீணேயை மீட்டிக் கொண்டு மெல்லிய இன்னிசையில்,

"கர்கயே தோடே தீங்கீ ப்ரீதி"

என்று பாடுவதானர்.

யோகியின் மதுரமான கண்டஸ்வரமும், வீணேயின் இன்னெலி முழக்மும், எல்லாவற்றையும் விட சிறந்த அமுத கீதமும் பிரபாவின் இதயத்தைக் கவர்ந்தனவென்று எடுத்துரைக்க வேண்டியதில்லே. அவரது விநோத குணமும், மதுரகீதமும் ஒன்றுக்கொன்று ரம்மியமானதோர் அபூர்வத் தொடர்பு கொண்டவையாகும். சுருங்கக் கூறின், வெறுங் கையோடு வந்த பாலிய சந்நியாசி பிரபாவின் பெரிய ஸன்மானச் சுமையைச் சுமந்துக்கொண்டு சதிகுண்டத்தை விட்டு நீங்கினர்.

ஃ

ககன மண்டலத்தில் மனேகரமான வீணு நாதம் எப்படி முழங்கியதோ, அதுபோல் பிரபாவின் இத

---

வெளி அழகும் உடைகளின் சிருங்காரமும் சரிதான். உள்ளுக்கு என்னென்ன அந்தரங்க நோய்கள் பிடித்து நாறிக்கோணித் தியங்குகின்றனரோ? எவர் கண்டார்?

யத்திலும் அதே பிரதித்தொனி உயர்ந்தெழுந்து கொண்டிருந்தது. இதுகாறும் சாந்தமும் சுதந்தரமு முடையதாயிருந்த இராஜ குமாரியின் இதயம் அவளறியாமலே தவித்து இன்பக் கனவுகள் காணத்தொடங்கி யது. மலரை மருவித்தேனுண்டு களிக்கும் வண்டுகளின் ரீங்காரத் தொனி, அவள் காதுகளில், "கர்கயே தோடே தின்கீ ப்ரீதி" என்னும் திவ்விய பாடல்போல் ஒலித்தது. நவமான தளிரிலைகள் நிறைந்த மாக்கிளைகளில் இருந்து பறவைகள் விதம் விதமாய்க் கூவுவதும், "கர்கயே தோடே தின்கீ ப்ரீதி" என்று பாடுவதுபோல் அவளுக்குத் தோன்றியது. அவள் இதயமும் வீணையினின் றெழுந்த அமுத கீதத்தில் ஈடுபட்டு சதா "கர்கயே தோடே தின்கீ ப்ரீதி" என்று கானம் செய்துகொண்டிருந்தது.

## II

பிரபா 'பதவுலி' சமஸ்தானத்தின் பிரபுவாகிய 'ராவ் தேவீசந்'தின் ஒரே மகள். தேவீசந்த் விஷ்ணு பக்தியும், உதாரகுணமு முடையவரா யிருந்ததால், வெகு தூரத்திலிருந்தும் பல பாடகர்களும் கலாஞான முடையவர்களும் அவர் தயவை நாடி வந்து கொண்டிருந்தனர். பால்ய முதல் பக்த கோஷ்டிகளோடு பழகியதாலும், பகவத்தியானம் செய்யும் தந்தையோடு சதா சகவாசம் செய்து வந்ததாலும், பூர்வ ஜன்மத்தின் பயனாலும் பிரபா சங்கீத வித்தையில் அபார ஞானமும் பயிற்சியும் பெற்றாள். அவளது குரலோ இன்பத்திரளாக கந்தர்வ கானமாக இருந்தது.

ஃ

ராவ் தேவீசந்த் அவளை 'ஹரிசந்தரன்' என்னும் வாலிபனுக்கு மணஞ் செய்து கொடுப்பதாக உறுதி கூறியிருந்தார். ராஜா ஹரிசந்திரன் ஆஜிமீரில் 'மேயோ' காலேஜில் உயர்தரப் பரீட்சைக்குப் படிக்கும் மாணவனாயிருந்ததால் பிரபாவின் கலியாணத்திற்குக் காலதாமதம்நேர்ந்தது. அவன் கல்விக்கு ஏதேனும் இடையூறு நேர்ந்துவிடக்கூடுமென நினைத்து தேவீசந்த் தமது குமாரத்தியைப் பார்க்க அவனுக்கு அனுமதி யளிக்கவில்லை.

ஃ

ஆனால், அழகுவாய்ந்த யுவயோகியின் பாடலைக் கேட்டதுமுதல் பிரபாவின் இதயம் அவர் தியானத்திலேயே மூழ்கியிருந்தது. ராஜா ஹரிசந்திரனை மணப்பது அவளுக்கு இஷ்டமில்லை. அவள் தனது இரகசியங்களை உத்தம தோழியாகிய உமாவிடமும் கூறாமல் மறைத்து வைத்திருந்தாள். எனினும், உமாவுக்கு அன்றே அவள் மீது சந்தேகம் பிறந்தது. நாளடைவில் பிரபா உணவையும் ஸ்நானத்தையும் வெறுத்து வாடித் தளர்வதைக் கண்ணுற்றபோது அவள் சந்தேகம் உறுதியாயிற்று; ஆனால் அதைப்பற்றி வினவினால் பிரபாவின் மனசஞ்சலம் அதிகரிக்குமென்று நினைத்து உமா அதைப்பற்றி வினவவில்லை. "அந்த யோகியின் நினைவை உண்டுபண்ணக் கூடிய பொருள் யாதொன்றும் சதீகுண்டத்தில் இல்லையாதலால் பிரபா அவரை விரைவில் மறந்துவிடுவாள். கேவலம் தற்செயலாய் ஒருமுறை சந்தித்ததால் எழுந்த அந்நூதனக் கவர்ச்சி நாளடைவில் மறந்துவிடும். ஆகவே, நான் அதை என் தழைத்

---

ஒருவர் தமது தாய்ப்பாஷையைப் பிறர் ஏளனம் செய்யும்படி நடந்து கொண்டாராகில், அவரைக் காட்டிலும் தேசத்திற்குக் கடுங்குற்றம் செய்தவர் யாரும் இருக்க மாட்டார்கள். (புரொபசர் சிவராஜ்.)

தோங்கச்செய்த இராஜகுமாரியைத் துன்பத்துக் காளாக்கவேண்டும்?''—என்றவிதமான சிந்தனைகளே உமாவின் மௌனத்துக்குரிய காரணம்.

ஃ

சாமர்த்தியமுள்ள அத்தோழியின் அனுமானங்கள் பலவும் வீணாயின. அவ்வாலிப யோகியின் அழகிய உருவம் பிரபாவின் கண்களெதிரே நீங்காது நின்றது. அவர் பொழிந்த இனிய கீதம் காதுகளில் எப்போதும் ஒலித்துக்கொண்டிருந்தது. "என் மனத்தில் கோயில் கொண்ட அவரை இன்று பார்க்கலாம்; அவரது இனிய கீதத்தை இன்று கேட்கலாம்'' என்று நினைத்து அவள் முன்போல் லதாக்கிருகத்தில் உலாவிக்கொண்டிருந்தாளாயினும், அவரை மறுமுறை பார்க்கவோ, அக்கீதத்தை கேட்கவோ அவளுக்கு பாக்கியம் வாய்க்கவில்லை. எனினும், அவள் இதயத்தில் எழில் நலங்கனிந்த யோகியும், அவர் வீணையில் விளையாடிய ராகாதி இசைகளும் சதா தோன்றிக்கொண்டிருந்தது. சிலவேளைகளில் தனது காதலனது பாட்டுத் தெருவில் கேட்பதாகப் பிரமித்து வெளியே ஓடிவந்து பார்ப்பதும், ஏமாறி மனமுடைந்து கீழ்வருமாறு சிந்தித்துக்கொண்டிருப்பதுமே வழக்கமாகக் கொண்டாள்.

ஃ

"ஈதென்ன நிலைமை? நானோ ஒரு வைஷ்ணவக் கன்னிகை. பெற்றோர் என்னை எவரிடம் ஒப்புவிக்கிறார்களோ அவரை மணவாளனாக ஏற்றுக்கொள்வது என் கடமை. பரபுருடரைப்பற்றி நினைப்பது கொடிய பாவம் என்று சாஸ்திரங்கள் முறையிடுகின்றன. கலியாணமான பிறகு ராஜா ஹரிச்சந்திரனைக் களங்கம் நிறைந்த இதயத்தோடு நான் எங்ஙனம் பார்ப்பேன்? அவரது அன்பான வார்த்தைகளை எங்ஙனம் கேட்பேன்? அவ்வார்த்தைகள் என் உள்ளத்தில் இராமபாணம்போல் பாயாதிருக்குமோ? என் அன்பிற்குரிய யோகீ! தாங்கள் என் இதயத்தை விடுத்து, விரைவில் செல்லுங்கள்! இப்பதவி தங்கள் கௌரவத்திற்குத் தகுதியன்று. என் ஜீவிதம் என் ஆதீனத்தில் மட்டுமிருந்தால், நான் தங்களை என் இதயகமலமாகிய மஞ்சத்தில் கிடத்தி, சரச சல்லாபமென்னும் தாலாட்டால் மகிழ்வித்து, ஒய்வின்பமாகிய நித்திரையை அளித்திடும் பதவியைத் தந்திருப்பேன்.''

ஃ

கலியாண நாள் நெருங்குந்தோறும் பிரபாவின் முககமலம் வாடத் தலைப்பட்டது. அவள் அடிக்கடி விரக வாதனையால் எழுந்த பலவித சிந்தனைகளால் வியாகூல மடைந்து, "வேண்டாம்—எனக்கு இத்துன்ப வாழ்க்கையே வேண்டாம். எவ்விதமாயினும் நான் என் உயிரைப் போக்கிக் கொள்வதே நலம்'' எனத் தீர்மானிப்பாள். மறுகணம், "என்ன மதியீனம். நான் இறப்பதா? தந்தைக்கு நான் ஒரே மகள்; அவரது ஜீவிய சொத்து; பிராணதாரமான துணை, அந்திய காலத்தின் ஆசை,—இதெல்லாம் நானன்றோ? நான் இம்மதியற்ற செய்கையைச் செய்வேனாயின் அவர் எவ்வளவு துன்பம் அனுபவிப்பார். என்னால் உண்டாகும் பாவம் பரலோகத்திலும் என்னை விடுமோ? ஐயோ!

---

இருவருள்ளும் ஒரு சமரஸத்தை யுண்டு பண்ணுவதின் பொருட்டு ஒரு வழியைக் கண்டுபிடிப்பதற்காகப் போகும் பாதையில் என்னென்ன சச்சரவுகளேற்படுமோ!

அவர் விருப்பத்திற்கு மாருக நடக்க என்ஞல் இயலாது. என் அன்புள்ள தந்தையே! நான் தங்கள் இருதயத்திற்கு மாருக ஏதேனும் செய்திருந்தால், ஏதேனும் என் மனதில் நினைத்திருந்தால் தாங்கள் அதை யெல்லாம் மன்னித்து என்னை ஆசீர்வதியுங்கள்!" என்று அவள் வேறு விதமாய் நினைத்துருகுவாள்.

## III

திருமணம் வெகு சிறப்பாக நடந்தேறியது. அன்பின் களஞ்சியமாகிய மகளை விட்டுப் பிரிவதால் உண்டான விசனத்தை சகித்துக்கொள்ள மாட்டாமல் ராவ் தேவீசந்த் தமது மகளைப் பன்முறை தழுவிக்கொண்டார். பிரபா தேம்பித் தேம்பி அழுது கவலைத் தீயால் தவிக்கும் தந்தையின் இதயத்தைக் கண்ணீர் வெள்ளத்தால் அபிஷேகம் செய்தாள். உமாவோ தன் தோழியின் பிரிவை நினைத்து ஆற்ரெண்ணுத்துயரமடைந்து பித்து பிடித்தவள் போல் அங்கு மிங்கும் விரைந்தோடினுள்.

ஃ

நவக்கட்டம் சிறிய தேசமாயினும் மிக உன்னத நிலையிலிருந்தது. ஆங்கு புராதனக் கோவில்களும் கோபுரங்களும் மாட மாளிகைகளும் மாண்புற விளங்கினதுமன்றி, இப்போது ராஜா ஹரிசந்திரனின் கட்டளைப்படி வெகு திறமை வாய்ந்த சிற்பிகளால் கோமளாங்கியான பிரபா . வாழ்வதற்கு மனேல்லாசமான ஓரின்ப மாளிகை அமைக்கப் பட்டிருந்தது. அதில் அவள் அழகுக்கு அழகுசெய்யப் பணிப் பெண்களும், வேலையாட்களும் நிறைந்திருந்தனர். முதன் முதல் ராஜா ஹரிசந்திரன் அலங்காரமான அந்தப் புரத்தில் நுழைந்தபோது பிரபா தலை குனிந்து தாழ்ந்து வணங்கி நின்ருள். அத்தருணம் அவள் கண்களில் நீர் பெருகியது. அது ஆனந்தத்திஞலோ துயரத்திஞலோ அறியோம். காதல் வெள்ளத்தில் நீந்திய நாயகன் அவளை மெல்ல அணுகி அவள் முகத்தை மறைத்திருந்த மெல்லிய துகிலை நீக்கி அன்பொளி வீசி நின்ருன். ரத்தினதீபம் போல் ரமணீயமா யிருந்த பிரபாவின் முகம் அப்போது பிரகாசமற்றிருந்தது. அவளது சுந்தரவதனம் அன்றலர்ந்த செந்தாமரை புஷ்பம்போல் வசீகரமும் மந்த ஹாஸமும் குடி கொண்டதாக இருந்துவந்ததென்பதை அவன் அறிவான்; ஆனல் அது அப்போது மிகவும் வாடியிருந்தது. எனினும், மதுமாரி சொரிகின்ற மலர்களைச் சுற்றித் திரியும் தேனீயைபோல் ராஜா ஹரிசந்திரன் அபூர்வ சுந்தரியாகிய பிரபாவைச் சுற்றித திரியலானுன். அவனுக்கு இன்பக் கேளிக்கை விநோதங்களைப்பற்றிய சிந்தனை கொஞ்சமும் உண்டாகவில்லை. காளைப்பருவ மடைந்த அவ்வாலிபன் கோமளாங்கியான இளங்காதலியின் வெறும் வார்த்தைகளை 'மெல்லிய மதுரகீதம்' என்றும், மனத்தை 'இன்பாமிர்த சாகரம்' என்றும், மதி முகத்தை 'ஆனந்த நிலயம்'

---

படித்த சிலருக்குத் தங்கள் படிப்பைத்தவிர வேறு உலக காரியம் ஏதும் தெரிவதில்லை. தன் வீட்டைப் பழுது பார்ப்பதற்கு இன்னின்ஞரைத் தருவித்து இன்னின்ன விதமாக வேலைவாங்கி முடிக்கவேண்டுமென்றுகூட விளங்குவதில்லை. பழுதுபார்க்க முதலில் ஏழு ரூபாய்க்கு ஒரு வண்டி சுண்ணும்பும், நாலணுவுக்கு ஒரு வண்டி மணலும் கொண்டுவந்து அரைக்கக் கூலி மூன்று ரூபாய் போலத் தந்து பிறகே மற்றவேலை தொடங்கவேண்டுமென்று ஒருவர் சொல்லித் தரவேண்டியதா யிருக்கிறது.

என்றும் நினைத்து நினைத்து நாட்களைப் போக்கினன்.

ஃ

அந்தோ! பாவம்! பிரபா தன்னந் தனியளாய் வீற்றிருக்கையில் அவளது சஞ்சலமனம் சதீ குண்டத்திற்கு விரைந்தேகும். உடனே அங்குள்ள திவ்விய நீர் நிலைகளில் தட்டுத் தடங்கலில்லாத ஆகாசத்தின் நீல நிறங்காட்டும் நளிர்மணி நீரும், காற்றில் அசைந்தாடும் நக்ஷத்திரங்களைப் போன்ற கமலங்களும், இந்திரனின் ஜயத்தம்பங்கள்போன்று செழித்து வளர்ந்து மலர்கள் நிறைந்து அழகாய் விளங்கும் செடி கொடிகளும், மன்மதனின் மோகனாஸ்திரம் போல் அசைந்தாடி யணுகும் உமாவும், அழகு வாய்ந்த அந்தப்பால சந்நியாசியும் அவனெதிரில் தோன்றுவதோடு அவள் செவியிற் "கர்கயே தோடே திங்கி ப்ரீதி" என்ற திவ்விய கீதமும் புகுந்து முழங்குவது போலிருக்கும். அச்சமயம் அவள் பெருமூச்சு விட்டுக்கொண்டு வெளியே வந்து மரக் கிளைகளில் இருந்து உல்லாசமாய் விளையாடும் பறவைகளைக் கண்ணுற்று சாந்த மடைவாள். இவ்வாறு அந்த ஏகாந்த தினக்கனவுகள் சிறிது சிறிதாய் மறைய, இருள் நிறைந்த அவள் இதயம் மட்டும் தனித்திருக்கும்.

ஃ

துயரம் தோய்ந்த முகத்தினளான பிரபா ராஜா ஹரிசந்திரனின் மனைவியாகி ஆறுபூர்ணிமை தோன்றி மறைந்தன. அவளது தவிக்கும் உள்ளத்திற்கு இன்னும் மாறுதல் ஏற்படவில்லை. ஒரு நாள் ஹரிசந்திரன் மகிழ்ச்சி குன்றிய பிரபாவை தனது சித்திரப்படக் காட்சிச்சாலைக்கு அழைத்துச் சென்றான். புராண இதிகாச சம்பந்தமான அழகிய சித்திரங்களால் அம்மண்டபம் அலங்கரிக்கப்பட்டிருந்தது. வீரனான மகா ராணா பிரதாப சிம்மனின் படம் முன்னணியில் வைக்கப்பட்டிருந்தது, அவரது சுந்தாமுக மண்டலத்தில் சௌரியத் தேஜஸ் தாண்டவமாடுவது போல்தோன்றும். அதனருகே சுவாமி பக்தியுள்ள 'ஜக்மலின்', அதி தீரனான சம்கன், வீரனான துர்க்காதாஸன் ஆகியவர்களின் படங்கள் சோபித்தன. இடது பக்கம் உதாரகுண முடைய பீமசிம்மனின் படம் முன்னே மாட்டப்பட்டிருந்தது. மகத்துவமிக்க அப்படத்தின் எதிரே வீரனான மகாராஷ்டிர சிங்கம்—மஹாராஜா சிவாஜியின் படம் பொலிந்தது. காட்சிச்சாலையின் மற்ற பக்கங்களில் கர்ம போகியான ஸ்ரீகண்ணன், ஏகபத்தினீ விரதனான ஸ்ரீ இராமபிரான்—இவர்களின் படங்கள் திகழ்ந்தன. சுருங்கக்கூறின், அக் காட்சிச்சாலை பெருமை வாய்ந்த சித்திரக்காரனின் திறத்தை எடுத்துக் காட்டுவதுபோல் விளங்கியது.

(மற்றதில் முடிவு.)

த. சு. சங்கரலிங்கம்.

---

ஒரு தாசியுடன் கோயிலுக்குப் புறப்பட்டால் அவள் தங்கையும், அவள் தாயும், இவர்களைச் சேர்த்துவைத்த மாமாவும், இன்னும் துணைக்கு இரண்டொருவருமாகக் கூடவந்து விடுகிறார்கள். இவர்களுக்குக் கோயிலிலே நெய் அதிரஸம், நெய் முறுக்கு, நெய் வடை முதலியதுகள் வாங்கிக்கொடுத்து வெளியில் வந்ததும் சோடா புட்டிகள் தாகம் தீரத்தந்து பிறகு புஷ்பக்கடைக்குள் நுழைந்து, அப்பால் பழக்கடையும் பார்த்துவிட்டு வீடுசேருவதற்குள் ஐயாவின் பணம் நாலைந்து ரூபாய் ஆகி விடுகிறது!

## குடும்ப விநோதக் குறள்.

### 6. விகல்ப சிந்தை.

1. வெந்திடவே செய்யவல வேறுபடும் நெஞ்சமது
நொந்துமிகப் புண்விளைக்கும் நோய்.

2. அன்பென்னு மின்பரசம் அற்றவுடன் துன்புசெய்யும்
மாறுகுணஞ் சீறிவரு மே.

3. வீண்கலகஞ் செய்திடுவோர் வேறுகொளும் நெஞ்சம
தான் கலங்கித் தான்கெடுவோர் தான். [தால்

4. இன்பமொழி துன்பமொழி யாய்த்தோன்றும் இன்ப
வன்புசெயுந் துன்பர் தமக்கே. [மிலா

5. மகிழ்வான பேச்சில் மனமுடையச் சொல்வார்
விகல்பமன மே; உண்டோ வேறு?

6. பேச்சுக்குப் பேச்சுப் பிணங்குவார்; நாய்போல
வீச்சுவீச் சென்றலறு வார்.

7. குட்டிக் கலகம் கோரணிக் கூத்துகள்
முட்டிக்கொண் டேயிருக் கும்.

8. தாயும் புளிப்பென்றால் சாற்றுவதேன்? இந்தவிதம்
பேயும் வெறுக்குமோ பேசு.

9. அன்பைப் பெருக்கின் அகன்றுவிடும் பேய்க்குணம்
இன்பங் குதிகொள்ளு மே.

10. விகல்ப மனதால் விளைந்ததேன்? யாரும்
அகற்றி ஒதுக்குவது தான்.

T. S. குழந்தைவேல் முதலியார்.

---

எவர் எளியவரோ, எவர் பரோபகாரமான ஒரு ஸத்கைங்கரியத்தி லீடுபட்டு உதவியின்றித் தவிக்கின்றனரோ, எவர் ஆபத்து நஷ்டங்களுக்குள்ளாகி அலறுகின்றனரோ, எவர் விவாகம்போன்ற பிரதான விஷயத்தில் மேற்கொண்டு செலவுக்கின்றி கண்விழி பிதுங்குகின்றனரோ, எவர் பட்டினியோ— அவர்கட்கு உதவுவதே தானமாகும். தானத்தில் ஜாதி பேதமில்லை. இன்ன ஜாதிக்குச் செய்தால்தான் அதிக புண்ணியம் வருமென்பது அறியாமை. கடவுள் எல்லா ஜாதிக்கும் பொது. ஜாதியில் உயர்வு தாழ்வு என்பது பொய்.

# குடும்ப நிர்வாக கஷ்டம்.



சென்ற மகா மகத்துக்குக் கும்ப கோணத்தில் நான் பட்ட பாட்டை இப்பொழுது மறுபடியும் நினைத்துப் பார்க்கிறேன். நான் கும்ப கோணத்தில் குடியிருந்துவிட்டதும் போதும்! என்னைத் தேடிக்கொண்டு மகாமக உத்ஸவம் பார்க்க வந்து என் வீட்டில் குந்திவிட்ட விருந்தினர்களின் பிடுங்கல்களும் போதும்! பால் கிடைக்காமல சீமைத் தகர டப்பிப் பாலைக் காப்பிக்கு உபயோகப்படுத்த நேர்ந்தது. இந்த வகையில் எனக்கு ஆன செலவுகள் ரூபாய் 300-வரை எட்டிவிட்டது. கும்பகோணத்தில் இருக்கப் பயந்துகொண்டு மாயவரத்திற் குடியேறினேன். அங்கும் துலா காவேரி ஸ்நானத்திற்காக வந்தவர்கள் நான் அங்கு இருப்பதை அறிந்து வந்து குந்திக்கொண்டார்கள். காலைப் பலகாரச் செலவையாவது அவர்கள் வெளியில்போய் தங்கள் கைப்பணத்தில் பார்த்துக்கொண்டால் எனக்குக் கொஞ்சம் சிரமம் குறையும். எல்லோருமே காலைப் பலகாரத்திற்கு வீட்டில் வரிசையாக உட்கார்ந்துவிடுகிறார்கள். என் செய்வது ஈச்வரா! யார் தாலியை யறுத்துச் செலவிடுவது தேவா! இவர்களுக்கு நான் இப்படி ஏதாவது செலவுகள் வைத்திருக்கிறேனா? ஏதோ ஒருவன் உழைத்து இரண்டு காசு தேடி வீடுவந்தால் அதை இப்படிக் கரைக்கப்பார்ப்பது நியாயமா? பந்துவில் ஒருவனுடைய தாய்க்கும் அவனுக்கும் சண்டையென்றால், இதில் அவன் தாய் கோபித்துக் கொண்டு ஒரு மாதம் என் வீட்டில் உட்கார்ந்து விடுகிறாள். அவனுக்கோ அவளைப் போஷிக்கும் செலவு லாபமாகி அந்தச் செலவு என் தலைமேல் விழுகிறது. இப்படியே பல சாக்குகள் வைத்து அடிக்கடி என் இல்லத்தை ஏதோ தர்மசத்திரம் என்றெண்ணிப் பலமாய் உட்கார்ந்து விடுகிறார்கள். இவர்களை யெல்லாம் தாங்கிச் சமாளிக்க யாராலிருக்கிறது! என் சம்பளமோ மாதம் 40-ரூபாய். புருஷன் பெண்டாட்டிக் குடித்தனம் என்று பெயரே தவிர, விருந்துகள் இல்லாத நாள் கிடையவே கிடையாது. என் கடனோ 400-ரூபாய்க்கு ஏறிவிட்டது. கடன் தந்தவர்களின் நிர்ப்பந்தம் தாங்க முடியவில்லை. கடன் வாரண்டு வருமென்று தெரியவே என் மனைவியையும் குழந்தையையும் தாய் வீட்டுக்கு அனுப்பிவிட்டு வீட்டைப் பூட்டிக்கொண்டு என் எஜமானருடைய மற்றொரு கடையிருக்கும் இன்னொரு தூர ஊருக்கு என்னை மாற்றிக் கொண்டு போய்விட்டேன். இந்தத் திண்டாட்ட சமயத்தில் என்னைக் கடன்பட வைத்து உண்டு உருட்டியவர்கள் துணையாக உதவ வருவார்களா? அது ஏது இனி!

ஃ

---

அது தன் தேகத்துக்கு எத்துணையோ அழகு தருவதாய் விளங்கினும் அதைப் போற்றிப் பாராட்டி மதிப்புடன் விரும்புவர் ஒருவர் இருந்தால் தான் அதற்கும் ஒரு கௌரவமும் உயர்வும் சிலாக்கியமும் ஏற்படும். அவ்வாறில்லாவிடத்து அணிவாரில்லாது வாடி வதங்கி உதிர்ந்து அழியும் அழகிய மலருக்குச் சமமாகவே அதுவும் ஈனப்பட்டு மதிப்பாரின்றிக் கெடும்.

பத்து மாதங்களாக என் மனைவிக்கு ஒரு காசுகூட அனுப்பவில்லை. எத்தனையோ கடிதங்கள் வந்தன. பதில் எழுதவேயில்லை. என் சம்பளம் 40-ரூபாயில் ஒரு பைசாகூட நான் எடுத்துச் செலவிடவில்லை. பிறகு புசிப்புக்கு என்ன செய்தாய் என்று கேட்கலாம். அதைப்பற்றி நீங்கள் விசாரியாதிருப்பதே என் மானத்தைக் காப்பாற்றும் வழியாகும். ஆயினும் நானே சொல்லிவிடுகிறேன். காலையில் நான்குமணிக்கு எழுந்து மூன்று மைல்களுக்கு அப்பாலுள்ள ஊருக்கு நடந்துசென்று அங்கு அரிசிப்பிக்ஷை எடுத்துக்கொண்டு ஒன்பது மணிக்கு வீடுவந்து சேர்ந்து சமைத்துப் புசித்துவிட்டுப் பத்து மணிக்கு என் எஜமானரின் கடையில் தயாராக இருப்பேன். மத்தியானத்தில் நான் கொண்டுபோயுள்ள கட்டுச் சாதத்தைச் சாப்பிடுவேன். இரவு எட்டுமணிக்கு நான் வீடு திரும்புவேன். இரவில் என்னை எவரும் அறியாரென்று எண்ணிப் பல வீடுகளுக்குச் சென்று அன்னபிக்ஷை எடுத்து உண்டு உறங்குவதாயிருந்தேன். இவ்விதம் செய்து என் சம்பளம் 40-ரூபாயை மிச்சப்படுத்திக் கடன்காரருக்கு அனுப்பி 10-வது மாதத்தில் 400-ரூபாய் கடனையும் தீர்த்துவிட்டேன். இந்தக் கடன் தீர்க்க நான் பட்டபாடும் பட்டினியும் பரதவிப்பும் பகவானே யறியவேண்டும். இந்தப் பத்துமாதங்களாக நான் எங்கே யிருக்கிறேனென்றாவது, என் மனைவி மக்கள் எக்கதியானார்களென்றாவது என்னைக் கடன்படவைத்த ஓயாத விருந்தாளிகளான புண்ணியவதிகளும் புண்ணியவான்களும் விசாரித்தார்களா? நான் எங்கோ கடன்காரர்களை மோசம் செய்து ஓடிவிட்டதாகச் சொல்லி என்னை மிகு கேவலமாய் ஏளனம் செய்ததாகக் கேள்விப்பட்டேன்! இந்த ஈனச்சொல்தான் நான் விருந்துகள் செய்ததற்குக் கிடைத்த லாபம்! தாட்சண்யம் தனநாசம் என்பது பொய்யல்ல.

ஃ

பதினொன்றாவது மாதத்தில் மூன்றாவது வாரத்து இரவில் தாயுமானவர் பாடலைப் பாடிக்கொண்டு அன்னபிச்சை எடுக்கையில், அங்குள்ள வீட்டிற்கு விருந்துக்காக வந்திருந்த என் எஜமானர் என் குரலைக்கேட்டு சந்தேகித்து எச்சிற் கையுடனே இலையை விட்டு எழுந்துத் தெருவிற்கு வந்து என் முகத்தை உற்றுப்பார்த்தார். நான் எதிர்பாராத விதயாய் என் எஜமானரை அங்கு கண்டதும் திடுக்கிட்டுக் கண்ணீருடன் நின்றேன். அவர் என்னை அறிந்துகொண்டு இது என்ன அப்பா அலங்கோலம் என்று கேட்டுத் தவித்தார். என் கடன் துன்பங்களை உள்ளபடி கூறிப் பிரலாபித்தேன். அவர் மிக்க வருந்தியவராய் என் விஷயத்தை மறைத்து, தம்முடன் இட்டுச்சென்று புசிக்கவைத்து மறுதினம் எனக்கு 80-ரூபாய் சம்பளம் ஏற்படுத்தி என் மனைவி மக்களை உடனே வந்து சேரும்படி கடிதம் எழுதினர். மூன்றாவது நாள் என் மனைவியும் குழந்தையும் வந்தனர். நான் பிச்சை எடுத்துண்டு கடன் தீர்த்ததை என் மனைவிக்குச்சொல்லி, இனி வரவுக்கு மேற்பட்ட செலவில் எந்த விருந்தும் வேண்டாமென்றும், வீட்டுக் கஷ்டத்தை வணக்கமாக விருந்தினருக்குச் சொல்லி இரண்டொருநாள் உபசாரத்துடன் முடித்து நமஸ்கரித்து அனுப்பிவிடும்படியும் தெரிவித்தார். வரவு 40-ரூபாயானால் செலவு 35-ரூபாய்க்குள் கட்டாயம் முடிந்துவிடவேண்டுமென்றார். என் மனைவி அவ்விதமே நடப்பதாக வாக்கு தந்தாள். கடவுள் கிருபையால் சுகமே வாழ்ந்து வருகிறோம். என் கதையிலிருந்து நீங்கள் தெரிந்து கொண்டதென்ன?




# இராஜ சந்திரன்

## அல்லது—மறைந்த கைதி

### அத்தியாயம்—6.

### தங்கவேலு யார்?

(600-ம் பக்கத் தொடர்ச்சி.)

### VII

கமலா :-அப்படி எனக்குச் சொந்தமான வஸ்து எது? இராஜ சந்திரனு?

கண்ணப்பன்:—நீயே வாய் திறந்து சொல்லி விட்டாய். அவனைப்பற்றிப் பேசவே கிருஷ்ணவேணி இங்கு வந்தாள்.

என்று இராஜ சந்திரனைப் பற்றிய ஸகல விஷயங்களையும் கூறினன். கமலா கண்ணீருடன் நின்றாள்.

கமலா :—நீங்கள் என் தமையனுக்கு உதவி செய்வதில் எனக்கு ஸந்தோஷமே. ஆனல், கிருஷ்ணவேணியின் முகத்தைத் துடைத்தீர்களே அதற்கென்ன அருத்தம்?

கண்ணப்பன் :—அவள் தன் தமயனுக்காகக் கண்ணீர் சிந்தினள். நான் எவ்விதமும் அவனைத் தப்பவைக்கிறேனென்று அவள் முகத்தைத் துடைத்தேன். இது தப்பிதமா?

கமலா :—என்னை ஏமாற்றுகிறீர்கள். நான் ஜன்னல் பக்கம் வந்ததும் நீங்கள் பேசியதைக் கேட்டேன். "நீ என்னைக் காதலித்திருப்பதை நான் அறியேன்" என்றும், அதற்கு மேலும் நீங்கள் சொல்ல வில்லையா? அதன் பிறகு தானே அவளுடைய முகத்தைத் துடைத்தீர்கள்? இதெல்லாம் ஓர் நற்குணப் புருடனுக்கு ஒழுங்காகுமா? இராஜ சந்திரனுக்காகக் கண்ணீர் விட்டாளா? உங்களை மணப்பதற்கில்லாமற் போனதேயென்று கண்ணீர் விட்டாளா? கனம் பொருந்திய வக்கீல் அவர்களே! நியாய ஸ்தலத்தில் வார்த்தையை மாற்றிப் பேசுவது போல் இங்கும் பேசுகிறீர்களா?

கண்ணப்பன் :—என் அன்புள்ள கமலா! என்னை மன்னித்து விடு. நான் பேசியது பொய்தான். அவள் என்னை மணக்கத்தவறியதற்கே கண்ணீர் விட்டாளென்பதை ஒப்புக்கொள்கிறேன்.

கமலா :—பருவ பக்குவயுவதியான ஒரு பெண் என்னதான் தன் சொந்தமாயிருந்த போதிலும் நாணம் விட்டு ஒரு புருடனுடன் இவ்விதம் காதற் பேச்சுகள் பேசலாமா? முதலில் வீட்டின் வாயிற்படி கடந்து வெளியில் வரலாமா? அவளது தகப்பனர் இந்த தேசத்தின் நாகரீகத்தைக் காறியு

மிழ்ந்து விட்டு மேனாட்டு நாகரீகமே மேலெனக்கொண்டு தன் பெண்ணை யும் இவ்வாறு வெளியில் திரியும்படி விட்டிருக்கிறார். அவர் பணக்கார ரானதால், அவர் செய்யும் புது ஆச ரணைகளுக்கு மற்றவர்கள் குற்றம் சொல்லாமல் வாயடங்கி நிற்கிறார்கள். என்னைப் போன்று புராதன நாகரீ கத்தையே பெருமையாக நினைக்கிற வர்கள் இதை யெல்லாம் ஒப்புக்கொள் ளச் சகிக்காது. மார்பில் பாதிபாகம் தெரியும்படி அவள் ஆடையணிந் திருப்பதைப்போல் நான் அணிய என் பிராணன் போனாலும் ஒப்பமாட் டேன். ஆனால், ஆடவர் வர்க்கமாகிய உங்களுக்கு அது இனியதோர் கண் காட்சியாக, கற்கண்டாக, தெவிட் டாத பேரின்பமாக இருக்கலாம். ஏனெனில், ரமணீமணிகளின் ஓவ் வோரு அங்க அசைவுகளினின்றும் புதியதோர் அழகும் வசீகரமும் புலப் படுவதாக எண்ணி உற்று நோக்கு வது ஆண்பாலாரின் ஸ்வபாவம். அதி லும் சுந்தரீரத்நங்களின் மார்பகமோ கைலாச வைகுண்ட தரிசனம் போன் றும், அத்தனை அருமையான கண் கொள்ளாக் காட்சியாய் விளங்குவதாக நினைப்பது கபட உருப்படைத்த ஆட வரின் வழக்கம். அதிலும் அந்த முக்கிய இடத்தில் மேற்பகுதி பிறர் திருஷ்டிக்கு நன்கு புலனாகும்வாறு மார்பிற் பாதிவரையும் தெரியும்படி மேலாடையை யணிதல் இன்னும் உங்கட்குத் தவம்கிடந்து கிடைத்த அரிய வரப்பிரசாதமாகவும் தோற்ற லாம். மேற்பகுதிமட்டுமோ—உட் பகுதியும் தரிசனமாகலாம். இதென்ன அநியாயம்! இதென்ன அக்கிரமம்! இந்தக் காட்சி காணவே தாங்கள் அவளின் வரவை அடிக்கடி ஆவலோ டும் விரும்புகின்றீர்கள் போலும்! அதிலும் அன்னிய ஸ்திரீகளின் லாவண்யமும் நடையுடை பேச்சுக ளும்தான் ஆடவர்களுக்கு மிகுந்த இன்பம் கொடுக்குமாம். இது ஒழுங் காகுமா? ஒழுக்கத்தின் நல்லடை யாளமாகுமா? கிருஷ்ணவேணி எனக் குத் தங்கை. அவளுடைய அக்கா ளாகிய என்னைச் சுகித்த தங்கட்கு அவளிடத்திலும் அந்தரங்கமாய் ஒரு இன்பம் கண்டுவிட ஆவல் போகின் றதா? ரகசியத்தில் நமது அத்தை மகளிடம் நாம் கலந்து சுகித்துவிடு வோம்; பிறகு பகிரங்கமாய் எந்தப் பேயனாவது அவளை மணந்து ரமித் துக்கொள்ளட்டுமென்று நினைக்கிறீர் களா? இந்த ஈன நினைவு புருஷர்க ளாகிய உங்கட்கு சாதாரணமானதே யெனினும், அதனால் உண்டாகும் அலங்கோலம் சொல்லவுங்கூடுமோ? நல்லது, என்னைச் சிறு பிரா யத்தில் நீங்கள் கண்டதன்றி, நான் பெரிய பெண்ணானபிறகு பார்த்திருக் கிறீர்களா? இந்த வாசலைத் தாண்டி நான் வெளிச் சென்றதேயில்லை. என் அத்தை வீட்டிற்கும், என் சிறிய தந்தையின் வீட்டிற்கும் பெண் துணை யுடன் வண்டியில் போய் உடனே திரும்பியதுண்டு. உங்களுக்கென்று நான் நிச்சயிக்கப்பட்டுப்போனதை அறிந்த பிறகே உங்கள் எதிரில் என் பிதாவின் கட்டளைப்படி வந்தேன். ஒரு பெண் தனக்குள்ள எல்லாவற்றை யும் இழந்து விடச் சம்மதித்தாலும், தன் கணவனை இன்னொருத்திக்கு விட்டு விட ஒருபோதும் சம்மதி யாள். அதைவிடத் தன் பிராணன் போவதையே மேலென நினைப்பாள்.

"..................நின் மனக்
கனவெல்லாம் வெளியாக்
கக்கிய பின்ன
ரேது நீயொளிக்குதல்?
இயம்பாய்.

என்று முணமுணத்துக் கொண்டே கண்ணீருடன் சமையல் அறைக்குச் சென்று விட்டாள். கண்

ணப்பன் யாதும் கூறமல் மௌன மாய் இருந்து விட்டு, சீக்கிரம் கிருஷ்ணவேணிக்கு எவ்விடமேனும் விவாகம் நடந்து விட்டால் கமலாவின் சந்தேகமும் தீர்ந்து விடும் என்று எண்ணமிட்டபடி இருந்தான்.

ஃ

சமையல் அறைக்குச் சென்ற கமலா அங்கு ஜானகி கண்ணீர் விட்டழுது கொண்டிருப்பதைக் கண்டு வியப்புற்று, "என்ன, என்னைவிட உனக்கு அதிக வியஸனம் வந்து விட்டது? எல்லோருக்கும் கடவுள் எவ்விதமோ ஒரு துக்கத்தைச் சேர்த்து வைத்திருக்கிறுரே" என்றுள்.

ஜானகி :— அம்மா, பூமியில் என்னைப்போல் பாவிகள் இருக்கமாட்டார்கள்.

கமலா :—என் கதியும் அப்படித் தான் இருக்கிறது. புருஷனை நம்புவதிற் பலனில்லை. தான் மணந்து கொண்டவளைவிட மற்றவளே அழகாகவும் மகிமையாகவும் தோன்றுகிறுள். ஒரு பெண் வலிய அழைத்து, அதற்கு சம்மதப்படாமற் போன ஆடவர்கள் அபூர்வம். அவ்விதமான அழைப்பு எப்போது நேருமோ என்றும் இந்த ஆடவர்கள் தவங்கிடந்து காத்திருப்பார்கள். இடையே இவர்கள் கை துணிய அச்சம்; அவளுக்கோ நாணத்தால் பின்னடைதல்; இதனுலேயே இவ்விருவரும் கற்புகெட்டுப் பாழடையாமல் காப்பாற்றப்படுகிறுர்கள்.

ஜானகி :—ஆம், அம்மா, புருஷர்களின் சங்கதி மிக்க விபரீதம், எவ்வளவு அழகான உடைகள் அணிந்திருந்தாலும் அவர்களின் மனம் நல்லொழுக்க முடையதாயில்லை. என் தங்கையும் இந்த ஆடவர் கூட்டத்துள் ஒருவனுலேயே கெட்டுச் சீரழிந்தாள்.

கமலா :— அப்படியா? ஐயோ பாவம்! அந்த விவரங்களைச் சொல்லு.

ஜானகி :—என் துயரத்தை எங்கு சொல்லித் தொலைப்பேன். என்னுடைய தந்தையின் பெயர் குமாரசாமி முதலியார். அவர் உங்கள் பர்த்தாவான கண்ணப்பரின் தந்தையார் லாயராக இருந்தபோது அவரிடத்தில் இரண்டாவது குமாஸ்தாவாக வேலை பார்த்து வந்தார். என்னுடைய தாய் இளம் பிராயத்திலேயே இறந்து விட்டாள். அவள் இறந்தசமயம் என் தங்கையாகிய அபிராமிக்கு மூன்று வயது. அச்சிறு பெண்ணை என் தந்தை தன்னிடம் வைத்துக் கொள்ள முடியாமல் தன் தங்கையிடம் அனுப்பிவிட்டார். அந்த அத்தையம்மாள் அவளைக் கண்டித்து அடக்கி வளர்க்காமல் அவள் இஷ்டப்படி விட்டு விட்டதால், அவள் யாதொரு வேலையும் செய்யவகையின்றி ஒழுங்காகத் தலைசீவிச் சிங்காரித்துக் கொண்டு தளுக்காகத் திரியத்தலைப்பட்டாள். பிறகு அத்தையும் இறந்துபோக, மறுபடியும் என் தந்தையிடமே வந்து சேர்ந்தாள். அவள் அலங்காரமாக யாதொரு வேலையும் செய்யாமல் திரிந்து வந்ததுமன்றி ஏதேதோ காம விகாரமான புஸ்தகங்களை யெல்லாம் தருவித்துப் படிப்பதானுள். இதற்குள் அவள் பெரிய பெண்ணுகிவிட, அந்த விசேஷத்திற்கு நானும் என் பர்த்தாவும் போய் வந்தோம். என் தங்கையின் நடவடிக்கைகள் ஒன்றும் எனக்குப் பிடிக்காததால் எவ்வளவோ புத்திமதிகள் சொல்லியும் அவள் கேட்கவில்லை. என் கணவர் தான் இருந்த வேலையில் சம்பளம் போதாதென்றும், அந்த சம்பளமும் ஒழுங்காகத் தருவதில்லை யென்றும் வருந்தி அதைவிட்டு ஐந்து வருஷ ஒப்பந்தம் பேசிக்கொண்டு கோலாலம்பூருக்குப் புகையிலை வியாபாரியுடன் போய்விட்டார். நான் கண்ணப்பரின் வீட்டிலேயே தங்கி விட்டேன். என் தந்தை வக்கீல் குமாஸ்தா வேலையை விட்ட பிறகு முனிசிபல் ஆபீஸில் உத்தியோ

கமாக இருந்தார். பகற்காலத்தில் எவரும் வீட்டில் இல்லாதபடியால் இராஜசந்திரன் என்ற வாலிபன் அங்கு அடிக்கடி வருவான்.

கமலா :—எந்த இராஜசந்திரன்? கிருஷ்ணவேணியின் தமையனா?

ஜானகி :— ஆம், அந்தப் பாவி தான். அவன் தனக்கு வரும் தின சரிப்பத்திரிகைகளை என் தந்தைக்குக் கொடுப்பதற்காக வந்து, அந்த சமயம் அபிராமியையும் பார்த்துப் பேசுவதுண்டு. அவனை அவ்வீட்டுக்கு வரும்படி செய்தவர் என் தந்தை தான். அவருக்குப் பத்திரிகைப் பைத்யம் அதிகம். இராஜசந்திரன் மீதும் அவருக்கு நன்றாக வாசித்தவன் என்று அதிக அபிமானம். அதனால், அவர் தன் பெண்ணிடமும் அவன் பேசுவதைத் தடுக்காமலிருந்து விட்டார். பிறகு என் தங்கை அவன் மீது அதிக பிரியம் வைத்து விட்டதை யறிந்த என் தந்தை அதைக் கண்டித்துப் பேசி, அவன் ஓர் தனவந்தனுடைய குமாரனென்றும், அவன் மணக்க ஒப்பினும், அவன் தந்தை சம்மதியாரென்றும், அவனை மறந்து விடென்றும் கூறினர். அவன் அதைக் கவனிக்கவில்லை. கடைசியில் இராஜசந்திரன் என் தந்தையைச் சுட்டுக்கொன்றுவிட்டானும்.

"ஞதேயுருவாய்த் தோன்றினன்.
நல்லவன்போலவே நடிப்பான்."

என்று அழுதாள். கமலாவும் திகைத்தவளாய், அவன் அப்படிப் பட்ட குணமுடையவனல்லவே என்றாள்.

ஜானகி :— அப்படி எண்ணாதீர்கள். அந்தப் படுபாவி என் தந்தையைக் கொன்றது மட்டுமா? தான் காதலித்து வந்த என் தங்கையாகிய அபிராமியையும் எங்கேயோ அழைத்துச் சென்று விட்டான். சிறு பெண்ணாகிய அவள் விவாக மின்றி வீணாக அவனால் கற்பழிந்து பாழ்பட்டு விட்டாள்.

"அறியா யொன்றும்,
அம்ம! அரிவையர்
நிறை யழிகாத
னேருந்தன்மை."

கமலா :— இராஜசந்திரன் இப்போது எங்கே யிருக்கிறானென்று தெரியுமா?

ஜானகி :— தெரியாது. அதிகாரிகள் அவன் மீது கொலைக்குற்றஞ் சாட்டி அவனைத் தண்டிக்கத் தீர்மானித்துத் தேடியபடி இருக்கிறார்கள். அவன் அகப்பட்டால் அதிகாரிகள் விட்ட போதிலும் அவன் தகப்பனார் விடமாட்டார். அவரே முன்னின்று தன் மைந்தனைத் தண்டிப்பார்.

புருடரே புலையர்,
நிலையிலாப் பதடிகள்,
இருளடை நெஞ்சினர்,
ஈரமி லுளத்தர்,
ஆணையு மவர்க்கொரு
வீணுரை, அறிந்தேன்
தன்னய மன்றிப்
பின்னென் றறியாக்
காதகர், கடையர்
கல்வியில் கசடர்.

கமலா :—அப்படித் தண்டித்ததும் அவருக்கு ஏதாவது ஒரு கௌரவப் பட்டம் கிடைக்குமாக்கும்!

ஜானகி :—கௌரவப் பட்டமா? நீங்கள் சொல்வது தெரியவில்லையே.

கமலா :—அவன் தந்தை மகா கர்வி. கோயிலுக்குப் போகவேண்டிய நேரத்தில் சின்ன பச்சைக் குழந்தையைப்போல் பந்து விளையாடப் போவார். அவர் சங்கதி கிடக்கட்டும்; இறந்துபோன உன் தந்தையைப் பார்த்தாயா?

ஜானகி :—அவர் சுடப்பட்டது தெரிந்ததும் கதறிக்கொண்டு அவர் வீட்டிற்கு ஓடினேன். அபிராமியை

வீட்டில் காணேம். குற்றமற்ற என் தந்தையை இராஜ சந்திரன் ஏன் கொன்ருனே தெரியவில்லை? இப்பொழுது கொலை நடந்து இரண்டு வருடங்களாகின்றன. இந்த நான்கு வருடங்களாக என் தந்தை இருந்த வீடும் பூட்டப்பட்டிருக்கிறது. அந்த வீட்டை என் பேருக்கு என் பிதா எழுதிவைத்திருக்கிருர். பேய் நடமாடுகிறதென்று சொல்வதால் அவ் வீட்டிற்குக் குடிவா எவரும் பயப்படுகிருர்கள். அன்று மறைந்த அபிராமி போன இடமே தெரியவில்லை.

ஃ

ஜானகியின் சங்கதிகளைக் கேட்டுக் கமலா மிகவும் துக்கித்தாள். இராஜ சந்திரனைப்பற்றி தன் பர்த்தா சொல்லியவற்றையும் சிந்தித்து கின்ருள். இந்த ஸம்பவங்களுக்குப் பிறகு கிருஷ்ணவேணி முன்னிலும் தாராளமாக வீட்டிற்கு வரத் தலைப்பட்டாள். கண்ணப்பனும் அவளிடம் பிரியமாகமே பேசி அனுப்பி வந்தான். ஆனல், தனியாகப் பேசுவதை விட்டுவிட்டுப் பலருக்கும் மத்தியிலேயே அவளுடன் பேசுவதானன். இவ்விதம் தான் செய்தால் கமலா தன்னைச் சந்தேகிக்க முடியாதென்பது அவன் எண்ணம். தானே வலிய வருகிற கிருஷ்ணவேணியை வரவேண்டாமென்று சொல்லவும் அவனல் கூடவில்லை. இவையெல்லாம் கமலாவின் மனதைப்புண் படுத்தியது. அவள் கிருஷ்ணவேணியின் மீது அதிகமான பொருமை கொண்டாளெனினும் வெளியிட்டுக் கொள்ளவில்லை. கண்ணப்பன் இவளுடைய பொருமையை அறிந்தபோதிலும், இவளை அதிக அன்புடனே நேசித்து வந்ததுமன்றி கிருஷ்ணவேணியையும் இகழாமலிருந்தான். வீட்டிற்குத் தலைவனை ஒருவன் எல்லோரையும் அனுசரித்தே பொது நிலையில் இருந்து யாருக்கும் வருத்த மில்லாமல் நடந்து கொள்ள வேண்டியிருக்கிறது. இவ் வித மிருப்பினும் அவனுக்குத் திட்டு மிட்டாய்களும், பழிப்புப் பக்ஷணங்களும் கிடைக்காமலில்லை.

ஃ

கமலாவுக்கும் நாளுக்கு நாள் அதிக வியஸன முண்டாயிற்று. அதே ஏக்கமடைந்து தேகம் இளைத்தும் போனுள். சரியாக ஆகாரம் உட்கொள்வதுமில்லை. நித்திரையும் செவ்வையாக இல்லை. இதைக்குறித்து யார் என்ன கேட்டபோதிலும் இது என் தலைவிதிப் பயன் என்று கூறிவந்தாள். ஆயினும், தன் பர்த்தாவுக்குச் செய்ய வேண்டிய பணிவிடைகளில் ஒன்றும் குறைவில்லாமல் நடந்துகொண்டு அவனது காரியங்கள் எல்லாவற்றிற்கும் உலதுகையாக இருந்து வந்தாள்.

ஃ

தெய்வத் திருவருளால் கமலாவுக்கு ஓர் ஆண் குழந்தையும், ஒரு வருடம் சென்றபின் ஒரு பெண் குழந்தையும் பிறந்தது. கண்ணப்பன் அதிக ஸந்தோஷ மடைந்து ஏராளமான தர்மங்களும் ஆலயப் பூசைகளும் செய்தான். கமலாவுக்குத் தன் குழந்தைகளின் மூலம் ஸந்தோஷம் உண்டாயிற்றெனினும், அவள் மனதில் உண்டாயிருந்த வியஸனத்தை மாற்ற முடியாமலிருந்தாள். ஆண் குழந்தைக்கு வேணுகோபால் என்றும், பெண் குழந்தைக்கு சரஸ்வதி என்றும் பெயரிட்டனர். வேணுகோபாலின் முகப்பார்வை கண்ணப்பனைப்போலவும், சரஸ்வதியின் முகப் பார்வை கமலாவினுடையது போலவுமிருந்தது. தன் குழந்தைக்கு ஜானகியை செவிலித்தாயாக அமர்த்திவிட்டு, அவள் செய்துவந்த வேலைக்கு

வேறொரு ஆள் வேண்டுமென்று கண்ணப்பனிடம் தெரிவித்தான்.

கண்ணப்பன் :—காமாட்சி என்ற பெண் கிருஷ்ணவேணியின் வீட்டில் இருக்கிறாள். அவளை வேலையிலிருந்தும் நீக்கி விட்டார்கள். அவளைத் தருவிக்கட்டுமா?

கமலா :—அவள் மிகவும் நல்லவள் தான். ஆனால், வாய் மாத்திரம் இங்கிருந்து பெங்களூர்வரையிலிருக்கிறது.

கண்ணப்பன் :—அவள் வாயாடி தான். அது அவளுடைய சுபாவம். ஆனால், வேலையில் கெட்டிக்காரி.

கமலா :—புருஷன் மீது மனைவிக்கு ஆகாதபடி கோள் மூட்டி விடுவதிலும் கெட்டிக்காரிதான். ஆனால் அவள் என்னை ஏமாற்றி உங்களை விரோதிக்கச் செய்ய முடியாது. அவளைத் தருவியுங்கள், விசாரிப்போம்.

ஃ

கண்ணப்பன் சொல்லியனுப்பிக் காமாட்சியைத் தருவித்தான். கமலா அவளை விசாரித்து விட்டு, ஜானகி செய்து வந்த வேலைகளுக்கு அவளை நியமித்தாள். இது நடந்த சில நாட்களுக்குப் பிறகு கமலா தனது அறையில் உட்கார்ந்து அன்று வந்த பத்திரிகையை வாசித்துக் கொண்டிருக்கையில் தோட்டத்தின் பக்கமாகத் தன் பெயர் சொல்லி வார்த்தையாடுவதை வியப்புடன் கேட்டு அதைக் கவனித்தாள். அங்கு காமாட்சி ஜானகியுடன் நெருங்கிப் பேசியபடி யிருந்தாள்.

காமாட்சி :—ஐயோ பாவம்! கமலாவுக்கு ஏக்கம் அதிகமாய் விட்டது. இன்னும் நெடுநாள் கமலா உயிருடன் இருப்பது கஷ்டம்.

ஜானகி :—டாக்டர் சிங்காரவேலு தினமும் வந்து மருந்து கொடுக்கிறார்.

காமாட்சி :—மனநோயை மருந்து குணப்படுத்துமா? கமலாவுக்குப் பிறகு இவ்வீட்டில் என்ன அழகு இருக்கிறது?

ஜானகி :—லக்ஷ்மீ போன பிறகு மூதேவி வந்து புகுந்து கொள்வாள். எந்த மூதேவி வருவாளோ?

காமாட்சி :—வருகிற மூ தே வி கிருஷ்ணவேணிதான். அவள்தான் கமலா எப்போது சாவாளென்று தயாராகக் காத்திருக்கிறாளே. அவள் குணம் பிடிக்காமல் தானே நான் இங்குவந்து விட்டேன்.

ஜானகி :—கிருஷ்ணவேணியை அப்படிச் சொல்லாதே. உன் வார்த்தை நம்பத்தகுந்ததல்ல.

காமாட்சி :—நீ சுத்தப் பைத்தியக்காரி. கண்ணப்பர் கமலாவை விவாகம் செய்து கொள்ளப் போவதாகக் கிருஷ்ணவேணி கேள்விப் பட்டதும் அவள் பட்ட பாட்டையும், கமலாவை சபித்த சபிப்பையும் என்னென்று சொல்வேன்? தன் அறையுட் சென்று கதவை மூடிக்கொண்டு இரகசியமாய்க் கண்ணீர் விட்டழுதாள். அன்று முதல் அவள் முகம் வாடிவிட்டது. குணமும் மாறிவிட்டது. விவாகம் நடந்தபின் கண்ணப்பர் கிருஷ்ணவேணியிடம் வந்து விவாகத்தின் வெகுமதியாகத் தங்கப் பதக்கமாலை பரிசளித்தார். அப்பால் இருவரும் பேசியவார்த்தைகளைக் கூறின் இடங்கொள்ளாது. இருவரும் உண்மைக் காதலர்கள் போலவே பேசினார்கள்.

ஜானகி :—அச்சமயம் நீ எங்கிருந்தாய்?

காமாட்சி :—நான் மறைவாக ஓரிடத்திலிருந்து இவர்களைக் கவனித்து வருவேன்.

ஜானகி :—வேலைக்காரிகளாகிய நாம் இந்தப்பெரிய விஷயங்களைப் பற்

றிப் பேசக்கூடாது. பிறகு ஆபத்தாக முடியும்.

காமாட்சி :—கமலா போய் விட்டால் அவள் குழந்தைகளின் கதி என்ன வாகுமோ? நீ குழந்தைகளைப் பிரியமாய்க் கவனிப்பதால் கிருஷ்ண வேணி இங்குகால்வைத்ததும் உன்னை நீக்கி விடுவாள். நானும் இதை விட்டுப் போய்விட வேணடியவளே.

ஃ

இவர்கள் பேசியவற்றை யெல்லாம் கேட்டுக்கொண்டிருந்த கமலவல்லி துக்கசாகரத்தில் மூழ்கினவளாகிச் செய்வதின்னதென்று தோன்றாமல் திகைத்தாள். இவள் வியஸன மிகுதியால் மார்புநோய் அதிகமாகித் தன் படுக்கையில் படுத்துப் புரண்டாள். அந்தசமயம் கண்ணப்பன் அங்குவந்து கமலா, என்ன உன் முகம் வாடியிருக்கிறதே; கண்ணெல்லாம் சிவந்திருக்கிறதே; எதற்காக அழுதாய்; மார்பு வலி எப்படி யிருக்கிறது...என்றான்.

ஃ

கமலா கண்ணீர் விட்டு அழுதபடியே மேல்மூச்சுடன், "ஐயோ! உனக்குப் புண்ணியமாகப் போகிறது; அவளை மாத்திரம் மணந்து கொள்ள வேண்டாம்; அவளை நீ மணந்து கொண்டால், நான் இறந்தும் மனநிம்மதி யடையமாட்டேன்" என்றாள்.

இதைக் கேட்டதும் கண்ணப்பன் ஆச்சரிய மடைந்தவனாகிக் காரணமின்ன தென்று அறியாமல் திகைத்து, அவளைத் தேற்றித் தடவிக்கொடுத்து, கமலா 'நீ சொல்வதின் பொருள் எனக்கு விளங்க வில்லையே; உனக்குப் புத்தி சபலித்து விட்டதா? ஐயோ! தெய்வமே! நான் என்ன செய்வேன் என்று கூறிக் கொண்டே அவளைச் சமாதானப் படுத்த முயன்றான்.

கமலா சமாதான மடையாமல் அதிகமாகக் கண்ணீர் விட்டு உரத்த குரலுடன் கதறியபடியே, 'அவள்' என்னருமைக் குழந்தைகளை வருத்துவாள்; என்னைவிட அருமையாகக் குழந்தைகளைக் கவனித்து வரும் ஜானகியை வீட்டை விட்டுத் துரத்தி விடுவாள்; தாயற்ற குழந்தைகள் கதறியழும்; ஐயோ! அதை நினைக்குந் தோறும் என்னால் சகிக்க முடியவில்லையே! நான் இரண்டாந்தாரமாகவாவது உங்களுக்கு வாழ்க்கைப் பட்டேனு—நீண்ட ஆயுளுடனிருக்க? ஐயோ! முதல்தாரமாக வருகிறவர்கள் சீக்கிரம் கண்மூடிப் போவதே வழக்கம்; நான் போனாலும் பாதகமில்லை; நீங்கள் 'அவள்' மேல் கொண்ட காதலை நீக்கி விடுங்கள் என்றாள்.

கண்ணப்பன் வியப்புற்று, "கமலா, நீ ஏதாவது கனவு கண்டனையா!? இனி பயப்படாதே; உனக்கு யாதொரு குறைவுமில்லை; சற்று ஒன்றும் பேசாமல் சுகமாக நித்திரை செய்தால் உடம்பு குணமாகும்" என்றான்.

இவன் கூறுவதைக் கமலம் செவியேற்கவேயில்லை. "அவள் உங்கள் மனைவியாவாள் என்பதைக் கேட்கும் போதே தேள் கொட்டியவள் போல் தவிக்கிறேன்; இது தகாது, தகாது; சற்றே யோசித்துப் பாருங்கள்; என் பிதா உங்களை எவ்வளவோ நம்பினார்; நீங்கள் அவளை மணப்பதில்லை யென்று உறுதி வாக்களித்து என் தலையில் தொட்டு சத்தியம் செய்யுங்கள். அப்போதுதான் என் உடம்பு குணமாகும்" என்றாள்.

கண்ணப்பன் :—உனக்கு என்ன வாக்கு வேண்டுமானாலும் கொடுக்கிறேன். நீ வீணில் கவலைப்பட்டலை

யாதே. நீ சொல்வதின் அர்த்தமே எனக்குத் தெரியவில்லை. 'அவள்' 'அவள்' என்று யாரைச் சொல்லுகிறாய்? நான் உன்னைத் தவிர வேறு யாரையும் மனைவியாகக் கொள்ள மாட்டேன். நீ என் அருமைக் கண்ணாட்டியல்லவா; உன்னைக் கைவிட மாட்டேன். இது சத்தியம்.

கமலா :—நான் இறந்து விட்டால் —?

கண்ணப்பன் :—ஐயோ! ஏன் கமலா அப்படிக் கூறுகிறாய்?

கமலா :—நான் சீக்கிரத்திலேயே இறந்து விடுவேன். இறந்த பின் அவளை நீங்கள் மணக்கக்கூடாது. அதற்கும் சத்தியம் செய்யுங்கள்.

கண்ணப்பன் :—எவளை ?

கமலா :—எவளையா? நான் எப்போது சாவேனோ என்று அதற்குக் காத்திருப்பவளைத் தான். இன்னுந் தெரியவில்லையா? நீங்கள் என்னை மணப்பதற்கு முன் அவளைக் காதலித்து வந்தீர்களல்லவா?

கண்ணப்பன் .—நான் எந்தக் காலத்திலும் யாரையும் காதலித்ததே கிடையாது. எனக்குக் காதலியும் இல்லை, கண்ணெலியும் இல்லை.

கமலா :—பொய் சொல்லாதீர்கள். நீங்கள் கிருஷ்ணவேணியைக் காதலிக்க வில்லையா?

கண்ணப்பன் :—அவளைக் காதலித்திருந்தால் உன் தந்தையிடம் வருவதற்கு முன்பே விவாகம் செய்து கொண்டிருப்பேனே? அவளை என் சகோதரிபோல நேசித்து *******

கமலா :—நீங்கள் அப்படிப் பேதமற்று நேசித்து வந்தாலும், அவள் உங்களை மணக்க யோசித்துக் காதலித்து வந்தாளல்லவா? அதற்காகத் தானே அவளைச் சமாதானப் படுத்தத் தங்கப் பதக்கமாலை அவளுக்குப் பரிசு கொடுத்தீர்கள்?

ஃ

இதைக் கேட்டதும் கண்ணப்பன் தலை குனிந்தான். இவளுக்கு உண்மையை யார் வெளியிட்டிருக்கக் கூடும்? எனக்கும் கிருஷ்ணவேணிக்கும் அவள் வீட்டில் நடந்த ஸம்பாஷணையை இவள் எப்படி யறிந்திருப்பாள்? காதல் விஷயத்தில் மாத்திரம் ஸ்திரீகளுக்குப் பொறாமை யுண்டாகுமானால் இன்னது தான் நேருமென்று சொல்லுவதற்கில்லை— என்று யோசித்துக்கொண்டே, "கமலா! அவள் என்னைக் காதலித்த விஷயம் எனக்குத்தெரியாது; அவள் தானாகவே சொல்லிய பிறகு தான் எனக்குத் தெரியும்; எத்தனையோ பேர்களுக்கு விவாகப் பரிசு தந்தது போல் அவளுக்கும் கொடுத்தேனே யன்றி வேறு பேதமில்லை"—என்று கூறினான்.

கமலா பெருமூச்சு விட்டபடியே சற்று சமாதான மடைந்தாள். கண்ணப்பன் அவளுக்கோர் முத்தம் கொடுத்து, "நீ என்மீது வருத்தம் அடையாதே; அத்தை மகளைக் கண்டால் பழய சிறுபருவ நினைவுகளுடன் வார்த்தையாடுவது சகஜந்தானே. அதை நீ பேதமாகக் கருதி, நான் அவளைக் காதலிப்பதாக எண்ணுகிறாய்." அது தவறு என்றான்.

அச்சமயம் வேலைக்காரிகள் பேசிக்கொண்ட விஷயத்தைத் தன் கணவனுக்குத் தெரிவித்து விடலாமா வென்று கமலா நினைத்தாள். அவ்விதம் செய்யின் காமாட்சியைக் காட்டிக் கொடுத்துவிட்டதாகுமென்றும், அது உசிதமல்லவென்றும் கருதி மௌனமாக இருந்தாள். (தொடரும்.)

# முத்து சேகரித்தல்.

எக்காலத்திலும் முத்துக்களின் விலை அவைகளின் குணத்துக்கும் அழகுக்கும் தக்கபடி சற்றேறக்குறைய ஒரே நிதானமாயிருக்கிறது. முத்துக்கள் (Oyster Mussel) ஆயுஸ்டர் மஸ்ஸெல் முதலிய ஜலஜெந்துக்களுடைய உடலிலாவது ஓடுகளிலாவது அகப்படும். முத்து உண்டாகிறவிதம் எப்படி யெனில், அந்த ஜெந்துக்களுடைய மெல்லிய தோலுக்கும் ஓட்டுக்கும் நடுவே ஒரு பொடி மணல் பற்றிக்கொண்டு நமைச்சல் எடுக்கிறது. அதைச் சகிக்க மாட்டாமல் புறளுகையில் சுண்ணாம்புத்தன்மையுள்ள ஒருவித நீர் பொசிந்து அதனால் அந்த மணல் மூடப்படுகிறது; இதுவே கடைசியில் முத்தாய் விடுகிறது. உடலிலிருந்து முட்டை வெளிப்படாமல் அங்கேயே தங்கி விட்டால் அதுவும் மேற்சொன்னபடி உடலிலிருந்து பொசியும் நீரினால் மூடப்பட்டு முத்தாக மாறிவிடு மென்கிறார்கள். இது இயற்கையாய் முத்து உற்பத்தியாகும் வழி. சீனு தேசத்தார் செயற்கை உபாயத்தாலும் முத்து ஸம்பாதிக்கிறார்கள். நமைச்சல் உண்டாகத்தக்க அணுக்களை அந்தப் பூச்சி ஓட்டுக்குள் செலுத்தி அதனால் ஜந்துக்களுக்கு நோவு உண்டாக்குகிறார்கள். அது வேறொரு வழியிலும் அதை நிவிர்த்தி பண்ணிக்கொள்ள மாட்டாமல் முன்போலவே செய்து நோவைத் தீர்த்துக் கொள்ளுகின்றது. இம்மாதிரியாய்க் கஷ்டப்பட்டு முத்து ஸம்பாதித்து அவர்கள் வெகு லாபமடைகிறார்கள்.

பக்குவமாவதற்கு எவ்வளவு காலம் பிடிக்கிறதோ, முத்தின் பரிமாணமும் அவ்வளவு அதிகமாயிருக்கும். நமைச்சலுக்குத் தக்கபடியும் பரிமாணம் வேறுபடுகிறதுண்டு. உஷ்ண தேசங்களில் அகப்படும் முத்துக்கள் நேர்த்தியாயும் பெரியவையாயு மிருக்கின்றன. குளிர்ச்சியான தேசங்களில் சிறிய முத்துக்கள் அநேகம் காணப்பட்டபோதிலும், பெரிய முத்துக்கள் கிடைக்கிறது அரிது. ஆகையால், சீதோஷ்ண விசேஷங்களினாலும் பரிமாணம் ஒருவாறு ஏற்படுகிறதென்று சொல்லலாம்.

∴

முத்தெடுப்பதற்காகச் சமுத்திரத்திலே மூழ்குகிறவர்கள் சிறு வயது முதல் ஜலத்தோடே விசேஷமாய்ப் பயின்று நிலத்திலேபோல நீரிலும் பழகத்தக்க சாமர்த்திய முடையவர்கள். இலங்கையில் முத்தெடுப்போர் படகுகளில் கூட்டம் கூட்டமாய்ப் போவார்கள். அவர்கள் வெகு முரட்டுத்தனத்தோடு நிர்வாணமாய் ஜலத்தில் மூழ்கி, சாதாரணமாய் 24-அடி ஆழத்திற்குக்

---

தன்னிடம் ஒருவரைப்பற்றி மற்றவர் புகார் செய்தாலும், அவற்றை அந்த ஒருவருக்கு அப்படியப்படியே தெரிவித்து விடுதல் அந்த ஒருவருக்கு நன்மை செய்ததாக ஆகாமல் தீங்கையும் விளைத்துவிடக் காரணமாவதுமுண்டு. தன்னைப்பற்றிப் புகார் செய்தவரை அந்த ஒருவர் விரோதிக்கத் தொடங்கிவிடுகிறார். அது பல தீமைகட்கு ஏதுவாகிறது.

குறையாமலும், 50-அடி ஆழத்திற்கு உயராமலும் போய் அங்கே நூறு நூற்றிருபது விநாடிகால மிருப்பார்கள்; அரிதாய் சிலர் ஐந்து நிமிஷம் அல்லது 300—விநாடி வரைக்குங்கூட இருப்பார்களாம். அவர்கள் நீரில் புகும்விதமாவது:—ஒரு பெரிய கருங்கல்லை நுனியில் துவாரம் விட்டுக்கயிறு கோத்து, அக்கயிற்றை வலது கால் விரலினால் பிடித்துக்கொண்டு இடதுகாலில் வலையை மாட்டிக் கொள்கிறார்கள். இவ்வளவு ஆயுதத்தோடு இறங்கும் சமயத்தில் படகிலிருந்து விடப்படும் கயிற்றை இரண்டு கைகளினாலும் கெட்டியாய்ப் பற்றிக்கொண்டு ஜலத்திற்குள் போகிறார்கள்; கீழே தொங்குங் கல்லானது அப்போது அவர்களை எளிதாய் அமிழ்த்தும். அடியிற்போய்ச் சேர்ந்தபிறகு கல்லோடு கட்டியிருக்கும் கயிற்றை விட்டு விட்டு முத்துச் சிப்பிகளைப் பொறுக்கி வலையில் போட்டுக்கொண்டு மேலே வரச் சித்தமாயிருக்கும் போது தாங்கள் பிடித்துக் கொண்டிருக்கும் கயிற்றை ஆட்டி, படகிலுள்ளோருக்குத் தெரிவிப்பார்கள். அப்பொழுது படகிலுள்ளோரும் கயிற்றைத் தூக்கி அவர்களை மேலே கொண்டு வந்து விடுவார்கள். இப்படிச் சிரமப்படுகிறவர்களுக்கு ஒரு வித அபாயமு முண்டு. அதென்னவென்னில், எங்கே எங்கே யென்று இவர்களின் மேல் ஆவலோடு பல்லைத் திறந்து காத்துக்கொண்டிருக்கிற ஒரு வகை மீன்களுண்டு. அவைகளினின்றும் தப்புவது எளிதல்ல. கூரான சிறுதடியினால் வாயைக் குத்திவிட்டு அதனால் இவைகள் வருத்தப்பட்டுக் கொண்டிருக்கும் போது நீர் குளிப்போர் தங்கள் வேலையை முடித்துக்கொண்டு வந்து விடுவது வழக்கம். மணலைக் கலக்கித் தூசியினால் பார்வையைக் கெடுத்து அந்த சமயத்தில் தப்பித்துக் கொள்வதும் உண்டு. (இவ்வளவு பாடு படுவோர்கள் கேவலம் கூலிகள் என்ற பேர் பெறுவோராயிருக்க, தேக கஷ்டம் எதுவும் படாமல் மேஜையும் நாற்காலியுமாக அமர்ந்து பேனாவை அசைத்துப் பெரிய தடபுடல் அதிகாரம் செய்கிற வேலை வெகு சொகுசானதும் மேன்மையானதுமல்லவா? அதற்காகத்தான் பி. ஏ. படித்து விட்டு 30-ரூபாய் வேலை கிடைத்தாலும் போதுமென்கிறார்கள் போலும்!)

ஃ

எளிதில் எடுக்கக் கூடாமல் பாறையோடு பாறையாய் ஒட்டிக்கொண்டிருக்கும் சிப்பிகளை எடுப்பதற்காகச் சிலர் ஒருவித நீண்ட கத்தி வைத்துக் கொண்டிருக்கிறார்கள். வெளியிலே கொண்டுவந்த பிறகு அவைகளைப் பூமியில் பள்ளம் வெட்டி உலரவைத்து, செம்மையாய் உலர்ந்த பிறகு உடைத்து முத்தெடுப்பார்கள். முத்து இந்த ஜந்துக்களின் உடலில் சிக்கிக்கொண்டிருக்கிற பட்சத்தில் அவைகளைக் கொதிப்பித்து முத்து எடுப்பார்கள். இங்கே அந்த ஜந்துக்கள் வருந்துமே யென்ற ஜீவகாருண்யம் உண்டா என்பதைச் சிறிது சிந்தியுங்கள். அவைகளில் உற்பத்தியாகும் முத்தே அந்த ஜந்துக்களுக்கு

---

இந்த வியாபாரி அந்த வியாபாரியிடமிருந்து வந்த கடிதத்தைத் தனக்குப் பணவரும்படியில்லாத கடிதமென்று கிழித்துக் குப்பையில் எறிகிறார். பதிலும் தருவதில்லை. பிறகு ஒரு சமயம் இந்த வியாபாரிக்கே ஒரு அவசரம் வந்து அந்த வியாபாரிக்குக் கடிதம் எழுதினால், அந்த வியாபாரியோ முன்புதன் கடிதத்திற்குப் பதில் தாராததை மனதில் வைத்து அக்கடிதத்தை ஒரு மூலையில் வீசி யெறிகிறார். பதிலும் தருவதில்லை. இது பதிலுக்குப் பதில் செய்து கொண்ட மரியாதை போலும்!

ஸர்வ நாசத்தை யுண்டுபண்ணுவதாயிருக்கின்றது. தன் மனைவி பிரஸவ வேதனைப்படாமலிருக்கட்டுமென்ற ஜீவகாருண்யம் கொண்டால் பிறகு புத்திரப்பேறு தான் ஏது ?

"பல்பெயர் துக்கப் பட்டா லன்றி
யுலகி லெவரே யொருசுக மணைவார் ?
இயல் பிதுவாயி னிரங்க லென்பயன் ?
வயலுழு முழவோர் வருத்தமுங் குனிந்திருந்
தாடை நெய்வோர் பீடையும் வாகனந்
தாங்குவோர் தமக்குள தீங்கு நோக்கி
யுலகிடை வாழா தோடுவரோ பிறர் ?
அலகிலா மானிடர் யாவரு மவரவர்
நலமே யாண்டு நாடுவர்........."

(மனோன்மணீயம்.)



இவ்வளவு பெரிய இலையை ஏன் போட்டாய், இரவுக்கு உதவுமே யென்று அதைப் பாதியாகக் கிழித்து மறுபாதியில் வீட்டுக்காரன் புசித்து எழுந்திருக்க, அடுத்த நிமிஷமே பக்கத்து வீட்டுப் பெண் இன்னொரு பாதி இலையை இரவல் கேட்டுப் பெற்றுச் சென்றுவிடுகிறாள். இந்த சின்ன சங்கதியே பெரிய சங்கதிக்குமாம். ஒரு பக்கம் புருஷன் செட்டுத்தனம் செய்ய, மற்றொருபக்கம் மனைவியால் இரவலில் தொலைந்து போய்விடுவதாகில் அந்த செட்டுத்தனத்தால் என்ன பிரயோஜனமோ ?

---

மேலே ஓர் அடி எடுத்து வைக்க எவரேனும் வெளிச்சம் காட்டினால் போதும். அந்த வெளிச்சத்தைப் பிடித்துக் கொண்டு முன்னேறி விடலாம்.

# உன் சுயேச்சையையும் சுதந்தரத்தையும் காத்துக்கோள்.



எப்பொழுதும் நீ இடுகிற கட்டளைகளில் இன்னொருவன் பிரவேசிக்கவோ, தடை செய்யவோ இடந்தராதே. நேசத்தின் பெயரைச் சொல்லிக்கொண்டு உன்னை நெருங்குவோரை சந்தேகக் கண்களுடனே பார். எவரையும் நம்பிவிடாதே. உன்னை உன் எதிரில் மற்றொரு மனிதன் அதிகாரம் செய்ய நீ வழிவைக்கக்கூடாது. உன் பேச்சே தலைமைப்பட்டு நிற்கவேண்டும். உன் விஷயங்களை மற்றவன் அறியும்படி ஒரு சந்தர்ப்பத்தை நீ உண்டாக்கிவிடக் கூடாது. எத்தகைய இமயகிரி பர்வதம் போன்றவனுயிருப்பினும் சரி, உன் காலின்கீழ் கிடக்கும்படி அலக்ஷியமாகவே இருந்துகொள். அன்புள்ளவர், உண்மையுள்ளவர் என்று எவரைப்பற்றியும் அவசரப்பட்டுத் தீர்மானம் செய்துவிடாதே. அடிக்கடி உன்னிடம் வருபவனைப்பற்றி எப்போதும் எச்சரிக்கையுடன் நில். உன் காரியங்களில் இன்னொருவன் உள் நுழைந்து ஆராய்வது உன் நன்மைக்கல்ல; உன் கெடுதிக்கே. வீட்டு விஷயங்களிலும் சரி, வேறெந்த விஷயங்களிலும் சரி, உன் சுயேச்சையையும் சுதந்தரத்தையும் பேணிக்கொள். உன் தலைமை ஸ்தானத்திலேயே எப்பொழுதும் நிமிர்ந்து நில். ஒரு யோசனைக்காகத் தன் வீட்டிற்கு உன்னை அழைப்பவனை உன் வீட்டிலேயே அந்த யோசனையைத் தெரிவித்து முடித்துக் கொள்ளும்படி சுயேச்சையுடன் தெரிவித்துவிடு. அவனைப் பின் தொடர்ந்து அவன் வீட்டிற்கு ஒருபோதும் போகாதே. ஒருவருக்குக் கடிதம் எழுதுவதோ ஒன்றைப்பற்றித் தீர்மானிப்பதோ அவசரத்திலிருக்கக்கூடாது. எது அவசரம் என்று தோன்றுகிறதோ அதை நீள ஆலோசித்து மெதுவாகவே செய்யத் தலைப்படு. ஒருவருக்கு ஒரு கடிதம் அவசரமாக எழுதிவிட்டாலும், அதைத் தபாலுக்கு அனுப்பாமல் ஒரு மூலையிலே போட்டுவிடு. பத்து தினங்கட்குப் பிறகு அதைத் தபாலுக்கு அனுப்பலாமா வேண்டாமா என்பதைப்பற்றி சாவகாசமாக யோசி. அப்போது வேண்டாமென்று தோன்றினால் அக்கடிதத்தைக் கிழித்தெறி. அப்படியே ஒரு அவசர விஷயமென்று பிறர் போதித்தோ அல்லது நீ எண்ணியோ பதட்டமாய்ச் செய்யப்போகிற காரியத்தையும் நிதான புத்தியுடனே ஒரு குப்பைத்தொட்டியில் போட்டுவிடு. பல நாளைக்குப் பிறகு அதைப்பற்றி மெதுவாக யோசித்துத் தக்கோருடைய அபிப்பிராயங்களையும் அறிந்துகொண்டு, அப்பால் அதைச் செய்யவேண்டாமென்று தோன்றினால், உடனே அதிலிருந்து விலகிக்கொள். உன்னைப் பிறர் மிதிக்கும்படி இருக்கக்கூடாது. நீ பிறரை மிதிக்கும்படி கம்பீரமாக இருந்துகொள். உன் நாற்காலிக்கு அருகே சமமாக இன்னொருவன் மற்றொரு நாற்காலியில் உட்கார

---

ஒவ்வொரு தொழிலாளியும் தன் தொழிலை உயர்வாகவும் பெருமையாகவுமே சொல்லிக்கொள்கிறான். எந்தத் தொழிலிலும் ஒரு அநுபவமும் கைப் பழக்கமும் பழகினாலன்றித் தெரிவது கூடாமையேயாகிறது. எதுவும் தானே செய்யும் போதுதான் அதிலுள்ள நுட்ப சக்திகள் புலனாகின்றன.

நீ இடம் தந்தாலும், அவ்விதம் உட்கார்ந்த மனிதனுடைய உள்ளெண்ணத்தையும் மெதுவாக ஆராய்ந்து பார். இன்று தித்திப்பாகப் பேசுகிற இந்த உறவினனோ நேசனோ நாளைக்கு விரோதியாகிவிடில் என்னென்ன தீங்குகள் செய்வானென்பதை இப்பொழுதே யோசித்து வைத்து, அவனுக்கு உன்னைக் குறித்து எந்தத் தகவலும் கிடைக்காதபடி செய்து எச்சரிக்கையாகவே இருந்துகொள். உன் பெண்ணைத்தரும் விஷயத்தில் ஆயிரமுறை யோசி. எதற்காக உன்னிடம் அடிக்கடி வருகிறான்?—ஏன் உன்னை நெருங்கி அவ்வளவு குலாவுகிறான்? ஏதாவது விஷம சிந்தையுடன் இருந்தாலும் இருக்கலாம். உன் விஷயத்தைத் தீர்மானிப்பதற்கு நீயே அதிகாரி. அதில் இன்னொரு அன்னியன் குறுக்கிடவேண்டியதில்லை. எந்தக் கஷ்டத்தையும் ஒரு கஷ்டமாக நினைக்காதே. அந்தக் கஷ்டத்தையும் வெளியிடாதே, மனிதர்களிடம் தெரிவித்துக் கேவலப்படுவதிலும் பகவானிடம் தெரிவித்துவிட்டு நிம்மதியாக இருந்துகொள். இன்னும் எவ்வளவோ காலம் பின்னுக்கு இருக்கிறபடியால், பிறர் வார்த்தையைக்கேட்டு அவசரப்பட்டு எதுவொன்றையும் செய்து விடாதே. இன்று தேவையற்றதெனத் தோன்றும் பொருள் நாளை அவசியப்படலாம். உன்னை அவசரப்படுத்துகிறவன் தனது நன்மைக்காக உன்னை அவசரப்படுத்துகிறானே தவிர, உனது லாபத்துக்காக உன்னை அவசரப்படுத்தவில்லையென்பதை ஒருபோதும் மறவாதே. எவன் உன்னை அவசரப்படுத்தினானோ அவனை ஆறுமாதம் உன் வீட்டு வாயிற்படியில் விழுந்து காத்துக்கிடக்கும்படி செய்து பிறகு துரத்திவிடு. எந்த சங்கதியிலும் உன் சுயேச்சையே முன்னிற்கவேண்டும்; உன் சுதந்திரமே மேலோங்கித் தலைமையுடன் விளங்கவேண்டும். எவனையும் மதிக்காத அலக்ஷியமான ஜனங்களுடனே பார். உலகம் உண்மையுள்ளதல்ல; ஐயோ! கபடமே குடிகொண்டது. ஏமாறுதே! ஜாக்கிரதை!!

## வீ. பி.யில் பத்திரிகையை யனுப்ப விண்ணப்பம்.

"அமிர்த குணபோதினி"யின் ஏழாவது ஆண்டின் புதுவருட சந்தாவை 10-4-32-க்குள் மணியார்டர் மூலம் அனுப்பாத சந்தாதாரர்களனைவர்க்கும் புது ஆண்டின் சஞ்சிகையை வீ. பி.யில் ரூ. 1-4-0-க்கு அனுப்பிவைக்கின்றோம். அன்பர்கள் உடனே வீ.பி.யை ஒப்புக்கொண்டு சந்தாவைச் செலுத்தி நம் பத்திரிகையை ஆதரிக்குமாறு வேண்டுகின்றோம். வீ. பி. வந்த சமயத்தில் தாங்கள் நேரில் இல்லாதுபோயினும், தங்களுக்குரியவரிடத்தில் பணத்தைக் கொடுத்து வீ. பி.யை பணம் செலுத்திப் பெற்றுக்கொள்ள ஏற்பாடு செய்யும்படி வேண்டுகிறோம். S. G. R.

ஆஸ்பத்திரிகளில் டாக்டர்களாக இருப்போர் பிணியாளிகளிடம் மனமொத்துக் கலந்து பழகுவோராயிருந்தால் பெரிய பாக்கியமாயிருக்கும். அவ்விதமின்றித் தங்களின் ஆரவாரத்திலேயே அலக்ஷியத்தன்மையாய் நடந்துகொண்டு புண்ணாக்குவோரும் சிலர் உண்டு. இரக்க சுபாவம் முக்கியம்.

## காசு இருந்தால் மனைவி.

### " இல்லானை இல்லாளும் வேண்டாள் "

பத்தினி:—ஏன் இத்தனை நாழிகை? சமையல் அப்போதே முடிந்ததே வாருங்கள், சாப்பிடுங்கள், பணம் எங்கே?

பர்த்தா :—எல்லாம் உனக்காகவே தான் உழைக்கிறேன். நாளை யாவும் சேர்த்துக்கொடுப்பதாகச் சொன்னார். இன்று பணம் தாவில்லை.

பத்தினி:—பணமில்லாமலா வந்தீர்? —பின்னே சோறு?

பர்த்தா :—ஏன் கோபிக்கிறாய்? நாளை மொத்தமாகப் பணம் வந்து விடும். இலையைப் போடு.

பத்தினி :—நீ கெட்ட கேட்டுக்கு இலைகூடவா? பணம் கொண்டுவந்தால்தான் பிண்டமுண்டு. இல்லாவிடில் ஒரு பிடிகூடக்கிடையாது. வெளியே போம்.

பர்த்தா :—ஒரு நாளெல்லாம் உழைத்துவிட்டு அலுத்து வீட்டுக்கு வந்தால் இந்தப் பிடுங்கலா? உன்னை என்ன செய்கிறேன் பாரடி?

பத்தினி :—என்ன செய்துவிட முடியுமென்று இப்படித்துள்ளுகிறாய்? கண்டபடி உளறாதே.

பர்த்தா :—உன் இழவுக்கு எத்தனை நகைகள் செய்து போட்டேன்? உன் அப்பன் வீட்டிலிருந்து ஒரு துரும்பாவது கொண்டுவந்தாயா?

பத்தினி :—என்ன தாண்டுகிறாய்? தாறுமாறாய் உளறி வழிகிறாய். என் தந்தை மதிகெட்டவனுக்குப் பெண்ணைக்கொடுத்தானே! நீ உடமை போட்டது அதிசயமோ? என்னைப் போன்ற மனைவியை நீ அடைய எத்தனையோநாள் பூஜை செய்திருக்க வேண்டும். சும்மா பிதற்றாதே, ஓடு.

பர்த்தா:—இந்த ஊர் லேடி டாக்டரின் புருஷன் சங்கதி தெரியாதோ? அவளுடைய ஒய்யார நடைக்குத் தான் ஸலாம போட்டுக் காத்திருக்க முடியாதென்று சொல்லிவிட்டு அவள் கணவன் வேறொருத்தியை வைத்துக் கொண்டு சுகமாக இருக்கிறான். அப்படிப்போல நானும் செய்துவிட்டால் நீ என்ன செய்வாய்?

பத்தினி :—ஓ! அப்படியே செய்கிறதுதானே! இதற்கெல்லாம் நான் பயந்தவளா?

பர்த்தா :—நான் காசு கொண்டு வந்தால் கண்ணே, மூக்கே, தங்கமே, துரையே என்கிறது. ஒருநாளைக்குக் கொண்டுவராவிடில் கண்டபடி பேச ஆரம்பித்துவிடுகிறதா? கதிகெட்டவள் என்று அன்புடன் உனக்கு உட்பட்டு நடந்தால் என்னவோ பிரமாதமாய் மீறுகிறாயே?

பத்தினி :—நான் ஒருபோதும் கதி கெட்டவளல்ல. நீர்தான் கதிகெட்டு ஒருவேளைச் சோற்றுக்கு விதியின்றி இங்கு வந்து கெஞ்சி நிற்கிறீர்.

பர்த்தா :—எவன் கொண்டுவந்து போட்டு நீ சமைத்தது? எல்லாம் நான் கொண்டுவந்து கொட்டித்தான் ஆச்சுது. இந்தா இன்றையப் பணம் முக்கால் ரூபாயை முடிபோட்டுக் கொள்ளு. இனியாவது உன் திரு

---

மனிதனுடைய வாழ்க்கையின் முக்கிய நோக்கமானது வெறும் வெற்றியைமட்டும் விரும்பாமல் ஸதா ஸர்வகாலமும் இடைவிடாது பொதுநலத்துக்குப் பாடுபட்டு வருவதே யாகும்.

வாய் அடங்கித் தொலையட்டும். என்னை நீ இப்போது சேவலப்படுத்துவதற்குப் பதிலாகப் பிறகு உலகம் உன்னைச் சேவலப்படுத்தும். அது நிச்சயம். ஃ

என்று ஒரு அரைரூபாயையும் கால்ரூபாயையும் அவள் முன்பு விட்டெறிந்தான். பணத்தைக் கண்டதும் பத்தினியின் கோபம் ஓட்டமெடுத்தது. முறட்டு வார்த்தைகள் வாய்க்குள்ளேயே தங்கிவிட்டன. முகம் பிரஸன்னமாயிற்று. திட்டும் ஓய்ந்தது. அதிகாந்தினியானள். ஆ! என் கண்ணே! என்று புருஷனைப் புகழத்தொடங்கினள். "ஐயோ! இதுவும் உமக்கு ஒரு வேடிக்கையா? ஆத்திரம் பொறுக்கமாட்டாமல் ஏதோ உளறிவிட்டேன். இது நான் செய்த பாபம். உலகத்தில் எத்தனை பெயர்கள் ஒற்றுமையோடிருக்கிறார்கள். நான்மட்டும் என் புத்தியீனத்தால் நேசமாயிருக்க முடியவில்லையே! சமையல் செய்தாய்விட்டது; சாப்பிட அழைத்தாலும் வராமலிருந்தால் நான் என்ன செய்வேன். பணம் கொண்டு வந்த சங்கதி அப்போதே சொல்லித் தொலைக்கலாகாதா என் வாயைக் கிளறுவானேன்? எல்லாம் போதாத காலம். பட்டினி கிடக்கிறீர்களே! நாழிகை அதிகமாயிற்றே! இதோ விளக்கேற்றிவிடுகிறேன். முகம் கழுவிக்கொண்டு சாப்பிட உள்ளேவாருங்கள். என் கோபத்தை நீங்கள் ஒரு கோபமாக நினைக்கலாமா? மனைவி என்று ஒருத்தி யிருந்தால் எப்போதாவது கோபிக்கிறதுதான். தன்னைக் கோபிக்கவும் திட்டவும் ஒரு மனுஷி வேண்டுமென்றுதான் ஒரு பெண்ணைக்கட்டிக்கொள்கிறார்கள். எனக்கு உங்களைவிட்டால் திக்கு வேறெங்கேயிருக்கிறது" என்று மிருதுவான குரலோடும் வசனித்துப் பார்த்தாவின் கையைப்பற்றி இட்டுக்கொண்டு உள்ளே சென்றாள்.

ஃ

உன் கோபம் தணிந்ததே பெரிய ஸந்தோஷம்; அதுவே போதும் என்று கணவன் கூறினன். கொண்டு வந்தால் நல்லவன்; கொண்டுவராவிட்டால் சீச்சீ!! இப்படியும் பேய்ப் பெண்டீர் சிலர் இருக்கிறார்களல்லவா!!! தன்னைத்திட்டவும், கோபிக்கவும் தான் ஒரு பெண்ணை ஒருவன் கட்டிக்கொள்கிறான் என்பது இந்தப் புண்ணியவதியின் சித்தாந்தமானல்-இனி இவள் திருந்துவதுதான் எது?

---

தான் பூர்ணமாக நம்பி யிருந்த மனிதன் தன்னை ஒரு பெரிய அனர்த்தத்திற்குட்படும் காரியத்தில் "எவ்வித பயமுமில்லை, கையெழுத்துப் போடு" என்று சொல்லி மாட்டிவிட்டு, அதன் பிறகும் அநேக வருடகாலம் தன்உப்பையேதின்று வந்திருக்கிற படுமோசத்தை யறியும்போது, ஆ! எவ்வளவு பயங்கரமான மோசம்—எவ்வளவு நயவஞ்சகமாகச் செய்யப்பட்டதென்று அப்படியே திகைத்துப் போகிறான். இவ்விதம் செய்த சண்டாளனை—நன்றித்துரோகியைப் பிறகு கண்ணெடுத்துப் பார்க்கவும் சகிக்குமோ! தெய்வம் கூலிதரும்.

---

மனைவியின் அந்தரங்க இச்சா அவஸ்தையைக் கணவன் தீர்த்துப் பரிசுத்தமாக்க, அவ்விதமே கணவனின் இச்சா விகாரத்தை மனைவி தீர்த்துப் புனிதப்படுத்த—இவ்விருவரையும் என்றும் பிரியாதவராயாக்கி ஒருவருக்கொருவர் உதவுமாறு செய்துள்ள விவாகச்சங்கிலியின் உன்னதத்தை என்னென்று புகழ்வதோ! பின்னும் இந்த இச்சையின் மூலமாகவே மக்கட்பேறெனில், அந்த இச்சையும் நன்மைக்காகவே ஏற்பட்டுள்ளது போலும் தோன்றுகின்றது.




# மதுபானியை மணஞ் செய்யாதே.



ஸகோதரியே! நீ ஒருக்காலும் மதுபானியை மணஞ் செய்யாதே. எனது தாய் என்னை ஒரு செல்வவானுக்குத் தாரைவார்க்க எண்ணினாள். தகப்பனார் ஒரு கல்விமானைத் தேடினர். சுற்றத்தார் ஒரு உத்தியோக புருஷனை எதிர்பார்த்திருந்தனர். நானோ கண்ணிறைந்த கட்டழகனுக்கு வாழ்க்கைப்பட நினைத்தேன். கடைசியாக இப்படிப்பட்ட அம்சங்கள் எல்லாம் ஒருங்கே அமைந்திருந்த ஆம்படையானுக்கே மாலை சூட்டும் அதிர்ஷ்டசாலினியானேன். நான் மிகுந்த பாக்கியவதி யென்று யாவரும் என்னைக் கொண்டாடினர். ஆனால், நான் மணந்த கணவனிடத்தில் முன்னமே குடி கொண்டிருந்த மதுபானப் பழக்கத்தைக் குறித்து எவரேனும் கிஞ்சித்தும் கவனித்தாரில்லை. நான் பேதையாகையால் "குடியே குடி கெடுக்கும்" என்பதைத் தெரியாதவளானேன். ஃ

உறவினர் எல்லோருமே கூடி என்னையோர் மணவாளி யாக்கினர்கள், மங்களம் உண்டாகவேண்டி என் கூந்தலை மலரால் நிரப்பினார்கள். மணவறையினுள் நான் நடந்து கொள்ளவேண்டிய விதங்களையும் உபதேசித்தார்கள். ஆனால், அங்கே ரகசியமாய்ப் பிராந்தி புட்டி இருக்குமென்று எனக்கு அவர்கள் சொல்லவில்லை. அவர்களுக்கும் அது தெரியாதிருக்கலாம். பின் பர்த்தாவினது ஆயுள் விருத்திக்காக என் முகத்தில் மஞ்சளைப் பூசினார்கள். அவருடைய செல்வாக்கை விரும்பி என் நெற்றியில் குங்குமப் பொட்டு இட்டார்கள். நாங்களும் சிறிது நாளாகச் சீரும் செல்வமும் அனுபவித்தோம் என்பது பொய்யல்ல. இரவில் மணவறையின் கதவு மூடியபின் என் பர்த்தா நன்றாக மதுபானம் செய்வார். அதன் பின்னரே என்னைப்பற்றி நினைப்பார். நானும் இவ்விஷயத்தை வெளியில் தெரிவிக்கவில்லை. என் பர்த்தா சீக்கிரம் திருந்தி விடுவாரென்று நினைத்தேன். ஃ

ஐந்து வருஷங்களுக்கு முன்தான் கலியாணம் செய்து கொண்டோம். ஆஹா! கலியாண நாளும், அதன்பின் தொடர்ந்த தினவைபவங்களும் எவ்வளவோ இன்பகரமாயிருந்தது. கணவர் என்னைப் பற்றியபோது எனக்கு உண்டான ஸ்பரிச உணர்ச்சியை என்னென்பேன்? ஒரு மின்னல் அலை பாய்ந்தது போல் என் சரீரமெங்கணும் ஒருநூதன இன்பாநுபவத்தைக் கொடுத்தது. ,எனது ஆப்த ஸகாயனாய் நான் நினைத்திருந்த மன்னர் பிரானுடன் வசித்த ஆரம்பதினங்

களைத் திரும்பவும் கருதும்போது நிச்சயமாகவே என் தேகம் புளகாங்கிதம் கொண்டு மயிர்க்கூச் செறிகிறது. எனக்குத் தாயும் தந்தையும் சகோதரமும் என் பர்த்தாவே யென்று உறுதி கொண்டேன். அவ்வளவில் அவரும் என்னைத் தாயாகவும், மந்திரியாகவும், தாதியாகவும், தோழியாகவும் கொண்டிருந்தனர். ஓஹோ! எவ்வளவு ஆநந்தமான காலம்!

ஃ

என்றாலும் என்ன, இவையனைத்தும் ஒரு சிறிது காலத்துள் ஓட்டம் பிடித்தது. என் கண்ணாளரிடத்தில் இருந்த நீச மதுபானப் பழக்கம் எனது இன்ப சுகபாக்கியத்துக்கு எமனாக முளைத்தது. அதுவே அவருடைய ஐயாயிரம் ரூபாய் ஆஸ்தியை அப்புறப்படுத்தியது. அதுவே நான் கொண்டுபோன ஆயிரம் ரூபாய் ஸ்திரீ தனத்தையும் பறக்கவைத்தது. அதுவே குடியிருந்த வீட்டையும், மற்றும் பண்டு பலாதிகளையும் கடன் காரர் அடித்துக்கொண்டு போக ஏதுவாயிற்று. அது எனது திருமங்கிலியத்திலும் ஒவ்வொரு உருவும் போய்க் கடைசியாய் என் கழுத்தில் நூலைத் தவிர வேறொன்றும் இருக்கச் சம்மதிக்கவில்லை. குபோனாக மதிக்கப் பட்டிருந்த எனது கோமானைக் கேவலம் கோவணாண்டியாக்கியது. பிள்ளைகளைச் சாப்பாட்டுக் கில்லாமல் தயங்க வைத்தது. எனது மக்கள் உடுக்கக் கந்தையில்லாமல் பெருமூச்செறிகிறார்கள். செலவிடத் தெரிந்த மாதிரியாகச் சேர்ப்பதற்குத் தெரியவில்லை. ஃ

சாராயக் கிடங்குகளில் இடப்பட்டிருக்கும் கொடிகளின் சிவப்பு நிறம் நாங்கள் சிந்தும் இரத்தக் கண்ணீரை யொத்திருக்கிறது. கொடிகள் நாங்கள் மனங் கொதித்துவிடும் பெருமூச்சுக் காற்றினால் தாக்கப்பட்டு எமது உள்ளம் பதைத்து நாங்கள் அலறி யழுதுகிறதுபோல் ஆடிக் கொண்டிருக்கின்றன. கிடங்குகளின் சுவர்களில் புதிதாய் வரையப்பட்டிருக்கும் எழுத்துக்கள் "குடிகாரருக்கு மோக்ஷமில்லை" என்று சொல்வதுபோல் தோன்றுகின்றன.

ஃ

என் கணவர் தாம் குடித்த வெள்ளை நிறயான பானத்தை நானும் என் மக்களும் உதிர்க்கும் வெப்பம் பொருந்திய கண்ணீரென்று என் நினைத்தாரில்லையோ? எனது பர்த்தா தாம் குடித்த சிவப்பு நிறமான பானத்தைச் சாப்பாடில்லாமல் சங்கடப்படும் எனது பிள்ளைகளது உடலில் வற்றிக் கொண்டிருக்கும் இள உதிரமென்று ஏன் நினைத்தாரில்லையோ? எனது மன்னவர் தாம் குடித்த பானங்களுள் தோன்றிய வெண்மையான நுரைகளைக் கவலைக் கடலுள் அடிபட்டு நிற மாறிய எனது கூந்தலின் நரைகளாக என் நினைத்தாரில்லையோ?

ஃ

ஒருவனுடைய துர்க்குணங்களைப்பற்றி இன்னொருவன் அதிகமாகத் தெரிந்து கொண்டிருக்கும்போது, அவனுடன் அந்தத் துர்க்குணன் சிநேகம் செய்வதென்பது வெகு கஷ்டமாகவே இருக்கும். சந்தித்தபோது பிரியமாகப் பேசுவதாக மட்டும் ஒரு வேளை இருக்கலாமே யொழிய, பிறகு நேசமோ, கடிதப்போக்கு வரத்தோ எதுவுமே இருக்க முடியாது. இருவரும் ஒன்றுபடப் போவதும் கிடையாது.

மதுபானிகள் செத்தவருக்குச் சமானம் என்று ஏற்படுகிறது. அப்படியானல், மதுபானப் பழக்கமுடைய என் பர்த்தாவைச் செத்தவராகக்கொண்டு உலகத்தார் என்னை அமங்கிலி யென்றும், என் மக்களைத் தகப்பனில்லாப் பிள்ளைகளென்றும் சொல்லுவாரோ வென்றும் பயப்படுகிறேன். வண்டுகளில் பல மலரையும் தேனையும் அருந்துகிறது போல, மனிதருள் பலர் பாலையும் பழத்தையும் அருந்துகிறார்கள். வண்டுகளில் சில மலத்தையும் சூதகத்தையும் உண்கிறதுபோல, மனிதருள் சிலர் ஈனமான மதுவையும் அபினியையும் உண்கிறார்கள் என்றேற் படுகிறது. அப்படியானல் மதுபானப் பழக்கமுடைய என் கணவரை மலத்தையும் சூதகத்தையும் உண்ணுகிற வண்டுகளுக்கு உவமானமான மனிதர்களுக்கு ஒப்பிடுவார்களோவெனப் பயப்படுகிறேன். மதுபானிகள் வறுமையினால் களவு செய்வார்க ளென்றும், மையலால் காமத்தில் ஆழ்வார்களென்றும், பகையினால் கொலை செய்வார்களென்றும், பாவத்தால் மோட்சத்தை இழப்பார்களென்றும் ஏற்படுகிறது. அப்படியானல், மதுபானப் பழக்கமுடைய என் புருஷனை உலகத்தார் கள்ளனென்றும், காமாதுரனென்றும், கொலைஞனென்றும்: மோட்சசுதந்திர மில்லாதவனென்றும் சொல்லுவாரோவென்று அஞ்சுகிறேன்.

ஃ

இவ்வளவு அச்சத்துடனும், அபக்கியாதியுடனும், ஆபாச அநாகரீகத்துடனும் வாழுகிற ஜென்மம் இருந்தென்ன, இறந்தென்ன? அந்தண்டை பார்த்தாலோ நீ எனது சகோதரியாகிறாய். புருஷனைப்பற்றிப் பிறரிடம் சொல்லவுங் கூடாது. சகோதரிக்குத் தக்க புத்திமதி சொல்லாமலிருக்கவுங் கூடாது. நானே இருதலைக் கொள்ளி எறும்பு போலிருக்கிறேன். எனக்கும் என் பிள்ளைகளுக்குந்தான் ஏதோ துர் அதிர்ஷ்டத்தின் பலன் இப்படி ஏற்பட்டுப்போய் விட்டது. எனது இனிய ஸகோதரியாகிய நீயாவது இத்தகையதான பாழுங் கிடங்கில் விழுந்து விடக்கூடாதென எச்சரிப்பதற்காகவே இவ்வளவு தூரம் சொன்னேன். நீ இனி மாலையிடப்போகிற உன் கணவர் எவ்வளவு பொருளுடையவராயிருந்தாலும் சரி, எவ்வளவு கலையுடையவரா யிருந்தாலும் சரி, எவ்வளவு கெட்டிக்காரராயிருந்தாலும் சரி, முதல் முதல் அவர் மதுபானப் பழக்க மில்லாதவர் தானு என்பதைப் பூரணமாய் விசாரித்தறிந்து அதன் பின்பு ஒப்புக்கொள்ளக் கடவாய். அப்படிக்கில்லாமலும், முதலில் அறிய வேண்டியதை அறியாமலும், ஆஸ்தி பாஸ்திக்கும்—அழகு சாமர்த்தியத்துக் ஆசைப்படுவையாகில்—உனக்கும் உன் பின் சந்ததிகளுக்கும் மோசமே மோசம் என்று முக்காலும் எக்காலும் சொல்லுகிறேன். ஆசையால் நீ ஒருக்காலும் மதுபானியை மணஞ்செய்யாதே.

உன் அக்கா.

---

பிராமணர்களுக்குக் கொடுப்பதுதான் தானம் என்பதில்லை. நூலாசிரியர்கட்குச் செய்யும் உதவிகளும் ஆதரிப்புகளும் பிராமண தானத்தைவிட எத்துணையோ உத்கிருஷ்டமானவை. கடவுள் வரைக்கும் எட்டும் உத்தமதானங்களாகும்.

---

ஆண்மையுடனிருந்து மதனதாகத்திற்கு ஏங்குதலில் உற்சாகத் தளர்வு இராது. அது கேவலமுமில்லை. ஆண்மையற்றுத் தமது தன்மை எங்கு வெளியாகிடுமோ என விசாரப்படுவதில் தான் கேவலம் வந்து ஸம்பவிக்குமாம்!

# "ப்ரோபெல்" என்னும் பாலபோதகரின் அநுபவங்கள்.

(686-ம் பக்கத் தொடர்ச்சி.)



ப்ரொபெல் மரித்தனரேயன்றி அவரது போதனுமுறைகள் தேசமெங்கும் பரவின. பாலசிக்ஷையைச் செய்விக்கும் விஷயத்தில் அவர் கொண்ட கொள்கைகளாவன:- சிறு குழந்தைகளை சிறு செடிகளுக்கு ஒப்பாகச் சொல்லுகிறார். ஒரு சிறு கெட்டியான மாங்கொட்டையை எடுத்து நல்ல சாரமான பூமியில் நட்டுச் செம்மையாகத் தண்ணீர் வார்த்தால், அந்தக் கொட்டை முன்போலக் கெட்டியாயிராமல் மெதுவாகிப் பருத்துத் தோல் உடைந்து முளை கிளம்புகின்றது. ஒரு முளை கீழ்முகமாய்ச் சென்று வேர் ஆகிறது; மற்றொரு முளை மேல்முகமாய்ப் புறப்பட்டுச் சூரியனுடைய உஷ்ணமும் மழையினுடைய குளிர்ச்சியும் பட்டுப் பூமிக்குமேலே கிளம்பித் தாள் அல்லது தண்டாக நின்று இலைவிடுகிறது. அடிவேரில் தண்ணீர் ஊறி மேலே சூரியகிரணம் படப்பட இலைகள் அதிகமாக விடத் தலைப்பட்டுச் செடி வளருகின்றது. அப்புறம் மொகிழ்கள் விட்டுப் புஷ்பங்களாக மலர்ந்து பிறகு அவை வாடி வதங்கி உதிர்ந்த பின்பு பச்சென்று சிறிய காய்கள் தோன்றிப் பருத்துப் பழங்களாகின்றன. ஒவ்வொரு பழத்திலும் முதலில் நாம் நட்ட கொட்டையைப்போன்ற கொட்டை உண்டாகிறது இவ்வண்ணம் ஒரு அற்ப விதையினின்று எவ்வளவு உண்டாகின்றன? வேர், தண்டு, இலைகள், புஷ்பங்கள், பழங்கள், எண்ணிறந்த விதைகள் இவ்வளவெல்லாம் உண்டாகின்றன வல்லவா? நல்லது, விதையை முதலிலேயே உடைத்துப் பார்த்தால் என்ன கிடைக்கும்?—ஒன்றுமில்லை. மேற் சொல்லியபடி சாரமான பூமியில் நடுவது, நல்ல தண்ணீர் வார்ப்பது, சூரியகிரணம் படும்படி செய்வது முதலிய உபாயங்களைச் செய்தால் மாத்திரமே பலன் உண்டாகும். சிறுவர்களும் இத்தன்மையான செடிகளுக்குச் சமானமாம். அதெப்படியெனில், இலை புஷ்பம் பழம் விதை முதலியவெல்லாம் ஒரு சிறிய விதைக்குள் அடங்கியிருப்பதுபோலவே பிள்ளைகளினுடைய அறிவுகளும் சக்திகளும் இளங்குழந்தையினிடத்திலேயே அமைக்கப்பட்டிருக்கின்றன. தகுந்த காலத்தில் தகுந்த வழியாய்ப் பாலகர்களுடைய அறிவுகளையும் திறமைகளையும தூண்டிவிட்டு அபிவிர்த்தி பண்ணினால், பெரியவனுகுங் காலத்தில் தேச சவுக்கியமும் விவேகமும் பூததயை பச்சாத்தாப முதலிய நற்குணமுள்ள பெரிய மனிதனுவான்.

ஃ

---

ஊருக்கெல்லாம் வேண்டிய மனிதனாக நடந்து கொள்ளுகிறவன் எவனுடைய நலத்தையும் கவனிக்கமாட்டான். ஒருவருக்காகப் பரிந்துபேசி மற்றொருவரின் விரோதத்தையும் தேடிக்கொள்ள மாட்டான். ஒருவன் தனக்கு மற்றவன் செய்த கொடுமைகளைக் கூறினால் அவற்றைக் கேட்டுவிட்டு "அப்படியா சங்கதி" என்று தலையசைத்து மெதுவாக நழுவி விடுவான். ஆதலின் இத்தகையோர் நேசம் உறவு இருப்பதிலும் இல்லா திருப்பதே மேல்.

ஆனல், செடிகளில் பலவித மிருப்பதுபோல் பிள்ளைகளிலும் பல விதமுண்டு. செடிகளின் குணத்துக் குத் தகுந்தபடி எரு போடுவதுபோல் பிள்ளைகளின் சுபாவத்துக்குத் தக்க படி போதனையும் இருக்கவேண்டும். குழந்தைகளிடத்தில் காணப்படுகிற அடையாளங்களை அறிந்து அந்தந்தக் குழந்தைகளுக்குத் தக்கபடி நடத்த வேண்டும். சுறுசுறுப்புள்ள குழந்தை களை எதையும் செய்யவொட்டாமல் அடக்குவது அவர்களைப் பலவீனப் படுத்துவதாகும். குழந்தைகளுடைய மற்ருெரு குணம், பொருள்களை ஆசை யுடன் கவனிக்கும் நுட்ப அறிவாகும். அவர்கள் கேட்கும் கேள்விகளுக்கு விவரமான பதில் சொல்லி உற்சாகப் படுத்துவதும் அவசியம். பிரகாசமான தீபம், பளபளப்புடனுள்ள பொருள் கள், இன்பமான ஓசை இவற்றில் குழந்தைகளுக்குக் களிப்பு அதிகம். அந்தக் களிப்பை விருத்தி செய்ய வேண்டும். ஒருவரையொருவர் நேசித் திருக்கவும் விளையாடவும் விரும்புவது குழந்தைகளின் இயற்கை. அதைப் பெருகச் செய்யவேண்டும். பொருள் களைச் சோதனை செய்கிற சுபாவமும் குழந்தைகளுக்கு உண்டு. ஒரு கடியா ரம் எப்படி ஓடுகிறதெனில், அதையும் அவர்களுக்கு விளக்கவேண்டும். நூதன சிருஷ்டிப் பொருள்களைக் காண்பதில் குழந்தைகளுக்கு இருக் கும் ஆசையை அபிவிர்த்தி செய்ய வேண்டும்.

ஃ

கண்ணுக்குத் தெரிகிற சரீரம் மாத்திரமே குழந்தையல்ல! அறிவதற் கும் யோசிப்பதற்குமான புத்தியும் ஒருவரையொருவர் நேசிப்பதற்கான இருதயமும் சேர்ந்த குழந்தையின் சுபாவம் மூன்றுவிதமாயிருக்கின்றன. இந்த மூன்று வகைகளிலும் பயிற்சி வேண்டும். புத்தியைமட்டும் பயிற்று விப்பவன் வித்வானுகலாமே தவிர, சரீராரோக்கியம் ஏற்படாது. படிப்பு வேண்டாமென்று சரீரத்தைமட்டும் பாதுகாத்தாலோ அவன் முரடனும் கல் நெஞ்சனுகவும் மாறுவான். இரு தயத்தை மாத்திரம் பயிற்றுவித்தால் பரோபகாரியாயும் புண்ணிய காரியங் களைச் செய்வோனுகவும் ஆகலாமே யன்றி தேகபலம் அவனுக்கு இராது. ஆகவே, தேகம், புத்தி, இருதயம் இம்மூன்றுக்கும் தக்க பயிற்சி ஏற்பட வேண்டும். ஜீவ ஜந்துக்களும் பூஞ் செடிகளும் உள்ள இடங்களில் குழந் தைகள் வளர்ந்தால்தான் அந்த சிருஷ் டிப் பொருள்களை யெல்லாம் ஆராய் கிற அறிவு விர்த்திகொள்ளும். புஸ்த கங்களைப் பார்த்துப் படித்து அறிகிற ஞானத்தைவிட ஒருவர் சொல்லக் கேட்டு அறிகிற ஞானம் சிறந்தது. ஏனென்ருல் முன்னதைப் பார்க்கி லும் பின்னது நீடித்து நிற்கக்கூடி யது. இரண்டு தெரியாத குருடர்களா னுலும் கேள்வியினுலேயே மிகுந்த ஞானம் சம்பாதித்துச் சிலர் பிரசித்தி அடைகிருர்கள். கண் மாத்திரமல்ல, காதும் ஒரு ஞானக் கருவியே.

ஃ

குழந்தைகளுக்குக் கதையில் இயற்கையாயுள்ள ஆசையை வளர்க்க வேண்டும். கதையென்ருல் கட்டுக் கதையே யென்று அர்த்தமல்ல. வாஸ் தவமான விஷயங்களின் வரலாறும் கதைதான். மாட்சிமை தங்கிய பெரி யோர்களையும், அவர்களுடைய மேன் மையான செய்கைகளையும்பற்றிக் கேட்கும்போது நம்முடைய மனது

---

ஒருவனுடைய உதவிகளைப் பல முறை பெற்றிருந்தாலும் இனி அவன் உதவி செய்யானெனத் தெரிந்ததும், அவனை அலக்ஷியமாய் நினைத்து ஒதுங்கிக் கொண்டு தூற்ற ஆரம்பித்து விடுகிருர்கள்.

உருகி, நாமும் நீதிவழியில் நின்று கூடியமட்டும் நல்ல பேர் எடுக்க வேண்டுமென்று தோன்றுகிறதல்லவா? நமக்கே அப்படியிருக்கும்போது, பிள்ளைகளுக்கு இன்னும் எவ்வளவு இனிப்பாயிருக்கும் என்பதை ஊகித்தறியலாம். கதையினுல் குழந்தைகளினுடைய இருதயத்தை வென்று சந்தோஷத்தை உண்டுபண்ணலாம்; விசனத்தையும் உண்டுபண்ணலாம்; சிறப்பான காரியங்களை மெச்சிக்கொண்டாடவும், இழிவான செய்கைகளை வெறுக்கவும் செய்யலாம். அவர்களுக்குத் தெரியாத சூட்சுமங்களைத் தெரிவிக்கலாம். கண்ணுக்கெட்டாத தேசங்களில் மனதைச் செலுத்தி அங்குள்ளவைகளையும் மனக் கண்ணினுல் அறியும்படி செய்யலாம். முற்காலத்தில் வாழ்ந்திருந்த பெரியோர்களை மனதினுல் சிநேகிக்கும்படி செய்யலாம். எக்காலத்திலும் நன்மையை நாடித் தீமையை விலக்கும்படி செய்யலாம். கதையினுல் மனதுக்கு ஒருவிதமான ஆநந்தத்தையும் உண்டுபண்ணலாம். நம்முடைய வாய்ச் சொல்லினுல் குழந்தைகளுக்கு எவ்வளவு இன்பம் உண்டாகக்கூடுமோ அவ்வளவு புஸ்தகத்திலிருந்து ஒரு கதையைப் படித்துக் காட்டுவதினுல் உண்டாகாது. ஆனதுபற்றி எப்போதும் கதையை நம்முடைய சொந்த வார்த்தைகளினுலேயே சொல்லவேண்டும். கதை முடிந்தபிறகு புஸ்தகத்திலுள்ள படத்தைக் காட்டவேண்டுமேயல்லாது முன்னதாகக் காட்டக்கூடாது. எப்படிப்பட்ட சங்கதியைக் குழந்தைகள் அறியக்கூடுமோ அப்படிப்பட்டதை மாத்திரமே அவர்களிடத்தில் சொல்லவேண்டும்.

ஃ

புத்திசூட்சும முள்ளவரான ப்ரொபெல் குழந்தைகளின் விளையாட்டுக் கருவியாக முதன் முதலாய் வர்ணமிட்ட தோல்பந்தைக் கொடுத்தார். வர்ணமிட்டிருப்பதால் அது குழந்தைகளின் மனதைக் கவருமென்றும், கண்ணுக்கும் அழகாயிருக்குமென்றும் கையில் தொடுவதற்கு நேர்த்தியாயிருக்குமென்றும், தப்பித் தவறிக் கீழே விழுந்தாலும் உடையாதென்றும், இந்தப் பந்தைக்கொண்டே அநேகம் விளையாட்டுகள் விளையாடலாமென்றும் அவர் கருதினுர். ப்ரொபெல் அவர்களின் சரித்திரத்தையும், அவரது போதனைகளையும் இங்கு சுருக்கிக் கூறி முடித்திருக்கிருேம்.

---

"நம் நாட்டு" மகளிர் பூர்வந்தொட்டு ஒழுக்கத்திற் சிறந்தவர்கள்; இவர்களுக்காகிய ஒழுக்கமும் கட்டுப்பாடுகளும் சிறந்தவை. இவர்கள் தெய்வம்—மனசாட்சி—உலகம்—பாவபுண்ணியம்—என்ற இவைகட்குப் பயந்து நடப்பவர்கள்; கன்னியர்களாயுள்ளாரை எவரும் அணுகுதலரிது. ஏனைய சாதிப் பெண்கள்போல் "நம் நாட்டு"க் கன்னிகையராயுள்ளோர் ஒதுக்கமின்றி வெளியிற் போதலும், நியதியின்றி எவருடனும் ஊடாடுவதும், பிரமச்சாரினிகட்காகிய விரதங்களை அநுஷ்டியாதொழிலும் இல்லையாகும். "இ—சா".

---

நமக்கு ஒரு அருமையான நூல் வந்திருப்பின் அவற்றை நம் நண்பர்களிடம் காண்பித்துச் சந்தோஷப் படுவதற்கில்லை. நாம் கபடமற்று அந்நூலை அவர்கட்குக் காண்பிப்பினே பிறகு நாம் அந்த நூலைப் பார்ப்பதற்கில்லாதபடி இரவலில் பெற்றுச் சென்று விழுங்கிவிடுகிறுர்கள். ஆகவே, நம்மிடம் அந்த நூல் இருக்கிறதாவென்று அவர்கள் கேட்பினும் கூட "இல்லையே!" என்று பதில் சொல்ல வேண்டியதாகிறது! இவ்விதம் பொய் கூருவிடில் நமது மடைமையினுல் அந்த நூலை நாம் அநியாயமாக இழந்தவரே யாவோம்.

# கமலத்தின் விவாகம்.



அவர் ராஜா எடுத்துக் கொண்டு வந்ததற்கு மூன்று காரணங்கள் உண்டு. (1) திருவல்லிக்கேணியில் இருக்கும் தன் சொந்த வீட்டைப் பழுதுபார்ப்பதற்கும், (2) பதின் மூன்று வயதான தன் குமார்த்தி கமலத்திற்குத் தகுந்த வரன் தேடி மணமுடிப்பதற்கும், (3) இரண்டு வருஷங்களாய் மறந்திருந்த சென்னை காபி ஹோட்டல்களில் கிடைக்கும் அரிய பலகாரங்களைத் தின்று ருசி பார்ப்பதற்குமாகும். சென்னை வந்ததும் ராமாநுஜாச்சாரியார் தமது வீட்டைப் பழுதுபார்ப்பதிலிருந்தார்.

ஃ

ராமானுஜாச்சாரியாரின் தமக்கை மகன் சம்பத் என்பவன் பிரசிடென்சி காலேஜில் பீ. ஏ. வகுப்பில் வாசித்துக்கொண்டிருக்கிறான். சம்பத் தற்கால நாகரீகத்திற்கேற்ப தன் தலைமுடியை கிரூப் செய்துகொண்டிருப்பதுடன், எப்பொழுதும் கிஜார் பூட்சுடன் விளங்குவதாலும், காலையில் கூவரக்கத்தியும் கையுமாய் எழுந்திருப்பதாலும், அவன் நடை, உடை, நம் வைதீகசம்பிரதாயரான ஆச்சாரியாருக்கு சற்றும் பிடிக்கவில்லை. மேற்கூறிய காரணங்களை முன்னிட்டு தான் தன் மகளை சம்பத்துக்கு மணம் முடிக்க முடியாதென்று தன் தமக்கைக்குக் கண்டிப்பாய்த் தெரிவித்து விட்டதுமன்றி, வேறு வரன்கள் தேட ஏற்பாடுகளும் செய்துவிட்டார்.

ஃ

ஆச்சாரியார் மனதிற்குப் பிடித்த இரண்டு மூன்று வரன்களைத் தரகர்கள் கண்டுபிடித்துவிட்டார்கள். இவ்விரண்டு மூன்று பேரையும் நேரில் பார்த்து, அவர்களுள் மேன்மையானவனுக்குக் கமலத்தைக் கன்னிகாதானமாகக் கொடுப்பதென்று தீர்மானித்து விட்டார். ஃ

சென்னையை விட்டுப் போய் இரண்டுவருடங்களுக்கப்பால் திரும்பி வந்திருக்கும் ஆச்சாரியாருக்கு 'டாக்கி' என்னும் பேசும் சினிமா படக்காட்சி புதுமையானதுதானே? ஆகவே ஒரு நாள் மாலை 'எலிபின்ஸ்டோன்' டாக்கிக்கிப் போக எண்ணி மோட்டார் பஸ் ஏறி ரவுண்டுடாணு இருந்த இடத்திற்கு நேராக வந்து சேர்ந்தார். பஸ் பழைய 'ரமா' ஹோட்டலுக்கெதிரில் வந்து நின்றது.

ஃ

சம்பத்தும் தற்செயலாக அதே பஸ்விலிருந்து இறங்கினான். ஆனால் ஆச்சாரியார் முன்னிறங்கிவிட்டதால் அவனைக் காணவில்லை. இவர்கள் இறங்கும்போது சிறு தூறலாக மழை தூறிக்கொண்டிருந்தது. ஹோட்டலுக்குள் போய் ஒரு கப் 'டீ' சாப்பிட்டுவந்தால் அதற்குள் மழையும் நின்றுவிடும் என்ற எண்ணத்துடன் ஆச்சாரியார் நேராக உள்ளே நுழைந்தார். ஃ

---

எதிர்த்துப் பேசும் மனைவியை அந்த சமயத்தில் அவள் போக்குபோல் விட்டு விட்டு, அவள் தன் காரியத்திற்காகக் கெஞ்ச வருகிற மற்றோர் சமயத்தில் இடித்துக் காட்டித் திருத்துவதே உசிதமாயிருக்கலாம்.

இவர் சென்னையை விட்டுப் போன இரண்டு வருடங்களுக்குள் ஏற்பட்டிருக்கும் மகத்தான மாறுதல்களில், 'ரமா' ஹோட்டல் கட்டிடம் மாறி இருப்பதும், பழைய கட்டிடத்தில் மகம்மதிய சிற்றுண்டிச்சாலை வந்திருப்பதும் ஆச்சாரியாருக்குத் தெரியாது.

ஃ

மகம்மதியர் ஹோட்டலுக்குள் தன் மாமா நுழைவதைப் பார்த்த சம்பத்திற்கு ஆச்சரியமும், ஆத்திரமும், உண்டானது. அவர் வெளியே வந்ததும், 'இவ்வளவு வீர வைதீகராய் இருப்பதால்தான் கமலத்தை எனக்குக் கொடுக்க மறுத்து விட்டீரோ ?' என்று கேட்டு அவமானப் படுத்திவிட்டுப் போகவேண்டும் என்ற தீர்மானத்துடன், மழையையும் பொருட் படுத்தாது அங்கிருந்த வெற்றிலைப்பாக்குக் கடைக்காரனிடம் பேசிக்கொண்டே நின்றான்.

ஃ

நிற்க, உள்ளே நுழைந்த ஆச்சாரியார் இப்படி அப்படி பார்க்காமல் பிராமணர்களுக் கென்றிருந்த இடத்தை அடைய எண்ணி நேரே உள்ளே போகப் போனார். அங்கிருந்த ஒரு பையன் இடது பக்கம் கையை நீட்டி, வில் கதவுகள் வைத்திருக்கும் கண்ணாடி அறைகளுள் ஒன்றிற்குப் போகும்படி ஜாடை செய்தான்.

ஃ

அறைக்குள் வைத்திருக்கும் கண்ணாடிகள், படங்கள், ஆளைக் கூப்பிடும் மணி முதலியவற்றைப் பார்த்து ஆச்சாரியார் ஆச்சரியப்பட்ட வண்ணம் 'ஊரை விட்டு ஊர்வந்து காப்பி கிளப் வைத்து எவ்வளவு பணக்காரர்களாகி விடுகிறார்கள்' என்று எண்ணிக் கொண்டே இருக்கையில் 'கியா தேவும் சாப்' என்று பணிவாக ஒரு வாலிபன் பகர்ந்தான். ஆச்சாரியாருக்கு ஆங்கிலம், தமிழ் தவிர வேறெந்த பாஷையிலும் ஒரு அட்சரமும் தெரியாதாகையால், பையன் புதிதாக வந்திருக்கிறான் போலிருக்கிறது என்று எண்ணி 'ஒரு கப் டீ கொண்டுவா' என்றார். பையனும் அதை அறிந்துகொண்டு டீ ஒரு கப் கொண்டுவந்து வைத்தான். "டீ ஸ்ட்ராங்காய் இருக்கிறது கொஞ்சம் பால் கொண்டுவா" என்று தமிழும் ஆங்கிலமும் கலந்து மணிப்பிரவாளமாய்ச் சொன்னார். அவன் மற்றொரு கோப்பையில் சிறிது பால் கொண்டுவந்து வைத்து விட்டு வெளியே போய் விட்டான்.

ஃ

தற்கால நாகரீகங்களுக் கேற்ப 'டலாரா' 'டம்ளர்'ருக்குப் பதில் 'கப்சாசர்' வந்திருக்கிறது போலும் என்று "டீ" பருகிக்கொண்டே எண்ணினார். இதற்குள் மழை மும்மரமாகப் பிடித்துக் கொள்ளவே, சூடாக வெங்காய பஜ்ஜி கொண்டுவரச் சொல்லி சாப்பிடலாம் என்று எண்ணி, மணியின் விசையை அமுக்கினார். பையனும் ஒரு பிளேட்டில் பில்லுடன் வந்து எதிரில் ஆஜரானான், 'வெங்காய பஜ்ஜி ஒரு பிளேட் கொண்டுவா' என்றார். அவன் அதற்கு ஏதேதோ புதுமையான பல பேர்களைச்சொன்னான். இச் சென்னையில் பலகாரங்களுக்கு பல விநோதமான பெயர்கள் வைக்கும் சம்பிரதாயங்கள் உண்டென்று ஆச்சாரியாருக்

---

தாய் வீட்டிற்குச் சென்ற மனைவி குறித்த தினம் வராவிடில் அவளுக்காக எதிர்பார்த்த கணவன் அவள் இன்று வராவிட்டால் பாதகமில்லை ; தொல்லையற்று இருக்கலாம் என்கிறான். ஆனால், அவனது உள் மனமோ மனைவியின் வரவை விரும்பி நிற்பதை அவனால் தடுக்கக் கூடவில்லை.

குத் தெரியும். ஆனாலும் வெங்காய பஜ்ஜிக்கு இத்தனை பெயர்களா வைத்திருப்பார்கள் என்று அவர் மூளையை உடைத்துக்கொள்ளத் தொடங்கினர்.

ஃ

பையன், தான் சொன்னதை அவர் தெரிந்துகொள்ளவில்லை என்று நினைத்து ஆச்சாரியாருக்குப் பின்னால் தொங்கிக்கொண்டிருந்த (சட்டம் போட்ட) சிற்றுண்டிகளின் பெயர்களையும், விலைகளையும் அழகாக அச்சடித்த சீட்டை எடுத்து அவர்கையில் கொடுத்தான். ஆச்சாரியார் இதுவும் ஒரு மாறுதல்தான் என்று நினைத்துப் புன்சிரிப்புடனே கையில் வாங்கினர். அந்தச் சீட்டில் பேஷான மாமிஸ பக்ஷணங்களும், மாமிஸக்கூட்டோடு தயாரித்த பக்ஷண தினுசுகளும் விதம் விதமான பெயர்களுடன் இருந்தன.

ஃ

வாங்கின சில விநாடிகளுக்குள் அவர் கையிலிருந்த சட்டம் பெரிய சப்தத்துடன் கீழே சாய்ந்தது. பையன் பாய்ந்து தாங்கிப் பிடிக்காமலிருந்தால் ஆச்சாரியாரும் கீழே விழுந்திருப்பார். எதிர்பாராத இவ்வித காட்சியை கண்டவுடன் பையன் திகிலடைந்து போட்ட கூச்சலில் எல்லோரும் அவ்வறையை நோக்கி ஓடினார்கள். வெளியே நின்றிருந்த சம்பத்தும் அவனை அறியாமலே உள்ளே நுழைந்தான். ஃ

ஆச்சாரியார் மூர்ச்சையாகிவிட்டதால் அவர் முகம்வெளுத்திருந்தது. சம்பத் அவன் மாமன்பேரில் கொண்டிருந்த ஆத்திரத்தை முற்றிலும் மறந்து ஒரு வாடகை மோட்டார் கொண்டுவரச்செய்து சமீபத்திலுள்ள அவன் நண்பரான ஒரு டாக்டர் வீட்டிற்கு அவரை எடுத்துக்கொண்டு போனான். ஃ

டாக்டர் செய்த சிகிச்சைகளின் பலனாக கால்மணி நேரத்தில் ராமானுஜாச்சாரியார் கண்திறந்து ஒரு முறை சுற்றிலும் பார்த்துவிட்டுக் கண்களை மூடிக்கொண்டார். அவர் ஒரு புது அறையில் படுத்திருப்பதும், அவர் அருகாமையில் சம்பத்தும், மற்றொருவரும் உட்கார்ந்திருப்பதும் கனவாக இருக்குமோ என்று எண்ணினர். ஆனால், இது கனவல்ல என்று அவர் செவிகளில் முரசுகொட்டுவதைப்போல் சம்பத் 'மாமா உங்களுக்கு இப்பொழுது உடம்பு எப்படி இருக்கிறது?' என்று கேட்டான்.

ஃ

ஆச்சாரியார் தாம் அறியாமல் முகம்மதியர் கிளப்பில் நுழைந்து டபருகின வருத்தத்தைவிட, சம்பத்திற்குத் தெரிந்துவிட்டதே என்ற அவமானம் பதின்மடங்கு அவரைப் பாதிக்கவே, வாய்விட்டு அலற, வருந்த—புலம்ப ஆரம்பித்தார்.

ஃ

சம்பத் இயற்கையிலேயே அதிக பட்சாத்தாப சுபாவமுடையவன். அதிலும் தன் தாய்மாமன் அறியாமல் செய்து விட்ட பிழைக்காக வருந்துவதைப் பார்த்து சகிக்க மாட்டாதவனாய், தான் அவ்விஷயத்தைப்பற்றி ஒருவருக்கும் மூச்சு விடுவதில்லை என்று பிரமாணம் செய்து அவரைத்

---

கலியாணமாகாத மேயோ எழுதியுள்ள நூலில் இருக்கிற சின்ன வீட்டுச் சேதியான காம விஷயங்களைப் பார்த்தால் இவைகளெல்லாம் இந்தக் கன்னிகைக்கு எப்படித் தெரிந்ததென்று ஆச்சரியமுண்டாகிறது.

தேற்றினான். தன் மானத்தை வெளியிடாமல் காப்பாற்றியதற்குத் தக்க பரிசு கொடுப்பதாக ராமாநுஜாசாரியாரும் சொன்னார். மனிதர்களின் மனம் முன் தாம் கொண்ட தீர்மானத்திலிருந்து ஒரேயொரு நிமிஷத்தில் தானே மாறிவிடக்கூடு மென்பதற்கு நமது ஆச்சாரியார் ஒரு உதாரணம்.

ஃ

சற்று குணமடைந்ததும் ராமாநுஜாச்சாரியாரை அவர் வீட்டிற்கழைத்துப்போய் விட்டுவிட்டு சம்பத் தன் வீட்டிற்குச் சென்றான்.

ஃ

அடுத்த தை மாதம் சம்பத்திற்கும் கமலத்திற்கும் விவாகம் நடத்த நிச்சயித்திருக்கிறது என்பதை நாம் சொல்லாமலே வாசக நேயர்கள் அறிந்து கொண்டிருப்பார்கள் என்பது திண்ணம். அதுதான் தன் மானத்தை வெளியிடாது சம்பத் காப்பாற்றியதற்கு அவர் கொடுத்த பரிசாகும். இதைவிடப் பெரிய பரிசு இவ்வுலகில் வேறொன்று இல்லையன்றோ? T. S. ரங்கராஜு,

ஜெகநாதபாக், சைதாபேட்டை.

[முதன் முதலாக ஒரு தவறுதலைச் செய்கையில் இந்த ஆச்சாரியாரைப்போன்றுதான் எவரும் வருந்துவது இயற்கை. ஆனால், அதே தவறுதலை இரண்டாம் முறை செய்கையிலோ—அதில் தேறிப் போனவர்கள்போலுங் காண்பித்துக் கொள்கின்றனர். இது ஒரு படி தவறப் பல படிகளும் தவறுந்தன்மையை யொத்ததாகும். இங்கு முதல் தவறுதலில் தானே இனி அத்தவறுதலைச் செய்யாதவாறு தன்னைத் தடுத்துக் காத்துக்கொண்டதை இக்கதை விளக்குகின்றது. முஸ்லிம்களுடன் உண்பதில் ஹிந்துக்களுடைய மனோபாவவுணர்ச்சி இன்னவாறுள்ளதென்பதையும் இக்கதை குறிக்கும். ஆயினும் நட்பினாலும், அன்பாலும் ஒன்றுபட்டுப்போன ஹிந்து—முஸ்லிம்களிடையில் இந்த ஜாதிபேதமின்றி அவர்கள் (பலகார பக்ஷணங்களில் மட்டும்) ஒன்றாக உண்பதும் கூடும். எல்லாவற்றிற்கும் மனமே காரணம். நெடுங்காலமாகத் தொடர்ந்து வருகிற வழக்கமும் ஆசாரணைகளும் மற்றொரு காரணமாகலாம் போலும்! ப—ர்.]

## சந்தா நெம்பர்.

தாங்கள் எமக்கு அனுப்பிவைக்கும் மணியார்டர் கூபனிலும், கடிதங்களிலும் இவ்வருடத்திய தங்கள் சந்தா நெம்பரை அவசியம் குறிப்பிட்டு எழுதவேண்டுகின்றோம். தங்கள் விலாசம் எழுதியனுப்பிய ராப்பர் காகிதத்தின் வலதுபக்கத்திலுள்ள சந்தா நெம்பர்..................என்று குறிப்பிட்ட இடத்திலுள்ள உங்கள் சந்தா நெம்பரை குறிப்பிட்டு எழுதக் கோருகிறோம். S. G. R.

எவ்வளவோ செட்டுக்காரர்களென்று பேர். அவர்களும் சில இடங்களில் தாராளமாய் அபரிமிதமாகவே செலவிட்டு விடுகிறார்கள். அவ்விதச் செலவு, அதிக அவசியமென்று அவர்களுக்கு அந்த வேளையில் படுகிறதாக்கும்.

# சிறுமணித்திரள்

(508-ம் பக்கத் தொடர்ச்சி.)

[மகான் அரவிந்தர் மனைவியாருக்கு எழுதிய கடிதம்.]

936. துன்பம் வந்தா லென்ன? அதைப் பொருட்படுத்தலாகாது.

937. உலக இன்பத்தைத் தேடப் போனால் அவ்வின்பத்தினிடையே துன்பம் எப்போதும் தோன்றும். இன்பத்தைத் துன்பம் எப்போதும் ஓட்டி நிற்கின்றது.

938. சுக துக்கங்கள் எல்லாவற்றையும் அமைதியுடன் ஈசனது திருவடிகளிலே சமர்ப்பணம் செய்து விடுவதாகிய ஒரு வழிதான் மனிதனுக்குண்டு.

939. அசாதாரணமான அபிப்பிராயங்களையும், அசாதாரணமான ஆசைகளையும் பற்றிச் சாமானிய மனிதர்கள் என்ன சொல்வார்கள்? அவ்விதமான இயக்கங்களைப் "பைத்தியம்" என்கிறார்கள். அப்படிப்பட்ட பித்தன் எடுத்த காரியம் நிறைவேறி விட்ட பிறகு அவனை மகானென்றும், வர புருஷனென்றும் சொல்லுகிறார்கள்.

940. ஸ்திரீகளுடைய ஆசைகளெல்லாம் உலக சுக துக்கங்களைப் பொறுத்தவையா யிருக்கின்றன.

941. பத்தினியே கணவனுக்குத் தர்மத்துணை யாவாள். அவன் எதை தர்மம் (மதம்) ஆகக் கொள்கிறானோ அதில் ஸ்திரீ துணையாய் நின்று உதவி செய்யவும், யுக்தி சொல்லவும், உற்சாகப்படுத்தவும் வேண்டும்.

942. தனது தர்மம் இது என்பதைத் தெரிந்தெடுத்துக் கொள்வது புருஷனுடைய கடமை. அதில் அவனுக்குத் துணை புரிந்து உற்சாகப் படுத்துவது ஸ்திரீயின் கடமை.

943. ஈசன் கொடுத்த நன்மைகள் முழுவதையும் தன்பொருட்டே செலவிட்டு விடலாகாது. மிஞ்சியிருப்பதைத் திருப்பிக் கொடுத்து விடவேண்டும். ஈசனுடைய கைங்கரியத்திலே செலவிட வேண்டும்.

944. ஈசனிடமிருந்து செல்வம் கிடைக்கப் பெற்றுக்கொண்டு அவர் கைங்கரியத்திலே விநியோகம் செய்யாதவன் திருடன்.

945. மிருகம் கூடத் தனது சொந்த வயிற்றையும் தனது குடும்பத்தாரின் வயிற்றையும் நிரப்பிவிட்டுத் தான் அதிகம் உழைத்துவிட்டதாக நினைத்துக் கொள்ளுகிறது.

946. நாம் கடவுளுக்குக் கொடுப்பதென்றால் எப்படி? தர்மச் செயல்களிலே நமது பொருளைச் செலவிடுவதே அதற்கு வழியாகும்.

947. தன்னைச் சார்ந்தோர்களை ஆதரிப்பதே தெய்வபக்தியில் ஓர் பகுதியாகும்.

948. ஒருவன் தனது கூடப் பிறந்த சகோதரர்களுக்கும் சகோதரிகளுக்கும் கொடுப்பதினாலே மட்டும் அவனுடைய தர்மம் நிறைவேறிவிடவில்லை.

949. தற்காலத்தில் ஜனங்கள் எடுத்ததற் கெல்லாம் ஈசன் பெயரைச் சொல்வதும், எல்லோர் கண் முன்பும்

நின்று தொழுது தமது பக்தியை உலகத்தாருக்குக் காட்டுவதும் தர்ம (மத) மாகப் பாராட்டுகிறார்கள்.

950. பரமாத்மா ஒன்று இருப்பது மெய்யானால் அதன் உண்மையை நாமே உணர்ந்து அதை நேராகக் காண்பதற்கு ஏதேனும் ஒரு வழி இருந்தே தீரவேண்டும்.

951. சாமான்யமாகப் பலர் இந் நாட்டை வெறுமனே மைதானங்களும், வயல்களும், காடுகளும், குன்றுகளும், நதிகளு முடையதோர் உயிரற்ற பொருளாகக்கருதுகிறார்கள்.

952. ஞானத்தை ஆதாரமாகக் கொண்டு நிற்கும் ஆத்மபலம் என்பதோர் சக்தி இருக்கின்றது.

953. மனைவியே கணவனுக்குப் பெரியதோர் தைரிய ஏதுவாயிருக்கிறாள்.

954. தனது சொந்தச் சாயையே புருடன் தன் மனைவி யிடத்தே காண்பதனாலும், தனது உள்ள விருப்பத்தின் எதிரொலியையே அவளிடமிருந்து கேட்பதனாலும் அவனது வல்லமை இரு மடங்காகி விடுகின்றது.

955. ஒரே நோக்கத்துடனும் திட சித்தத்துடனும் எடுத்த காரியத்தை நிறைவேற்றப் பழகுதல் வேண்டும். மற்றவர்களுடைய சொற்களையும் இகழ்ச்சிகளையும் கவனிக்கலாகாது.

956. தர்மம், அருள், மனோரதம், உயர்ந்த முயற்சி, இவை போன்ற சிரத்தைக்கிடமான பெரிய விஷயங்களை இக்காலத்து ஜனங்கள் எளிதாகப் பேசி நகைத்து விடுகின்றார்கள்.

P. G. குலசேகரன்

## சிலருடைய சுடு சொற்களின் அலங்கோலம்.

அற்ப விஷயத்திற்கும் சாமான்ய சங்கதிக்கும் சிலர் பெரிய சுடுவார்த்தைகளைப் பிரயோகித்துவிடுகின்றனர். இவ்விதம் சுடுசொல் கேட்கத் தலைவிதியா என்று நெஞ்சு வெந்து செந்தணலாகின்றது. தனக்கு சமமில்லாத—தன்னாலேயே உதவி பெற்ற மனிதன் தன்மீதே சுடுசொல் கூறுகையில், யாரோ ஒரு அன்னியனிடமிருந்து ஏன் இந்த சுடுசொல்லைப் பெற்றோம் என மனம் மிக மிக நோகின்றது. ஆனால், சுடுசொல் கூறிய மனிதனின் குணம் இந்தச் சிறு சங்கதியில் விளங்கிவிடுவதில் அந்த மனுஷ்யனைப்பற்றிநமது வாணாள் முழுமைக்கும் தெரிந்துகொள்ளவேண்டிய ஒரு பெரிய அறிவுக்கு இந்த சம்பவம் வெகு சகாயமாய் முடிவதற்கு நாம் சந்தோஷிக்க வேண்டியதே. ஒருவருடைய குணமும் அறிய ஒவ்வொரு சந்தர்ப்பம் வேண்டும் அப்பொழுதுதான் அவரவர்களின் உண்மைக்குணம் திடீரென்று மண்பானை யுடைந்ததுபோல் வெளிப்பட்டுவிடுகிறது.




## மதுபானத் துன்பங்கள்.



1. தேனை பாலை பாகினை செழுங் கனிகளைத்
தேடுவார்கள் மானிடருள் தேர்ந்த யாவரும்
ஆனைபார்த்த குருடர்போன்ற அறிவிலார்களே
அந்தோ மதுவிரும்பு வர்.

2. கண்கள் உண்டு நாசியுண்டு காதுண்டாயினும்
காண்பதான மோப்பதான கேட்பதானமெய்ப்
பண்களும் யிழக்கவைக்கும் மதுவை யுண்பவர்
பரமார்த்த குருவின் சீஷரே.

3. எத்தனை அரசர்தங்கள் முடியிழந்தனர்
எத்தனை அமைச்சர்தங்கள் மதியிழந்தனர்
எத்தனை மனைவிமக்கள் நிலையிழந்தனர்
இந்த ஈனபானத்தால்.

4. மலையெனத் திரண்டசெல்வ மாண்பனுயினும்
மாநில மதிக்கவந்த சாதுவாயினும்
தலையினிற்கழிந்தரோம மனையமாறுவான்
சை! சை! மதுவையுண்பவன்.

5. சித்திரப் பதுமைபோன்ற பத்தினியோடு
தேடிடக் கிடைத்திலாத செல்வமக்களின்
ரத்தமும் கண்ணீருமன்றி என்னஉண்கிறுன்
ஹே! ஹே! மதுவையுண்பவன்.

*M. P. Mascarenhas.*

---

*சில இடங்களில் ஈன்ற மாதா எத்தனையோ கபட நெஞ்சம் துரோகத் தன்மையும் கொண்டிருந்தாலும், அவளது மக்கள் தங்கள் பிணிஅவஸ்தையின் போது "அம்மா அம்மா" என்று ஆயாசத்துடன் கூவிக்கொண்டுதான் தங்களின் உபாதையை அனுபவித்து அலறுகிறார்கள். தாய்மாரின் மனம் வேறுபட்டுக்கெடினும், அம்மா என்ற பதத்துக்குள்ள நிகரற்ற மேன்மையை அந்தப் பதம் ஒருபோதும் இழந்துவிடுவதில்லை. அதற்குள்ள மகிமை எப்போதுமுண்டு.*

# II

## உலகியல்.

1. தன் புத்திரியின் மனப்பிணி இன்னதென்றறியாத தந்தையின் அன்புமொழி

உன்னன்பிதுவோ? என்னுயி ரமிர்தே!
உனக் குரு துயர மெனக் குரையாத தென்?
விரும்பிய தென் னென் றுரைக்கில் விசும்பி
லரும்பிய வம்புலியாயினுங் கொணர்வன்;
வருத்துவ தென் னென வழங்கின் மாய்ப்பன்
உறுத்துங் கூற்றுவனுயினு மொறுத்தே.
தாய்க்கு மொளித்த சூலோ? தையால்!
வாய்க்கு மொளித்த வுணவோ மங்காய்!

ஃ

2. மக்களில்லா வாழ்வு.

பிள்ளையில்லாச் செல்வங் கள்ளியிற்
சோறே போலப் பேரேயின்றி
வேறே யென் பயன் விளைக்கும்?

ஃ

3. இயற்கையை நோக்கி மகிழ்வோனின் போக்கு :—

தனியே யுரைப்பன்; தனியே சிரிப்பன்;
எங்கேனு மொரு பூ விலை கனி யகப்படி
லங்கங் கதனையே நோக்கி நோக்கித்
தங்கா மகிழ்ச்சியிற் றலை தடுமாறுவன்.

ஃ

4. வஞ்சனை—நொந்துபடவே வழிஎனல் :—

வஞ்சனை யாற் பெறும் வாழ்வீ தென்னே!
நஞ்சு போற் றனது நெஞ்சங் கொதிக்கக்
கனவிலு நனவிலு நினைவுகள் பல வேழத்
தன்னுள்ளே பன் முறை சாவடைந் தடைந்து
பிறர் பொருள் வௌவும் பேதையிற் பேதை
யேறி கட லுலகி லிலை யிலை——

(மனோன்மணீயம்.)

---

நல்ல நினைவுகள் நினைப்பவர்கள் நன்மையையே கண்டடைவார்கள். கெட்ட நினைவுகளைக் கொண்டிருப்போர் ஆகாயவாணம் போல் வெகு சீக்கிரம் உயர்ந்து, கடைசியில் சிறு குச்சிகளாகக் கீழே விழுந்து இழி நிலை காண்பர்.

# ஆநந்த ஆசிரமத்தாரின் அன்பு.

ஸ்ரீராமஜெயம்.

திரிச்சிராப்பள்ளி "பிரஜாநுகூலன்" பத்திராதிபரும், பஞ்சாமிர்தமான "அமிர்த குணபோதினி"யின் பத்திரிகாசிரியரும், அநேக அரிய பெரிய நூல்களின் பிரசித்திபெற்ற கிரந்தகர்த்தாவும், ஆனந்தமான அநுபவ விநோத விஷயங்களை அமிர்தச் சுவையுடன் பிரபல பத்திரிகைகளுக்கு விஷயதானம் செய்பவரும், ராஜ ஔஷதங்களையும், அநுபவ ரோக நிவாரண தைலங்களையும் கண்டுபிடித்து உலகுக்கு உதவிய உத்தம இல்லறத் துறவி

திரிசிராபுரம், உயர்திரு. இராமாநுஜ சுவாமிகளுக்கு,

'பிரஜாநுகூல'னின் வெள்ளி ஜூபிளிக்காக

"ஆநந்த ஆஸ்ரம" வாசிகளின் அன்பின் அடையாளமாக

21—2—32-ல் அளித்த

## உபசாரப்பத்திரம்

கடல் புடைசூழ் இக்காசினியின்கண் அநுபவஞானம் பூர்த்தியாய் அமைந்த நாயுடு குலத்துதித்த நல்லாசிரிய!

உறவினர்பால் உண்டாகும் மனப்பற்றுக்கு—காதலுக்கு, அன்பென்று பெயர். தொடர்பில்லாமல் இயல்பாக எழுகின்ற கருணைக்கு அருள் என்று பெயர். இயற்கையில் எழுந்த அந்த அருளின் அடையாளமாக மேல் அரண்மனையை—மடத்தை—ஆநந்த ஆஸ்ரமமாக மாற்றிய நாயுடு குலதிலக!

ஆஸ்ரம வாசிகளின் மனதைக் கொள்ளை கொண்ட கள்வ! எங்கள் வழிபடு தெய்வமே! எங்கள் அன்பின் ஆலயமே! கல்வியில் பெரியோய்! அறிவினில் முதியோய்! சொல்லினிற் சிறந்தோய்! உண்ணவுண்ண உவட்டா உயரிய ஊக்கம், உலக இயல், ஆநந்தமான அநுபவ விநோதங்கள், சிந்தைக்கினிய சிறு விஷயங்கள், காதுக்கினிய கற்பனைக்கதைகள், வியக்கற்பாலதான நவநவ நுட்பறியும் நவீனங்கள், அநுபவ அடிக்குறிப்புகள், பாகோ—கண்டோ—சீனியோ—என ருசிக்கும் கட்டுரைகள், மஹா விகட விலாஸ விநோத விசித்திர விகட மாமாவின் மாதுரிய மாணிக்க வாசகங்கள், மேலான பத்திரிகா பூஷண வைடூரிய வசனகாவிய ஆனந்த கதா கல்பகம், நம்பியர்தம் துணை நங்கையர்தம் பொக்கிஷம்!!

---

பெண்கள் எவ்வளவோ அன்னியோன்னியமாய் மற்றப் பெண்களுடன் குலாவுகிறார்கள். ஆனால், ஒருத்திக்குத் தன் குழந்தைமேல் உள்ள கவனம் மற்றொருத்தியின் குழந்தைமேலிருப்பதில்லை. அந்தக் குழந்தை அழுது கொண்டிருந்தாலும் பார்க்காதது போல் ஜாடையாகப் போய்விடுகிறாள்!

அத்தகைய சிலாக்கிய குணபூஷண அபூர்வ அமிர்தத்தைக் கடைந்தெடுத்த, அது எது? எது அது??.........அதுவே ஜனனுகூலத்திற்கு உடந்தையான உங்கள் "பிரஜாநுகூலன்."

அலைகடல் சூழ் அவனிதனில் அவதரித்த ஆரிய மைந்தா! அன்னை பாரதியின் பணியில் ஆர்வம்கொண்டு, பொதுஜனசேவையில் திடசித்தம் கொண்டு, பெண்தெய்வங்கள்பால் பேரன்புகொண்டு 1904-ம் ஆண்டு, தமிழன் பூர்வ ஜென்மத்தில் செய்த, பூஜா புண்ய சிலாக்கிய சிரேஷ்ட விசேஷத்தால் நீங்கள் "பிரஜாநுகூலன்" என்ற அரும்பயிரை அவ்வாண்டு உற்பத்தி செய்தீர்கள். அது பொதுஜன அனுகூலத்திற்கு உடந்தையாய் நீதிகளைப் போதித்துக் கொண்டு, மாதரை மகிமைப்படுத்திக்கொண்டு—அநுபவ ஊற்றுக்களைக் கொண்டு, ஒரு தனிச்சுவையுடன் நன்கு ருசிக்கும் வகையில், ஒரே கொள்கையுடன், ஒரே உருவத்துடன் எத்தகைய மாறுதலுமின்றி, எத்தகைய அவசர சட்டங்களும் அதனை ஒன்றும் அசைக்க முடியாதவிதத்தில் பற்பல நீதி போதனைகளுடன் உயரிய உத்தமமான நோக்கத்துடன் அதன் அமைப்பைத் தழுவி வேறு ஒரு நூல் வராத விதமாக, வரமுடியாதவிதத்தில் அது தலைக் காட்டிய அன்று தொட்டு மிக்க கோலாகலத்துடன் "பிரஜாநுகூல"வின் வெள்ளி ஜூபிளியை நாங்கள் கொண்டாடும் இன்றுவரை "பிரஜாநுகூல"னுக்கு நிகர் "பிரஜாநுகூலனே" என எத்திசையிலும் வெற்றி முரசு கொட்டிய வீரரே!

உம் வெற்றிக்கு ஒரு முறையல்ல, இரு முறையல்ல, மும்முறை எங்கள் சந்தோஷத்தைத் தெரிவித்துக்கொண்டு "பிரஜாநுகூலன்" வெற்றிமேல் வெற்றி கொண்டு வீர வாழ்வுடன் சிறந்து பல்லாண்டு பல்லாண்டாக பல கோடி நன்மைகளை ஜனசமூகத்துக்கும் ஸமூகாபிவிர்த்திக்கும் உழைத்து உன்னத ஸ்தானத்திற்கு உயர்த்துமாறு ஸ்ரீமந் நாராயணனை வேண்டிக்கொண்டு

"தீ நெறிக கடும்பகை கடிந்தோய் நின்னடி
பிறர் கறமுயலும் பெரியோய் நின்னடி
தீ மொழிக் கடைத்த செவியோய் நின்னடி
வாய் மொழி சிறந்த நாவோய் நின்னடி
வணங்குதல் அல்லது வாழ்த்துதல் எம்

மாஸ்ரம வாசிகளின் நாவிற்கு அடங்காது"

எனினும், எங்கள் அன்பின் அடையாளமாக—ஆஸ்ரமத்தின் நினைவு உங்கள் மனதில் என்றும் நிலைத்திருக்க, குழலினும் யாழினுமினிய குரலினனை சந்திரப் பிரகாச சுந்தர வடிவழகனன இத்தங்க பாலகிருஷ்ணனையும், வெள்ளிப் பதக்கத்தையும், வெள்ளி சங்கிலியையும் இவ்வெள்ளி விழாவுக்கு உமக்குத் துணையாக எங்கள் மனப்பூர்வமான வந்தனத்துடன் அளிக்கின்றோம்.

பொங்கும் மங்களம் எங்கும் தங்குக!

ஸ்ரீ மூலகாந்த பாண்டுரங்க ஸ்வாமிகள்
-தலைவர் ஆநந்தாஸ்ரமம், சைதாப்பேட்டை,
21—2—32.

M. ஜேயராம ராஜு,
காரியதரிசி.




(580-ம் பக்கத் தொடர்ச்சி.)

## ஷேக்ஸ்பியரின் வாக்குகள்.

737. Mercy...is an attribute to God Himself; And earthly power doth show then likest God's When mercy seasons justice.

இரக்கம் கடவுளின் குணாதிசயங்களில் ஒன்றாகும். ஆதலால், நியாயமும் தர்மமும் ஈடுபட்டால், இவ்வுலக நியாயம் கடவுளின் நியாயத்தையொக்கும்.

738. God and our good cause fight upon our side.

கடவுளும், நம்முடைய நல்ல நோக்கங்களும், நம் பக்கமிருந்து சண்டை செய்யட்டும்.

739. Condemn the fault, not the actor of it.

பிழையைக் கண்டி, பிழை செய்தவரைக் கண்டிக்காதே.

740 The time of life is short; To spend that shortness basely were too long.

வாழ்வின் நாள் மிகக் கொஞ்சம். அதை துர்விஷயத்தில் பிரயோகிப்பது பொறுக்க முடியாததாகும்.

741. The arms are fair, When the intent of bearing them is just.

நீதியோடு ஆயுதங்களைப் பிரயோகித்தால் அவைகள் அழகுடையதாகும்.

742. Never shame to hear What you have nobly done.

நீ பெருந்தன்மையுடன் செய்த காரியத்தைக் கேட்பதில் ஒருக்காலும் வெட்கப்படாதே.

743. This the mind that makes the body rich; And as the sun breaks through the darkest clouds, So honour peereth in the meanest habit.

சூரிய கிரணங்கள் எவ்வாறு கடும் மேகங்களினிடை ஊடுருவிச் செல்கின்றனவோ அவ்வாறே பெருந்தன்மை மிகவும் இழிவான உடைகளணிந்திருந்தாலும் வெளிக்காட்டும்.

744. To fear the foe, since fear oppresseth strength, Gives in your weakness strength unto your follies fight against yourself.

பயம் பலத்தைப் போக்குவதால், விரோதிக்குப் பயப்படச் செய்கிறது. உன்னுடைய கோழைத்தனமே எதிரிக்குப் பலத்தை உண்டுபண்ணுகிறது. ஆகையால் உன்னுடைய குற்றங்களே உனக்கு விரோதமாகச் சண்டை செய்கின்றன.

745. High be our thoughts.

நம்முடைய எண்ணங்கள் பரந்த நோக்கமுடையதாக இருக்கட்டும்.

746. Mine honour let me try; In that I live and for that will I die.

என் உண்மைக்காக நான் முயற்சி செய்கிறேன். அதிலேதான் நான் ஜீவிப்பது. அதற்காகவே நான் இறப்பேன்.

747. Could ever hear in tale or history, The course of true love never did run smooth.

கதையிலேயோ சரித்திரத்திலேயோ உண்மைக் காதல் தடங்கலின்றி இருந்ததாகக் கேட்டிருக்கக் கூடுமா?

748. Mine honour is my life; both grow in one; Take honour from me, and my life is done.

என் யோக்கியதை என்னுடைய உயிராகும். இரண்டும் ஒன்றாக வளர்கிறது. அந்த யோக்கியதாதன்மையை எடுத்துவிடின், என் உயிர் நீங்கிவிடும்.

749. Nimble thought can jump both sea and land.

வேகமுள்ள எண்ணங்கள் கடல், நிலம் ஆகிய இரண்டையும் தாண்டிக் குதித்துவிடும்.

750. Time's glory is to calm contending kings, to unmask falsehood and bring truth to light.

காலத்தின் பெருமை சண்டையிடும் அரசர்களைச் சாந்தப்படுத்துவதோடு பொய்யை வெளிப்படுத்தி, உண்மையை ஒளிர்விட்டுத் திகழும்படி செய்வதே.

751. Be just and fear not. Let all the ends thou aim'st at be thy country's, the God's and truth's.

நீ நியாயமாக நட. எதற்கும் பயப்படாதே. உன் எண்ணத்தின் முடிவெல்லாம் உன்னுடைய தேசத்திற்கும், கடவுளுக்கும், உண்மைக்கும் பொருந்தியதாக இருக்கட்டும்.

752. He that filches from me my good name, Robs me of that which not enriches him, And makes me poor indeed.

எவன் என்னுடைய நற்பெயரைக் கொள்ளையிடுகிறானோ அவன் என்னை ஏழ்மையாக்குவதோடு, அவனுடைய வாழ்வு செழித்திடாதபடி இருக்கும் படியானதொன்றை என்னிடமிருந்தும் சூறையாடிச் செல்கிறான்.

753. Sweet mercy is nobility's true badge.

இரக்கம் என்பது பெருந்தகமையின் உண்மையான அடையாளம்.

754. See how God in all His creatures works!

கடவுள் வேலை செய்து வருவதை அவர் சிருட்டித்த ஜீவராசிகளின் மூலம் கவனி.

755. O, What may man within him hide, though angel on the outward side?

ஹா! வெளிக்குத் தேவதைகளைப் போலிருந்தாலும் மனிதன் உள்ளுக்

---

வீட்டிற்கு வந்தவர்களுக்கு விருந்திடுவது பெரிதல்ல. அவர்கள் புறப்பட்டுப் போமளவும் அவர்கள் நூறு வருஷத்திற்கும் நினைக்கும்படி அன்பாகப் பேசி ஆதரவுடன் நடந்து அவர்கள் தங்களின் சொந்த வீட்டில் இருப்பது போலவே எண்ணிக்கொள்ளும்படி செய்து உற்சாகப்படுத்துவதில் எல்லா சிலாக்கியமுமிருக்கிறது. அதைவிட்டு விருந்ினர் தம்மிடம் இருக்குமளவும் வெடுவெடுத்து, புறப்பட்டுப் போகும்போது அன்பு காட்டுவதிற் பயனில்லை.

குன் எவ்வளவு மறைத்து வைத்திருக்கலாம்?

756. Our doubts are traitors, and make us lose the good we oft might win, by fearing to attempt.

நம்முடைய சந்தேகங்கள் நம்மை வஞ்சிக்கும் துரோகிகளைப்போ லிருக்கின்றன. அச்சந்தேகங்கள் நாம் செய்யப்போகும் காரியங்களில் ஒரு பயத்தை உண்டுபண்ணி அநேகமாக வெற்றியடையக் கூடியதை இழந்து விடும்படி நம்மைச் செய்கிறது.

P. G. குலசேகரன்.



## புஸ்தகத் துரோகம்.



ஒருவர் மிக்க சிரத்தையுடன் தமது புஸ்தகசாலையைக் காண்பிப்பின் குளிர்ந்த உள்ளத்தோடும் அவ்வளவு புஸ்தகங்களையும் ஆவலுடன் பார்த்து சந்தோஷிக்கவேண்டும். தன்னிடம் இல்லாதது அவரிடம் என்னென்ன இருக்கிறதென்றும் வினோதமாய் ஆராய்ந்து சிந்தை மகிழலாம் தடவைக்கு ஒரு புஸ்தகம் பெற்றுவந்து அழுக்குப்படாமல் வாசித்துப் பத்திரமாய்த் திருப்பிக்கொடுத்துவிடுவதும் குற்றமாகாது. ஆனால், ஒரு புஸ்தகம் பெற்று வந்து, அதைத் திருப்பித்தாாமலே ஜாடையாக இருந்துகொள்வதும், பிறகு புஸ்தகம் தந்தவரே கேட்பின், இவ்வளவு புஸ்தகங்கள் வைத்திருக்கையில் இதை ஒரு கணக்காகக் கேட்கிறானே யென்று பழிப்பதும், "தான் எவ்வளவோ உதவி செய்திருக்கையில் இந்தப் புஸ்தகத்தைத் தனக்குக் கொடுத்து விடக்கூடாதா" என்று எண்ணுவதும் சரியான செய்கையாகாது. எவ்வளவோ உதவி செய்திருப்பினும் அதற்குப் பிரதி கைம்மாறு பெறும் விஷயம் வேறு; இரவல் பெற்று வந்த புஸ்தகத்தைத் திருப்பித் தந்துவிடுகிற விஷயம் வேறு என்று அறியவேண்டும். அவரிடமிருந்து இப்படி ஒன்றை மெதுவாக "அழுக்கி" வந்துவிடுவதில் அவரது புஸ்தகசாலையில் ஒரு அரிய புஸ்தகம் இருப்பில் இல்லாமல் குறைந்து கெட்டுப்போகிறதன்றோ? பணம் நாளைக்குக் கிடைக்கும். பழய புஸ்தகம் பவுன் பவுனாகக் கொட்டினாலும் கிடைக்காது. ஆதலின், புஸ்தகத் துரோகம் கனவிலும் கருதவேண்டாம். அது தர்மமாகாது. தங்கள் புஸ்தகத்திற்குக் கணக்கு பார்ப்பதுபோல் பிறர் புஸ்தகத்திற்கும் கணக்கு போட்டுப் பார்ப்பதே நியாயம். புஸ்தகமும் பணமும் ஒன்று என்ற நல்ல புத்தியும் உதயமாகவேண்டும்.

# கபட உள்ளம்.

கோணி:—என்மேல் தப்பு அபிப்பிராயம் கொள்ளும்படி அத்தனை கெடுதலாக நீ ஏன் அங்கு எழுதினாய்?

ஏணி:—என் மனதிற்பட்ட உண்மையை எழுதினேன். என் வாழ்வுக்குக் காரணம் எவரோ அவர் தூக்கிட்டுக்கொண்டாரென்று தந்தி வரவே நான் மிகக் கலங்கினேன். ஆனால், நான் க்ஷேமமாக இருப்பதை விரும்பாத உங்கட்கு அத்தந்தி அதிக மகிழ்வை விளைத்திருக்குமென்று நம்பினேன். நம்பியதை அப்படியே இராங்கூனுக்குத் தெரிவித்துவிட்டேன்.

கோணி:—நீ எக்கேடாவது கெட்டுப்போ. எங்களைப்பற்றி ஏன் அப்படி எழுதவேண்டும்?

ஏணி:--இவனுக்கும் இந்த வாழ்வா என்று நீங்கள் பொறாமைப்படுபவர்கள். ஆகவே, என் க்ஷேமத்தில் திருஷ்டியாயிருப்பவர் மரித்துவிட்டால் அப்போது என் பிழைப்பு கெட்டுப்போகக் கூடுமென்றும், நான் கெடுவதற்காகவாவது, எனக்கு உதவி செய்கிறவர் கெடவேண்டுமென்றும் எண்ணியிருக்கலாம். அதனால், அத்தப்புத் தந்தியால் திருவாளர்ஏணியார் அதிக சந்தோஷப்பட்டிருக்கலாம் என்று இராங்கூனுக்கு எழுதினேன். இதில் என்ன பிசகு? நீர் சந்தோஷப்படவில்லையா? சத்தியமாகச் சொல்லும். உமது மனக்கோணலை மறைத்துக்கொண்டு ஏன் சமர்த்து காட்டுகிறீர்?

ஃ

திருமிகு "கோணி" கோபத்துடன் கோணிக்கொண்டு மௌனமாய்ச் சென்றார். தன் நெஞ்சுக்குத் தெரியாத வஞ்சகமில்லையன்றோ? மற்றவர்கள் தன் வஞ்சக மனத்தை யுணர்ந்துகொண்டு தன் முன்பு அதைப் பச்சை பச்சையாய்ச் சொல்லும்போது, வஞ்சகநெஞ்சும் பொறாமைநெஞ்சும் அதை எதிர்க்க முடியாமல் நாணி தலையைத் தரையை நோக்கிச் சவிழ்க்கவே நேருகிறது.

ஃ

எவ்வளவோ அன்புடையார் போல் சிலர் தோன்றுகிறார்கள். இரவு பகலாக நம்மைச் சுற்றி நிற்கிறார்கள். நமது மனம் அவர்களின் அன்பில் மயங்கும் வேளையுண்டானாலும், இடையிடையே அவர்கள் தங்களை மறந்து தங்களின் சுபாவமான அன்பற்ற தன்மையைப் பச்சையாய்க் காட்டிவிடுவதால் அதையே நமது நெஞ்சு பலமாகப் பற்றிக்கொள்ளுகிறது. எப்படியாவது அன்பு காட்டித் தொலைக்கவேண்டுமே யென்று அவர்கள் வலிய அன்பை இழுத்துப் பிடித்து நம்முன்பே நிறுத்தித் தாங்களை அன்புடையோராக உணர்த்திக் கொள்ளப் பிரயாசைப் படுகிறார்களென்று தெரிந்துவிடுகிறது. இதை நாம் கிரகித்துக்கொண்டாலும் வெளிக்கு அதைச் சொல்லி அவர்களின் அன்பற்ற கபடநெஞ்சைக் குத்தித் தொலைக்கக்கூடவில்லை. அப்ப

---

நூலாசிரியர்களும் பத்திராசிரியர்களும் தங்கள் படிப்பின் திறமையால் எழுதுவதாயிருந்தாலும், அவர்கள் தங்களுக்குள்ள உத்ஸாகத்திலேயே தங்களின் சக்திக்கு மீறிய காரியத்தையும் சாதிக்கிறார்கள்; பெரியபெரிய நூல்களையும் எழுதி விடுகிறார்கள். உற்சாகமற்றுவிடினோ ஒரு வரிகூட அவர்களால் சரியாக எழுதமுடியாது.

டிச் செய்வதில் ஒரு பயனுமில்லை யென்று நாம் அறிவதில், அவர்கள் காட்டும் போலியன்பை உண்மை யன்புபோலவே நாம் நினைத்திருப்ப தாக அவர்கள் எண்ணிக்கொள்ளும் படி நடிக்கவேண்டியதாகிறது. அவ் விதம் நடித்து அவர்கள் உணர்த்தும் அன்பின் மூலமாக நமக்கு ஆகவேண் டிய காரியங்களை அவர்களைக்கொண்டு முடித்துக்கொள்ளும்படி முயல்பவர்க ளாகிறோம். நாம் ஒரு கபடனுடன் சேர்ந்ததால் நாமும் அவன் குணதோ ஷத்தில் பங்குகொண்டு நமது பரி சுத்த மனத்தை யிழந்து அவனைப் போலவே கபடவேடமாகி அவனது அன்பைச் சிறிதும் சந்தேகிக்காதவர் கள்போலவே நடந்துகொள்ளும்படி நேரிடுகிறது. இதை சகவாச தோஷத்தால் கெட்டுப்போவதற்கு ஒரு உதாரணமாகவும் கொள்ளலாம். நாம் நிஷ்களங்க மனத்தினராயிருந் தும், கபட நடிப்பைக் காட்டும்படி யாக வற்புறுத்தப்பட்டுப் போகிறோம். இவ்வித நிலையில் இந்தப் போலி யன் பினரைப்பற்றிப் பிறரிடம் பேச வேண்டிய சந்தர்ப்பம் ஏற்படும் போது, நமது நெஞ்சு அவர்களைப் பற்றி யறிந்துள்ளதை அப்படியே உண்மையாகவே பச்சைபச்சையாகக் கொட்டிவிடுகிறது. இவ்விதம் பிறர் முன் உண்மையைக் கொட்டிவிடுவ தற்கு—அதை மறைத்துச் சொல்ல வேண்டுமென்ற கபட புத்தி நமக்கு இல்லாததே காரணம். இவ்விதம் நாம் கூறியதைப் போலி யன்பினர் அறிய நேரும்போது எப்படி எங்க ளைப்பற்றி அவ்விதம் பேசலாமென்று கோபிக்கிறார்கள். இவ்விதமான ஸம் பவமே இங்கு எணிக்கும் கோணிக் கும் நேர்ந்துபோயிற்று.

ஃ

கபட உள்ளத்தினர் தாங்கள் காட்டும் கபடத்தை ஒரு சமர்த்தாக வும், அதைப் பிறர் அறியவில்லை யென்றும் மௌடீகமாய் நினைப்பது தான் பெரிய ஆச்சரியம்.

## முன்பு பழகின இடம்.

ஊரூராகத் திரியும் தேச ஸஞ்சாரிக்குக்கூடத் தான் முன்னொருதடவை வந்து தங்கிய இடத்திலேயே மறுபடியும் தங்குவதற்கு அவா. அவ்வூரில் வேறு இடம் இருந்தும் அது அவன் மனதிற்குப் பிடிப்பதில்லை. பழகிப்போன இடத்தையே மனம் விரும்பி அவா நிற்கின்றது. வழக்க மாய்த் தான் படுக்கும் வீட்டைவிட்டு வேறு வீட்டில் படுக்க மனம் ஒப்புகிறதில்லை. இவ்விதமே பழகிப்போன நண்பர்களை விட்டுவிட மனமின்றி அவர்களின் மத்தியி லிருக்கவே மனம் விரும்புகிறது. அங்குதான் உண்மையான உற்சாகம் நமக்கு ஏற்படுகிறது. நாம் வாடகைக்கு முன்பு இருந்த வீடுகளைப் பலமுறை பழயநினைவுகளோடும் ஆசை யாக நோக்கியதும் உண்டன்றோ?

# சென்ற மாதம்

## தபால் சிக்கனம்.

"காலத்திற்கேற்ற கோலம்" என்பதுபோல, இப்பொழுது கார்டு முக்காலணாவாகவும், கவர் ஒன்றேகாலணாவாகவும் உயர்ந்துவிட்டதால், அதற்குத் தகுந்தபடி அனைவரும் சிக்கனத்தைக் கைக்கொண்டு தபாற்செலவைக் குறைத்துக்கொள்வதுதான் சிலாக்கியம். எவ்விதம் குறைப்பதென்பது கேள்வி. நமது கஷ்டத்தை அவர்களுக்குத் தெரிவிப்பதில் என்ன பயன் என்று தோன்றும் விஷயங்களில் கடிதம் எழுதுவதை நிறுத்திவிட வேண்டும். உபசாரத்திற்கு வரையும் கடிதங்கட்கு எப்போதோ ஒருதரம் பதில் தந்தால் போதும். ஆத்திரத்துடன் கடிதம் எழுத நினைத்ததை முக்காலணா செலவாகிறதே என்று சில நாளைக்கு நிறுத்திவிட்டுப் பிறகு யோசித்தால் அக்கடிதம் எழுதுவது அவ்சியமில்லை யென்றே தோன்றிவிடும். ஒரு புஸ்தகத்துக்கு ஆர்டர் செய்கையில் அந்தப் புஸ்தகம் இருக்கிறதா என்று கேட்டும், விலை குறைத்துக் கேட்டும் எழுதும் கடிதங்களை நிறுத்தி அப்புஸ்தகத்தை அல்லது சாமான்களை—மருந்துகளை வீ.பி.யில் அனுப்பும்படி தெளிவாய் எழுதிவிட வேண்டும். எழுத்துகளைக் கிறுக்கி எழுதாதிருப்பதும் ஒரு சிக்கனமாகும். வீ. பி. யில் வருபவைகளுக்கு அந்த விவரத்திற்குக் கார்டு கடிதம் எதிர்பாராம லிருக்கவேண்டும். அந்த விவரம் வீ. பி. சாமானுக்குள் அதையனுப்புவோர் வைத்தனுப்புவதே சரியாகும். மாதிரி விரும்பிப் பல பத்திரிகைகளுக்கு எழுதுவதில் சில பத்திராதிபர்கள் ஸ்டாம்பு அனுப்பியவர்கட்குமட்டுமே யனுப்புகிறார்களாதலின், அனாவசியமாய் முக்காலணா கார்டு எழுதி வீணாவதை நிறுத்தி, ஸ்டாம்பு அனுப்ப முடியாவிடில் மௌனமாயிருந்து விடுவதே உத்தமமாகும். முக்கிய விஷயங்கட்கும், அவசர சங்கதிகட்குமட்டும் கடிதம் எழுதி அனாவசியமான சங்கதிகள் எதுவென்று தெரிந்துகொள்ளவும் பழகவேண்டும். அவரவர்களின் குணபாவனைகளைத் தெரிந்துகொண்டு இன்னின்னாருக்குக் கடிதங்கள் எழுதி வற்புறுத்துவதிற் பயனில்லையென்று அனுபவ வகையிற் கண்டு அந்த வகையிலும் தபாற் செலவுகளைக் குறைக்கவேண்டும். இங்ஙனம் பல வழிகளிலும் தபால் சிக்கனம் செய்து அந்தச் செலவுக்கு வீட்டுக்கு வேண்டிய காய்கறி சாமான்களை வாங்கிப் போடுவதற்கு நினைக்கவேண்டும். அன்பற்றவர்கட்கும், இருபக்கமும் தலையாட்டுகிற தந்திரிகட்கும், எழுதும் கடிதங்களைக் குறைப்பதற்கு இந்த அதிக தபாற் கட்டணமானது ஒரு விதத்தில் சகாயம் செய்யக்கூடும் போலும்! ஃ

---

உலக வாழ்க்கையில் இயற்கையாக ஏற்பட்டுள்ள கஷ்டங்களை வர்ணிக்கையில் ஆங்கிலக் கவி ஒருவர் "சட்டத்தின் தாமதங்களை"யும் சேர்த்து வர்ணித்தார். அவர் எழுதி இப்பொழுது முன்னூறு வருஷங்களாகி விட்டன. நீதிமுறையின் காலதாமதத்தைக் கவனிக்குமிடத்து, இதுபோன்ற ஒரு நிலைமையைக் குறிப்பிட்டே அக்கவி நீதியில் தாமதம் ஏற்படும் கஷ்டத்தைப் பிணி, பசி முதலான இயற்கைக் கஷ்டங்களுடன் சேர்த்தார் போலும்.

### பிரஜாநுகூலன் வெள்ளி ஜுபிலி :—

"சுதேசமித்திரன்" பத்திரிகைக்கு வெள்ளி ஜுபிலி நடந்ததற்குப் பிறகு கிரமமாக மஹா விகடதூதன், லோகோபகாரி, இந்து நேசன், யதார்த்தவசனி இப்பத்திரிகைகட்கு நடைபெறவேண்டும். எப்படியோ அவை தவறிவிட்டது வருத்தமே. இந்நான்கிற்கும் பிறகு உள்ள பத்திரிகையான ஸ்ரீரங்கத்தில் பிரசுரமாகிவரும் "பிரஜாநுகூலன்" பத்திரிகையின் வெள்ளிவிழா அப்பத்திரிகையின் பதிப்பகமான சைதாப்பேட்டை ஜெகநாதபாக்கில் பிப்பிரவரிமீ 21-ம் தேதி ஞாயிறன்று மாலையில் வெகு விமரிசையாக நடைபெற்றதற்கு மகிழ்கின்றோம். இயற்கையிலேயே அழகுபொருந்தி விளங்கும் ஜெகநாத பாக்தோட்டம் மிகு சோபிதமாக அலங்கரிக்கப்பெற்றிருந்தது. இவ்விழாவின் பொருட்டு விசேஷமாகக் கூடியிருந்தோரில் சைதாபேட்டை சேர்மன் இராய்பகதூர் ஸ்ரீமான். செல்வரங்காராஜுகாரு, ஸ்ரீமான். J. R. ரங்காராஜுகாரு, ஜெகன்மோகினி ஆசிரியர் ஸ்ரீமதி கோதைநாயகியம்மாள், ஸ்ரீமான் V. M. பார்த்தசாரதி ஐயங்கார், லோகோபகாரிப் பத்திராதிபர் ஸ்ரீமான் ப. சு. நெல்லையப்பபிள்ளை, சுதேசமித்திரன் ஆபீஸ் ஸ்ரீமான் M. A. நெல்லையப்ப முதலியார், ஆனந்த விகடன் பத்திராதிபர் ஸ்ரீமான் S. S. வாஸன், ஆசிரியர் ஸ்ரீமான் ரா. கிருஷ்ணமூர்த்தி, ஸ்ரீமான் மாந்தை சா. கிருஷ்ணய்யர், ஸ்ரீமான் P. G. குலசேகரம் முதலியவர்களைக் குறிப்பிடலாம். சைதாபேட்டை ஆநந்தாசிரமத்தின் காரியதரிசி ஸ்ரீமான் M. ஜெயராமராஜுவும், ஆசிரமத்தின் தலைவர் ஸ்ரீமான் J. பாண்டுரங்கரும் விஜயம் செய்திருந்த அனைவரையும் வரவேற்று சிற்றுண்டி சந்தன புஷ்ப தாம்பூலாதிகள் வழங்கினர். அதன்பின் ஸ்ரீமான் நாகை பாலகிருஷ்ணராஜு பி. ஏ. அக்கிராஸனம் வகித்தனர். ஜகன்மோகினி பத்திராதிபர் ஸ்ரீமதி வை. மு. கோதைநாயகி அம்மாள் கடவுள் வாழ்த்து பாடினர். அதன்பின் பிரஜாநுகூலன் பத்திராசிரியர் ஸ்ரீமான் எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடுக்கு ஆநந்தாசிரமத்தார் தமிழ்ச் செல்வர்களின் பெயரால் உபசாரப் பத்திரம் வாசித்துக்கொடுத்து தங்கமெடலும் வெள்ளி மெடலும் சங்கிலியும் பரிசளித்தனர். நேமுத்துப்பட்டி ஸ்ரீமான் C. V. N. நாராயணன் செட்டியார், ஸ்ரீமதி கோதைநாயகி அம்மாள், ஸ்ரீமான் மாந்தை சா. கிருஷ்ணய்யர், ஸ்ரீமான் ப. சு. நெல்லையப்ப பிள்ளை முதலியவர்கள் வெள்ளிப் பரிசுகள், நூற்பரிசுகள் அளித்தனர். வெளியூர்களிலிருந்தும் வந்திருந்த கடிதங்களும் தந்திகளும் வாசிக்கப் பெற்றன.

பின் பிரஜாநுகூலன் ஆசிரியர் கரகோஷத்தினிடை எழுந்து தமக்குக் கொடுக்கப்பட்ட உபசாரப் பத்திரத்திற்குப் பதிலளித்தார். 1904-ம் வருஷத்தில் பிரஜாநுகூலன் பத்திரிகையைத் தொடங்கியபொழுது தமக்குப் பதினேழு வயது என்றும், அக்காலத்தில் மிக்க பிரபலமாக விளங்கிய லோகோபகாரிப் பத்திரிகையைத் தான் முதலில் பெற்றதாயும் அப்பத்திரிகையினாலும், அதன் ஆசிரியராய் விளங்கிய ஸ்ரீமான் V. நடராஜ

---

*நிருப நேயர்கள் அனுப்பும் விஷயங்களைப் பத்திராசிரியர்கள் பலவற்றைக் களைந்து க்ஷவரம் செய்து விட்டே பிரசுரிக்கிறார்கள். சில நிருபர்களின் வியாசங்கள் மட்டும் எவ்வித திருத்த க்ஷவரமுமின்றி அப்படியே அச்சேறுவதற்குத் தகுதியுடையவைகளா யிருக்கின்றன.*

ஐயராலும் தாம் விசேஷித்த அபிவிர்த்தி அடைந்ததாயும், சுதேசமித்திரன் தமது சிறுவயது முதல் நித்திய பாராயணம் செய்யும் பத்திரிகையை விளங்கி வந்திருக்கிறதென்றும், பிரஜாநுகூலன் சிறு பத்திரிகையாயினும் "ஆநந்தகதா கல்பகம்" முதலிய பிரவித்த நூல்கள்யாவும் அப்பத்திரிகையிலேயே வெளிவந்து புத்தக உருவானவைகளென்றும், பிரஜாநுகூலன் பத்திரிகையின் நோக்கம் பெண் தெய்வங்களைப்போற்றுவதே யாமென்றும், பெண்மக்களின் அபிவிர்த்தி கருதியே பிரஜாநுகூலன் இதுவரை நடத்தப்பட்டு வந்திருக்கிறதென்றும், இனியும் தாம் பெண்மணிகளின் அபிவிர்த்திக்குத் தொண்டுபுரியவே ஜீவித்திருப்பதாயும், ஒரு தேசத்தின் அபிவிர்த்தி பெண்களைப் பொறுத்திருக்கிறதென்றும், பெண்களின் அபிவிர்த்தி அவர்களுடைய கல்வியையும் ஞானத்தையும் பொறுத்திருக்கிறதென்றும், அரைப்படிப்பு அனர்த்தமென்றும், அல்லியரசானிமாலை படித்த அம்பாள் அரைவித்துவானாக மதிக்கப்படுகிருள் என்றும், பெண்மணிகளின் வாழ்வில் அன்னோர் ஏற்றுக்கொள்ளவேண்டிய கடமைகளின் பெரிய பொறுப்பை யோசிக்கையில் சிறுவர்களைவிட சிறுமியர்க்கே பூர்ணமான கல்வி கற்பித்து அறிவின் குழந்தைகளாக்க வேண்டுமென்றும், தாய்மார் படித்தவர்களாக இருந்தால் அவர்களிடம் தோன்றும் மக்களும் அறிவும் கல்வியும் நிரம்பியவர்களாவார்களென்றும், தாம் மாதாவின் கர்ப்பத்தில் இருந்தபோது தமது மாதா நாலாயிரப் பிரபந்தங்களைப் பத்துமாதமும் ஓயாது மனப்பாடம் செய்து வந்தாரென்றும், அதன் காரணமாகவே சிறு கல்வியும் சிறு அறிவும்கொண்ட தான் பிரஜாநுகூலன் பத்திரிகையையும், வேறு பத்திரிகைகளையும் பல நூல்களையும் இயற்றத்தகுந்த அறிவின் ஊற்றைப் பெற்றிருக்கலாமென்றும், ஸ்திரீ வித்தியாப்பியாஸத்தால் தான் ஒரு தேசம் முன்னுக்கு வரவேண்டுமென்றும் விஸ்தாரமாகப் பிரசங்கம் செய்தார்.

ஸ்ரீமதி கோதைநாயகி அம்மாள் தாம் முதன் முதலாக இந்தப் பிரஜாநுகூலனின் வெள்ளி ஜூபிலியையே காண்பதாகவும், அனுபவத்தில் குட்டுப்பட்டவர்களுக்கே அனுபவம் தெரியுமென்றும், பிரஜாநுகூலன் ஆசிரியரைப் பின்பற்றியே தாமும் அநுபவக்குறிப்புகள் எழுத முயன்றதாயும், பத்திரிகை நடத்துவதிலுள்ள சிரமத்தையும் நிர்வாகத்தின் பாடுகளையும் அறிந்தோர் சிலரேயாவரென்றும், ஆசிரியர் நீடிய ஆயுளும் புகழும் பெறவேண்டுமென்றும் பேசினர்.

லோகோபகாரி ஆசிரியர் ஸ்ரீமான் ப. சு. நெல்லையப்பபிள்ளை எழுந்து ஆசிரியர் ராமாநுஜலு நாயுடுவை 20-ஆண்டுகளாகத் தமக்குத் தெரியுமென்றும், இனிய தமிழ்நடை கொண்டவரென்றும் பத்திரிகை நடத்துவதிலுள்ள அருமையையும் கஷ்டத்தையும் பத்திராசிரியர்களே அறிவார்களென்றும், இந்த வெள்ளி விழாவைத் தாம் பாராட்டுவதாயும், ஆசிரியரும் அவர் பத்திரிகையும் தங்க ஜூபிலியும் காண்பதாகுக என்றும், தான் ஆசிரியருக்குப் பிரியமான நாலாயிரப் பிரபந்தத்தை அவருக்கு சன்மானிப்பதாகவும் பேசினர்.

---

கசாப்புக் கடையிலிருந்து மாமிசத்தைக் கொண்டு வரும்போது பார்த்தால் மாமிசபட்சணிக்கும் அருவருப்பையே உண்டாக்கும். சிலர் வாந்தி எடுப்பது முண்டு. காய்கறி பதார்த்தங்களைக் காணும் பொழுதோ மனோரம்மியமுண்டாகும்.

ஸ்ரீமான் ரா. கிருஷ்ணமூர்த்தி எழுந்து, எவர் எதை எழுதிக்கொடுத்தாலும் அதை நல்லதென்று ஊக்கம் கொடுத்து சந்தோஷப்படுத்துவதே ஆசிரியர் இராமாநுஜலு நாயுடுவின் ஸ்வபாவமென்று நகைச்சுவையுடன் கூறினர். ஸ்ரீமான் ஜெ. ஆர். ரங்கராஜூ பேசுகையில் ஆசிரியர் நாயுடுவை 1907-ம் ஆண்டிலிருந்து தமக்குத் தெரியுமென்றும், மிகச் சிறு பிராயத்தினராயிருந்த அவரா பிரஜாநுகூலன் ஆசிரியர் என்று தாம் சந்தேகித்து ஆச்சரியப்பட்டதாகவும், பிரஜாநுகூலன் பெண்மணிகள் வாசிப்பதற்கேற்ற வகையில் எழுதப்படுவதாயும், தமிழில் இருக்கும் சுவையை அறியா இருள் மனத்தினர்களே தமிழை அவமதிப்பரென்றும், பிரஜாநுகூலன் ஆசிரியரது ஆத்மா தம் அன்பர்களிடத்திலும் நண்பர்களிடத்திலும் மிக்க அன்புகொண்டதென்றும், அவர் தாயின் கர்ப்பத்திலிருக்கையிலேயே அனுபவம் கொண்டாரென்றும், எப்பேர்ப்பட்ட ஆசிரியராக இருந்தாலும் அவர்கள் உன்னத ஸ்திதியில் இருப்பதில்லையென்றும், அவர்கள் இறந்தபிறகே அவர்களுக்கு மதிப்பு என்றும், இதற்கு உதாரணமாக ஸ்ரீமான் ஸி. சுப்பிரமண்ய பாரதியைச் சொல்லலாமென்றும், லோகோபகாரார்த்தமாகவே தாம் கிருஷிகளை நடத்தியதாகவும், தமிழ்ப் பத்திரிகைகளுக்கு இப்பொழுது கொஞ்சம் மதிப்பு ஏற்பட்டிருக்கிறதென்றும் விரிவாகப் பேசினர். ஸ்ரீமான் இராய்பகதூர் செல்வரங்கராஜூகாரு பேசுகையில் பத்திரிகையின் ஆசிரியத்வ சிரமத்தைத் தாம் நன்கறிந்திருப்பதாயும், பிரஜாநுகூலன் பத்திராசிரியருக்கு இரவில் தூக்கமே கிடையாதென்றும், அதனுலேயே அவர் அடிக்கடி நோய்வாய்ப் படுவதாயும், அபாரமான வேலை செய்பவரென்றும், லாபம் வரட்டும், வரவில்லையென்று நினையாது தமது கடமையையே முக்கியமாக நடத்துகிறவரென்றும், நம் நாடு பத்திரிகைகட்கு அவ்வளவு மதிப்பு கொடுக்கவில்லையென்றும் கூறினர். ஆனந்த விகடன் பத்திராதிபர் ஸ்ரீமான் S. வாஸன் ஸ்ரீமான் இராமாநுஜம்கொடுத்த ஊக்கமே தமது தைரியத்திற்கு முக்கிய காரணமென்று கூறினர். மாந்தை ஸ்ரீமான் S. கிருஷ்ணய்யரும் புகழ்ந்து கூறினர். ஸ்ரீமான் M. A. நெல்லைப்ப முதலியார் பேசுகையில் ஆசிரியர் ராமாநுஜம் தெய்வபக்தியுடன் கூடியவரென்றும், விசேஷித்த அனுபவம் வாய்ந்தவரென்றும், பிரஜாநுகூலன் பத்திரிகையின் மானேஜராகத் தாம் சிலகாலம் இருந்ததாகவும் இந்த இடத்தில் வெள்ளி ஜூபிலி கொண்டாடப்பட்டதுபோன்று இனி தங்க ஜூபிலியும் நடைபெறவேண்டுமென்றும் கடவுளைப் பிரார்த்திப்பதாகவும் கூறினர். இங்ஙனமாக பிரஜாநுகூலன் வெள்ளி ஜூபிலி விழா மிக்க விமரிசையாக நடைபெற்றுநிறைவேறியது.

---

கடை வீதியில் தென்பட்டவைகளையெல்லாம் வாங்கிக் கொடுப்பவர்களிருந்தால் பெற்றுக்கொள்வோர் எவ்வளவுவாங்கித்தரினும் வேண்டாமென்று சொல்லாமலே கையேந்துவார்களாம். கிடைத்த வரையில் லாபமாம்! பிறர் ஏமாந்தவரையில் கொள்ளையாம்!!

---

தான் உயர்ந்த பதவியுடனே நாற்காலியிலிருக்கையில் தன்னை அண்டி வந்து ஏதாவது வேலை தருமாறு கேட்ட உத்தமனைத் தனது அகங்கார புத்தியுடன் ஒதுக்கித் தள்ளியவன், பிறகு தனக்கே அந்த உயர்ந்த நாற்காலியில்லாமல் அவ்விடத்தினின்றும் விலக்கப்பட்டு வேறு வேலைக்கு அலைய நேர்கிறது.

# விபசாரத்தின் பயங்கரம்.

(621-ம் பக்கத் தொடர்ச்சி.)

## III



விபசார நோய்களில் மூன்றாவது உபபஞ்சம், அல்லது கிரந்திப்புண்ணாகும். இது எல்லாவற்றிலும் மஹா பயங்கரமானது. ஸ்திரீகளது பெண்ணுறுப்புகளின் மேல்பாகத்திலாவது, சூழ இருக்கும் மற்ற இடத்திலாவது, புருஷர்களுக்கு லிங்க நுனியின்மீதிலாவது, அதன் மேல்தோலின்மீதிலாவது விஷநீர்பட்டுக் கட்டிகளாவது புண்ணாவது கிளம்புவதினால் இவ் வியாதி உண்டாகும். இது துருவடிப் புண்ணென்றும், கிரந்திப் புண்ணென்றும் இருவகைப்படும். இவற்றை வேறுவேறாக விவரிப்போம்.

ஃ

அன்னிய மாதர்களை நாடி, இவ்வளவு அழகுள்ள ரூபவதிக்கும் ரோகம் இருக்குமாவென்று மயங்கிச் சேர்வாருக்கும், பின்னும் கேடுகெட்ட காமிகளான தூர்த்த ஸ்திரீகளுடன் கலப்பாருக்கும், அந்தப் பாழுங்கலவி முடிந்த மறுதினத்திலாவது, அல்லது எதுமே வெளிக்கு வராதிருந்து, ஓ! நமக்கு ஒரு வியாதியும் வரவேயில்லை—தப்பித்துக் கொண்டோமென்று துள்ளிக் குதித்துக் கர்விக்கிற 10-15-தினங்களுக்குள்ளேயாவது புருஷ லிங்கத்தின்மீது இரண்டு மூன்று துருவடிப் புண்கள் புறப்பட்டு, அவை அகன்றனவாகவும் வில்லைகள் போன்றும் வெகு சீக்கிரமாய் வளர்ந்து, அய்யய்யோ! உள்ளுக்குள்ளே தொளைகள் தொளைகளாய் ஏற்பட்டுக்கொண்டு சீழுடன் நிறைவுறும். ஆ! எழுதவும் பயங்கரமாயிருக்கிறதே! பிறகு, இப் புண்கள் லிங்கமுழுதும் பரவிச் சருமத்தைத் தின்றுக்கொண்டுவந்து கடைசியில் ஆ! ஆ! ஆ! புருஷ லிங்கத்தையே விழுங்கிவிடும். ஐயோ! அதோடு ஆண் உறுப்பு தொலைந்து போய்விடும்! இனி இந்த ஜன்மத்தில் பிறகு பெறுவதோ ஒருபோதும் கிடையாது! அது மட்டுமா? இவ் விரணங்களின் சீழ் எங்கு பட்டாலும் சரியே, அங்கெல்லாம் புண்கள் புறப்பட்டுவிடும். ஓர் பொழுது சீழ்பட்டு உடல் முழுதும் புண்களுடன் வெடிக்கும். துருவடிப் புண்கள் புறப்பட்ட 10-20-தினங்களுக்கெல்லாம், அரைப் பூட்டுகளிலுள்ள நாடிகளுக்குக்கூட விஷநீர் ஓடிச்சென்று பாவி வீக்கம் காணும். பிறகு அரையாப்புக்கட்டிகள் கிளம்பும். இந்தத்தருணத்தில் தகுந்த சிகிச்சைகள் செய்து கொள்ளாவிடின், சரீரமுழுதும் புண்களுடனும் ரணங்களுடனும் உடல் அழுகி அலங்கோல மாணமும் சம்பவிக்கும்.

ஃ

---

சிலரை விவாகத்திற்கு அழைத்த பிறகு அவர்களை நாலு பேர்களுக்கு மத்தியில் அவமதிக்கின்றனர். அவர்கள் நெஞ்சு புண்ணாவதில் அந்த விவாக பலனும் புண்ணாகவே முடிகிறது.

கிரந்திப்புண் வந்து சேர்ந்த பொழுது ஒரு நிமிஷமாயினும் தடைப்படாமல் நல்ல வைத்தியனைக் கொண்டு குணப்படுத்திக்கொள்ள வேண்டியது. வளரவிடாமல் நிறுத்துவதே இவ்விரணங்களுக்கும் முன்னர் செய்யவேண்டிய அவசர சிகிச்சையாதலால், வேலம்பட்டையாவது, அரசம்பட்டையாவது போட்டுக் காய்ச்சிய நீருடன் புண்களைச் செவ்வையாகக் கழுவி அவற்றிற்குள்ளே நாலு பக்கத்திலும் அடிப்பாகத்திலும் "வில்வர் நைட்ரேட்" என்னும் மருந்துக்கட்டியுடன் தொடவேண்டியது. இல்லாவிடின் "கந்தகாமிலம்" (ஸல்பியூரிக் ஆசிட்) ஆவது, "தர்க்கியாமிலம்" (நைட்ரிக் ஆஸிட்) ஆவது கொணர்ந்து, மெல்லிய நுனியுள்ள குச்சியுடன் மேர்கூறிய வண்ணம் தொடவேண்டியது. இப்படித் தொடுவதினுல் புண்களின் நாற்பக்க முள்ள சருமமும், கீழிருக்கும் சருமமும் கருகி நீங்குவதற்குத் தொடங்கும். இவ்வண்ணம், மருந்தினுல் தொட்ட பின்னர், புண்களின் மீது "லிண்ட்" என்னும் துணிக்கிழிவைப் போர்த்துச் சுற்றிக் கட்டவேண்டும். தினத்திற்கு இரண்டு முறை விழுக்காடு இவ்வாறு இரண்டு தினங்கள் செய்யவேண்டும். பிறகு வேலம்பட்டை நீருடன் மாத்திரம் கழுவிக் கொண்டு வரும் பக்ஷத்தில் சீக்கிர காலத்திலேயே இரணங்கள் ஆறிப் போய் விடலாம். இது அவரவர் நோயின் கடின—சாதாரண—தன்மையைப் பொறுத்தது. அரைப்பூட்டில் அரையாப்புக்கட்டி தோன்றிய போது, அவற்றிற்கு உடனே மாக் கட்டுகள் கட்டி ஒத்திடங்கள் போட வேண்டும். அப்படிச்செய்ய அவை யொருவேளை கரைந்து போகலாம். அகப்பட்டுக் கொண்ட பிணியாளியைக் கண்டபடி திட்டிக் கேவலப் படுத்துவது மடமையாகும். அந்த சமயம் இரக்கமே கொள்ளவேண்டும். அரையாப்புக்கட்டிகள் மேர்கூறிய சிகிச்சைக்குக் கரையாவிடினும் மெதுவாகலாம். மிருதுவுபட்ட பிற்பாடு உடனே அவற்றைக் கத்தி கொண்டு திறந்து குணப்படுத்திக் கொள்ளவேண்டும். இப்படி அக்கட்டிகளைக் கத்திகொண்டு திறப்பித்துக் கொள்ளாமல் அவை தமக்குத்தாமே உடையும் வரைக்கும் சும்மாயிருந்தால் பெரும் புண்ணுகி அதிகமான உபாதியை உண்டாக்கும். இவ்விதம் பிணிக்கு அகப்பட்டுக் கொண்ட காலத்தில் விபசாரத்தின் பயங்கரத்தைச் சிந்திப்பதிலும், நூல்வழியாக அறிந்து எதிலும் பட்டுக்கொள்ளாமலே சன்மார்க்கத்தில் நின்று சிந்தித்து அறிதலே பெரிய ஸமத்காரச் செயலாகும். (தொடரும்.)

---

தன் சம்பாதனைதனது பத்துநாட் செலவுக்குக்கூடக் காணுமல் கஷ்டப் படுவோன் தன் ஆடம்பரச் செலவுகளை மட்டும் அடக்கக் கூடாதாம்! சிலர் அடக்க முயன்றாலும் வீட்டுப் பெண்கள் ஒப்புவதில்லை. அவர்களே வேற்றூருக்குச் சென்று பணமனுப்புவதைச் சிறிய தாக்கிவிடில் எல்லாம் சரிபட்டு விடலாம். ஆனுல்தான் வீட்டிலிருந்து கொண்டு சரிப்படுத்த சாத்தியப்படாதாம்.



வீட்டுக்காரனின் தயவைவிட வீட்டு மனுஷியின் கடாக்ஷமே முக்கியமாம். அந்த அம்மையாரின் அனுக்கிரகம் இருந்தால் ஊரிலிருந்து வந்த பிரயாணிக்கு அந்தந்த வேளைக்கும் பசி தோன்றுமல் வயிறு நிறையக் கிடைக்குமாம். வீட்டுலக்ஷ்மியின் அருள் இல்லையாகில் தன் வீடுதேடி வந்தவரை வீட்டுக்கார ஐயா ஹோட்டலுக்குத்தான் அனுப்ப நேருமாம்!

# ஒடீஸியஸின் யாத்திரை



பண்டைக் காலத்தில் ஒடீஸியஸ் என்னும் ஓர் கிரேக்க மகிபனிருந்தான். அவன் மிகவும் தைரியசாலி. தந்திர முள்ளவன். அவனுடைய வரலாற்றையும் வீரச்செயல்களையும்பற்றி ஹோமர் என்னும் கவி ஒரு புராணம் எழுதியிருக்கிறார். ஹோமர் என்பவர் ஓர் கண் தெரியாத கவி. அவர் கிரீஸ் தேசத்தில் மூவாயிரம் வருடத்திற்கு முன் இருந்தார். அவர் எழுதியுள்ள பாடலைப் புகழாதவர்கள் கிடையாது.

ஃ

ஒரு சமயத்தில் ஒடீஸியஸ் யாத்திரை செய்து கொண்டுவரும்போது ஸைக்ளாப்ஸ் என்ற பூத ஜாதியார்கள் வசிக்கும் நாட்டிற்கு வந்தான். இந்த ஸைக்ளாப்ஸ் வசித்த நாடு ஒரு தீவு. ஸைக்ளாப்ஸ் ஜாதியார்கள் பெரிய விருக்ஷங்களைப்போல் உயரமுள்ளவர்கள். அவர்களுக்கு நெற்றியின் மத்தியில் ஒரே கண்தானுண்டு. அவர்கள் வெள்ளாடுகளையும் செம்மறியாடுகளையும் தங்களுடைய ஆகாரத்தி னிமித்தம் வளர்த்து வந்தார்கள். அவர்கள் மாமிஸந்தான் புசிப்பதுவழக்கம். மனிதர்களையும் கொன்று தின்பார்கள். இவர்கள் குகைகளில் வசித்து வந்தார்கள்.

ஃ

ஒடீஸியஸ் தன்னுடைய கப்பலில் இத்தேசத்திற்கு ஒரு நள்ளிருளில் வந்திறங்கினன். சூரியோதயம் வரையில் கடற்கரையில் துயின்றார்கள். மறுநாள் காலையில் ஒடீஸியஸ்ஸும் ஈராறு மாலுமிகளும் ஒரு தோல்பை நிறைய சாராயமும் மற்றொரு பையில் ஆகாரமும் எடுத்துக்கொண்டு உள்நாட்டில் சென்று ஒரு ஸைக்ளாப்ஸ் வசிக்கும் குகையில் நுழைந்தனர்.

ஃ

அந்த குகையில் வசித்தபோலி பீமஸான பூதமனிதன் ஆடுகளை மேய்ப்பதற்காக வெளியே சென்றிருந்தான். அந்தக் குகையில் பால் சட்டிகளையும், பாலேட்டுக்களையும், ஏராளமான ஆட்டுக்குட்டிகளையும் ஒடீஸியஸும் அவனுடைய மாலுமிகளும் கண்டனர். ஒடீஸியஸ்ஸை ஆட்டுக்குட்டிகளை ஓட்டிக்கொண்டு கப்பலுக்குச் செல்வோம் என்று கெஞ்சினர்கள். ஆனல், ஒடீஸியஸ் பூதமனிதனைப் பார்த்தபிறகே செல்ல வேண்டுமென்று கட்டளையிட்டதின் பேரில் அவர்கள் குகையில் தங்கினர்கள்.

ஃ

அஸ்தமான சமயத்தில் போலி பீமஸானவன் குகைக்குள் ஆட்டையெல்லாம் துரத்தித் தான் முதுகில் சுமந்து வந்த விறகுக்கட்டைகளைத் திடீரெனப்போட்டான். அந்த ஓசையானது இம்மாலுமிகளை நடுங்க வைத்தது. அவர்கள் குகையினுள்மறைந்து கொண்டார்கள். அவர்கள் ஒரு கண் படைத்த அந்த விகாரமான பூதத்தைப் பார்த்து ஆச்சர்ய மடைந்தார்கள். போலி பீமஸானவன் ஆடுகளை உள்ளடைத்துக் குகையின் கதவை ஓர்

---

தன் நண்பனை நேரில் காணச் சென்றவன் அவனது சுய நல குண வேறுபாட்டைக்கண்டு நொந்து வந்தபிறகு கடிதம் எழுதுவதேயில்லை. அவ்வளவில் விலகி விடுகிறான்.

கல்லால் மூடினான். பிறகு அவன் ஆடுகளைப் பால்கறந்தான். பிறகு தீமூட்டினான். தீவெளிச்சத்தில் உள்ளிருக்கும் புது மனிதர்களைக் கண்டு தனக்கு நல்ல பக்ஷணம் ஆவார்கள் என்று பூரிப்புக்கொண்டான். அவர்களை யாரென வினவுதலும் ஒடீஸியஸ் புயல் காற்றால் அந்த தேசத்திற்கு வந்த வரலாற்றையும், அக்குகைக்கு வந்த காரணத்தையும் கூறினான்.

ஃ

போலி பீமஸானவன் ஒரு பதிலும் பேசாமல் இருவரின் மேல் பாய்ந்து அவர்களைக் கொன்று தின்றான். ஒடீஸியஸ்ஸும் அவனுடைய மனிதர்களும் மிகவும் பயந்தார்கள். அழுதார்கள். கடவுளை ஸ்தோத்திரம் செய்தார்கள். ஆனால் அவர்கள் குகையினின்றும் தப்புதலுக்கு வழி ஒன்றும் காணவில்லை. ஒடீஸியஸ் அம்மனிதனைக் கொல்ல எண்ணினான். அப்போது அவனுக்குக் கொல்வதற்குத் தைரியம் கொடுக்கவில்லை. அவனைக் கொன்று விட்டால் குகையின் கல்லைத் தங்களால் தள்ள முடியாதென்றும், அந்த பூதமனிதன் ஒருவனே திறக்க முடியும் என்றும், தாங்கள் குகையிலேயே யிருந்து துஞ்ச நேரிடுமென்றும் எண்ணங்கள் அவனைத் தடுத்தன. ஆதலால் அவன் தந்திரத்தினால் தப்பித்துப்போகும் வழியை எண்ணலானான்.

## II

இரவு முழுவதும் குகையிலுள்ள கிரேக்கர்கள் பயத்துடன் கடவுளைத் துதித்துக்கொண்டு விழித்திருந்தனர். எப்பொழுது சூரிய கிரணங்கள் குகையில் தாண்டவமாடுமோவென்று ஆவலுடன் எதிர்பார்த்திருந்தார்கள். சூரியோதய மானதும் போலி பீமஸானவன் துயிலெழுந்து, தீமூட்டி, ஆடுகளைக் கறந்து, இரண்டு மானுமிகளைப் பிடித்துக்கொன்று தின்றான்.

ஃ

காலை ஆகாரம் அருந்திய பிறகு, குகையின் கதவைத்திறந்தான். வாசற்படியிலுட்கார்ந்து ஆடுகளை மேய்ப்பதற்கு வெளியேறினான். பிறகு குகையின் கல்லை நன்றாக மூடி ஆடுகளை மலையடிவாரத்திற்கு மேய்ப்பதற்கு ஓட்டிச் சென்றனன்.

ஃ

போலி பீமஸ் வெளியே சென்றிருந்தபோது ஒடீஸியஸ் தப்பிச் செல்வதற்கு ஒரு மார்க்கத்தைக்கண்டு பிடித்தான். அக்குகையில் கிடந்த ஒரு மரக் கட்டையிலிருந்து ஒரு கழியை வெட்டி எடுத்தான். அந்தக் கழியை மிகவும் கூர்மையாகத் தீட்டினான். அந்தக் கூறை நெருப்பில் காய்ச்சி பிறகு அதை மறைத்து வைத்தான். ஃ

சாயங்கால மானதும் போலி பீமஸ் குகைக்கு வந்தான். தீமூட்டி ஆடுகளைப் பால் கறந்து இரண்டு மானுமிகளைப் பிடித்துத் தின்றான். ஒடீஸியஸ் போலி பீமஸ்ஸிற்கு தான் கொண்டுவந்து கொடுத்த சாராயத்தைக் குடித்தனன். அது ருசியாகயிருக்கவே அளவுக்கு மிஞ்சி அருந்தினான். ஃ

---

சிலர் ஓரிடத்திற்கு வெகு அன்புடன் போகிறார்கள். விருந்துண்ணுகிறார்கள். பிறகு மறுபடியும் அவ்விடத்திற்குப் போவதற்கேயில்லாமல் பலத்த விரோதங்களும் பகைகளும் முற்றி விடுகின்றன. அங்கு சென்ற வேளை என்ன வேளையோ தெரியவில்லை.

போலி பீமஸ் :—"உன் பெய பெயரென்ன ?"

ஓடீஸியஸ் :—"என் பெயர் ஒன்றுமில்லை என்பது."

போலி பீமஸ் :—"நான் உன்னைக் கடைசியில் கொல்லுகிறேன். அது தான் உனக்கு நான் கொடுக்கும் வெகுமதி."

ஃ

போலி பீமஸ் குடி மயக்கத்தால் குறட்டைவிட்டுக் கும்பகர்ணன் போல் தூங்கினன். ஓடீஸியஸ் குச்சியை நெருப்பில் காய்ச்சி அவனுடைய ஒற்றைக் கண்ணை குத்தினன். போலி பீமஸ் விழித்துக்கொண்டான். சிம்ம கர்ஜனை செய்தான். அக்குச்சியைப் பிடுங்கி எறிந்தான். ஆனல் கண் குருடாய் விட்டது. குகையில் ஒடீஸியஸ்ஸை பிடிப்பதற்கு அங்குமிங்கு மோடினன். அவர்கள் இவனிடம் அகப்படவில்லை. அந்த பூதமனிதன் போட்ட கூச்சலால் வெளியில் வேறு குகையில்வசிக்கும் பூதங்கள் குகைக்கு வெளியே கூடினர்கள்.

பூதங்கள் :—"ஏன் கூச்சல் போடுகிரய்"

ஃ

போலி பீமஸ் :—"என்னை ஒன்று மில்லை என்பவன் கொல்லுகிறன். என்னை ஒருவரும் கொல்லவில்லை"

பூதங்கள் :—"ஒருவரும் கொல்லாவிட்டால் ஏன் இம்மாதிரி கூச்சலிடுகிரய்"

போலி பீமஸ் :—"என்னை ஒருவரும் கொல்லவில்லை" என்றுத் திருப்பி அதையே பிதற்றினன்.

ஃ

மற்ற பூதங்கள் போலி பீமஸ்ஸிற்குப் பைத்தியம் பிடித்து விட்டதென்றெண்ணி தங்களுடைய குகைக்குச் சென்று விட்டார்கள். ஒடீஸியஸ் தான் செய்த தந்திரத்தை எண்ணி நகைத்தான். ஆனல் அவர்களுக்கு ஏற்பட்ட ஆபத்து நீங்கவில்லை. மறுநாள் காலை போலி பீமஸ் குகையின் கதவைத் திறந்து வாசற்படியில் தங்கி ஆடுகளை வெளியேற்றினன். ஆடுகள் செல்லும்போது மனிதர்கள் தப்பிப் போகாதபடி பரிசோதித்துக்கொண்டு அனுப்பினன்.

## III

ஒடீஸியஸ் போலி பீமஸ்ஸைவிட தந்திரசாலி. அக்குகையிலிருந்த கயிறுகளை எடுத்து மூன்று மூன்று ஆடுகளைச்சேர்த்துகட்டினன். நடுமத்தியில் ஆட்டின்கீழ் ஒரு மாலுமியைக் கட்டினன். இம்மாதிரி மீதியிருந்த ஆறு மாலுமிகளையும் பதினெட்டு ஆடுகளின் மத்தியில் கட்டி விட்டனன். ஒடீஸியஸ் ஒரு பெரிய ஆட்டின் ரோமத்தை பிடித்துக்கொண்டு ஜாக்கிரதையாகப் படுத்தனன்.

ஃ

சூரியோதயமானதும் போலி பீமஸ் குகையின் கதவைத் திறந்து வாசற்படியில் உட்கார்ந்து ஆடுகள் வெளியே செல்லும்போது அவைகளின் முதுகைத் தடவி பார்த்து

---

தன் கையின் கீழ் உள்ள மானேஜர் ஒப்புக்கொண்டால் உங்களுக்கு வேலை தருகிறேன் என்று அவ்வளவு உயர்வாகச் சொல்லிய அந்த மானேஜரையே பிறகு ஒரு காலம் அந்தத் தொழிற்சாலை அதிகாரியானவர் கண்டித்து விலக்கி மனம் வெறுக்கவும் நேர்ந்துவிடுகிறது.

அனுப்பினான். ஆனாலவன் மாலுமிகளை வயிற்றின் பாகத்தில் கட்டியிருப்பான் என்று ஒடீஸியஸின் மேல் சிறிதும் சந்தேகங் கொள்ளவில்லை. ஒடீஸியஸ்ஸும் அவனுடைய ஜனங்களும் ஆடுகளோடு வெளியேறி விட்டார்கள். வெளியேறியதும் ஒடீஸியஸ் ஒவ்வொரு மாலுமியையும் அவிழ்த்து விட்டனன். அவர்கள் வேகமாக ஆடுகளைக் கப்பலிற்கு ஓட்டிச்சென்று கப்பலில் ஏற்றினார்கள். பிறகு கப்பலை வேகமாக சமுத்திரத்தில் செலுத்தினார்கள். கப்பல் கிளம்புவதற்கு முன் போலி பீமஸ்ஸினிடம் கடவுள் சரியான சிக்ஷை அவனுக்கு செய்து விட்டதாக ஒடீஸியஸ் கத்தினான். இவ்வார்த்தைகளைக் கேட்டதும் அவ்வரக்கன் கோபங்கொண்டு ஒரு மலையைப் பிடுங்கி சப்தம் வந்த திக்கில் எறிந்தான். அம்மலை கப்பலின் முன் விழவே கப்பலானது கரைக்கு வந்து விட்டது. மறுபடியும் அவர்கள் அதிக சிரமப்பட்டு கப்பலைக் கடலில் செலுத்தினார்கள்.

ஃ

மறுபடியும் ஒடீஸியஸ் போலி பீமஸ்ஸைக் கூப்பிட்டு உன் கண்ணைக் குருடாக்கியது யாரெனக் கேட்கில் ஒடீஸியஸ் என்பவன் என்று சொல்லும்படி கத்தினான். போலி பீமஸ் ஒடீஸியஸ் என்றும் பெயரைக்கேட்டவுடன் கரைக்கு வரும்படி கெஞ்சினான். பலவிதமான பரிசுகள் தருவதாய்ப்புகன்றான். ஒடீஸியஸ்ஸா இவைகளுக்கெல்லாம் மசிந்தவன்! அலக்ஷியமாய் உரக்கச் சிரித்துக் கேலி செய்தான். போலி பீமஸ் ரொம்பவும் ஆத்திரப்பட்டு இன்னொரு குன்றை கடலில் வீசினான். அது கப்பலின் அருகே விழவும் ஏற்பட்ட அலைகளால் கப்பல் வேகமாகச் செல்ல ஆரம்பித்ததும் ஒடீஸியஸ்ஸும் அவனுடைய மனிதர்களும் தங்களுக்கு நேர்ந்த ஆபத்து நீங்கியதை நினைத்துக் கடவுளைத் துதித்துத் தங்கள் வழியே சென்றனர். "புத்திமான் பலவானாவான்."

M. V. சாரநாதன்.

[இது கட்டுக்கதையா? உண்மையா? அது எவ்விதமிருப்பினும கதை மிக ருசிக்கின்றது. ப-ர்.]



---

வீட்டில் ஆண்மக்கள் இருந்தால் அப்போது மட்டும் அவர்களைத் தேடி வரும் ஆடவரின் கூட்டமும் குழும். ஆடவரின்றிப் பெண்கள் மட்டுமிருப்பின் 'அவர் இல்லை' என்று பெண்கள் சொல்லிவிட, தேடிவந்த பிற ஆடவரும் போய் விடுவர். அவ்விதமே, பெண்மக்கள் வீட்டில் உள்ளபோது மற்றப் பெண்களும் உள்நுழைந்து கூட்டம் போடுவர். பெண்கள் வீட்டிலில்லாது ஆடவர்மட்டுமிருப்பின் எந்தப் பெண்ணும் உள்ளேவரான். பெண்கள் சபையும் நடவாது. வீட்டுப் பண்டங்களை இரவலும் கேளார். நெருங்கார்.

---

எவ்வளவுதான் நெருங்கிய நேசரும் உறவினருமா யிருந்தாலும் மறந்து வைத்து விட்டதை எடுத்துக்கொடுப்போர் எங்கோ சிலர் அருமையாகவே இருப்பர். அகப்பட்டதைத் தங்கள் சொந்த சொத்தாகக் கொள்வோரே அதிகம். தங்கள் எதிரே நகையொன்று வைத்திருப்பின் அதை மெதுவாக எடுத்து மறைத்துக் கொண்டுபோய் விடுவர். தாங்கள் எடுத்ததாக நினையார் என்று அவர்கள் எண்ணம். அவர்களே எடுத்ததாக நினைப்போர் எப்படி வாய் விட்டுக்கேட்பது என்று பின்னடைவர்.




**துரைக்கண்ணம்மாள் :—**

[அல்லது திரிசங்கு சாஸ்திரியார். ஸ்ரீமான் வடுவூர் கே. துரைசாமி ஐயங்காரவர்கள் பி. ஏ. இயற்றியது. டபிள் கிரவுன் 1x16-ல் 436-பக்கங்கள். ஐந்து அழகிய படங்களுள்ளது. விலை ரூ. 2—4—0.]

அவரவர் அமைப்பு வழி அவரவர்க்கே பொருந்துவதாகி, மற்றவர் அதைப் போன்று தொடங்கத்திறனற்றிடுந் தன்மையினுள், ஸ்ரீ ஐயங்காரவர்களின் அமைப்பு வழியுமொன்றும். அத்தனி வழி முறையில் இந்த ஹாஸ்ய விநோத நாவலைக் கற்பிதம் செய்துள்ளார். சிரித்துச் சிரித்து மகிழக்கூடிய இடங்களும், காதற் சுவையும் காமச்சுவையும் கனிந்து தோன்றி உள்ளக் கிளர்ச்சி விளைத்துத் தூண்டும் பக்கங்களும் இந்நூலினகத்தே விசேஷமாயுண்டு. இந்நாவல் சுயமான தமிழ்நாட்டுச் சரிதை. கற்பு தவறாத ஒரு தனி நிலை இயற்கையிலேயே பாவையரிடத்து அமைந்துள்ள தென்பதற்கு,--தருமியும், கண்ணம்மாளும், அவள் தாயும் தக்க உதாரணங்களாகும். வியபிசாரம் போதித்தவளைக் கண்ணம்மாள் வெறுப்பதும், சிதம்பரமென்பவனைத் தருமி சபிப்பதும் குறிப்பிடத்தக்கன.

தருவி தன் கணவனுள்ளபோதே ஊர் அறிய நான்கு மாத கர்ப்பமென்று திருத்திவிடின், பிள்ளைகள் எவருடையதென்ற நீலகண்ட சாஸ்திரிகளின் சந்தேகம் கடைசிவரை தீராமலே கதை முடிவடைவதைத் தடுத்து விடலாம். முதற்படத்திற் காணும் சுமங்கிலி மற்றொரு படத்தில் அமங்கிலியாதல் பரம துக்கம். நீலகண்ட சாஸ்திரிகளின் கருணையும், சகிப்பும் போற்றற்பாலது. கரிதுரையின் காமமும், சந்யாசி தப்புவிக்கும் புத்திநுட்பமும், செக் மாற்றும் ஒழுங்கும் நேர்த்தியான கற்பனையாகும். வம்பு மகா சங்கம் இந்நாவலின் சிகரமெனல் தகும். குறித்த ஒரு சிலாது ஜீவன முறைகளை ஹாஸ்யரஸத்துடன் அநுபவமாக விளக்கப்பட்டிருத்தல் மிக்க ருசி. வக்கீல் முதற்கொண்டு தோசைக்காரி வரையும் ஒவ்வொருவருடைய குணகுணங்களையும் ஆசிரியர் அழகாகக் கூறுகிறார்.

உத்தம நடேசனுக்குச் சிறைத் தண்டனையா? ஸத்புருஷரான நீலகண்ட சாஸ்திரிக்கு எங்கும் சோதனையா? நல்லோர்க்கே துயர் சூழுகின்றது. தருமி மகா உத்தமி. அவள் கால்வைத்த இடமெல்லாம் ஸர்வநாசமாவதும் காலகதியே. துரையப்பனின் துரோக புத்தியே அவனைப் பாழ்படுத்துகின்றது. ஊர்வலத்தின் போது கைதியாதல் நல்ல அமைப்பு. பார்வதி கிளியின் சாந்தி வைபம் மிக்க சுவை. ரப்பர் ரகசியக்கருவி முதன் முதலாக இந்த நாவலில் தான் பிரஸ்தாபமாகிறது. யாவரும் சிறை சோத் 'திரி'வைத்த பாட்டியின் சங்கதி

---

பிரயாணம் சொல்லிக்கொண்டு பிரிகிற சிலர் மறுபடியும் உயிருடன் சந்திப்பதில்லை. ஒரு சமயம் வந்தாலும் அதற்கு ஒரு மணி நேரத்திற்கு முன்பு தான் மரண மடைந்திருக்கிறார்கள். பிரிந்த வேளை என்ன வேளையோ!

கடைசிவரை வெளிவரவேயில்லை. தருமி செல்வவதியாதலும், சாஸ்திரிகள் காசியினின்று திரும்புகையும் நன்றாயுள்ளன. பார்வி கிளியின் பழயகதை சிறந்த கற்பனை. களவு போன வைர நகைகள் தம் மனைவிக்கு அவள் பெற்றோர் தந்தவையென்று முனிசிப் வற்புறுத்துவது ஆழ்ந்த யோசனையின் புத்திதான். பகிரங்க சாந்தி முகூர்த்தத்தின் அவசியத்தினையும் 368—369—370—பக்கங்களில் காண்கிறோம்.

தோசைக்குத் தகுந்த மிளகாய்ப்பொடி (189), துரையப்பனின் வர்ணனைகள் (238), வடுவூர் ஹவுஸ் (240), ஐயாசாமி சாஸ்திரி சமர்த்து (270), கெட்டாலும் நாணயத்தோடு கெடும் வழி (276), ஹிந்து முஸ்லிம் பேதம் ஒழியும் வழி (235), மஞ்சத்திற்குப்போய் சாஸ்திரியார் ஆஜர் சொல்வது (287 to 293) பரமபத சோபன படம் (270), ஒரு கொலைக் கேஸிலேயே இத்தனை நகையையும் திருப்பி எடுத்து விடலாமெனல் (352), இன்னும் இதுபோன்ற ஸ்வாரஸ்யமான பாகங்கள் பல இந்த நாவல் முற்றும் பாவிச் சென்றுள்ளன.

இந்நாவல் பெரும்பான்மையும் "பிராமணவாக்"கால் நிறைந்துள்ளது. படிக்க விநோதமாயுமுள்ளது. ஆசிரியரின் கதை அமைக்குந் திறனையும், அவரது நடையழகையும், குப்பையிற் பலரறியக் கிடக்கும் விஷயங்கட்கெல்லாம் புதுச்சாயம்தந்து புதுமைப்படுத்தி அவற்றைப்பெரிய அநுபவங்களாயும், விசேஷித்த கற்பனைகளாவும் அமைக்கும் மதிநுட்பத்தையும் பாராட்டுகின்றோம். இந்நாவல் எல்லோரும் வாங்கி வாசிக்கத்தக்கதாகும்.

ஃ

மோகன ரஞ்சினி :—

[ஓர் தமிழ்க்கதை. சகோதரி ஸ்ரீமதி கிரிஜாதேவி அவர்கள் எழுதியது. டபுள் கிரவுன் 1x16ல் 228-பக்கள். விலை ரூ. 1.]

கதைக்காகவே "கதை" வரைவது ஒரு விதம். தமது உள்ளக் கருத்துகளை வெளியிடும் நோக்கத்தோடும் "கதை" என்பதை ஒரு துணையாகக் கொண்டு செல்வது மற்றொருவிதம். முன்னதற்கு அமையும் கற்பனைத் திறனைவிட, இரட்டிப்பான அளவினதாகப் பின்னதற்கு விசேஷித்து அமைத்தாற்றான் "கதை" ருசிக்கும். இந்த அதிகப்பட்ட "கதர்" கற்பனு அமிஸ நுசியினூடே தமது கொள்கைகளையும் கருத்துகளையும் ஆங்காங்கு இடமறிந்து ஒரு குறித்த அளவின்படி நிரப்பிச் செல்லின் அது வாசகர்கட்குப் படிப்பதற்கு ஆயாஸம் தாராமல் இனிமையுடன் ஓதக்கூடிய தாய்ச்சுவைக்கும். "மோகனரஞ்சினி" என்ற இக்கதை இந்த இரண்டாம் வகையைச் சார்ந்ததாகும். சுயமரியாதைக் கொள்கைகளும் கருத்துகளும் இக்கதையினுள் முற்றும் அடங்கியுள்ளன. இவ்விதம் புனையும் வகையில் சேரவேண்டிய மற்றொரு முக்கிய சரக்கான,—இரட்டிப்பளவினதாகத் தேவைப்படுகிற,—கற்பனைத்திறன் இதனுள் வெகு சொற்பமாகவே யுள்ளது. தமது கொள்கைகளைப் பரவச் செய்தற்

---

அநாதை போன்று தான் இருக்கும் நிலைமையே மற்றவர்கள் தன்னைக் கேவலப்படுத்தக் காரணம் என்று உணருகிறவன், அத்தகையோரை விட்டுப் பிரிந்து கண்காணாத இடம் சென்று தலை நிமிர்ந்து வாழ முயற்சிப்பானாயின், தற்போது அவமதித்தோரும் பிற்காலத்தில் அவனை மதிப்பர்.

பொருட்டே கதை வரைந்ததாயிருந்த போதினுங்கூட, இலவசத்திலன்றி அதை ரூபாய்க் கணக்கில் விலை கொடுத்தே மற்றவர் பெறவேண்டிய வாரென்றனர் என்பதையும் "கதை" இயற்றுவோர் கவனிப்பதவசியம். பணத்தைக் கொடுத்துப் பெற்றோர் தாங்கள் ஆவலுடன் சிவைத்தற்கான கதா கற்பனைத்திறன் என்னும் உப்பு அல்லது சக்கரையின் ருசிகரம் வெகு வாய்க் குறைவுபட்டிருப்பதைக் காண்கையில், அன்னோர் மனம் ஏமாறிப் போகவே வைக்கும். கதைக்காகவே அவர்கள் விலை கொடுத்து வாங்கியதன்றி, ஆசிரியரின் கொள்கைகளேயும் கருத்துகளேயும் அறிவதற்காக அவர்கள் விலை கொடுக்கவில்லையென்பது முக்கிய விஷயம். நமது சகோதரியார்க்குக் கதை சொல்ல நன்றாய்த் தெரியும். ஆனல், கதா கற்பனைத் திறனான உப்பு அல்லது சக்கரையானது நற்சுவையோடும் புசிப்பதற்கு ஏற்றவாறு இங்கு இருக்கவில்லை. எனினும், இதுவே நமது சகோதரியாரின் முதற் கதையாயின், நாம் அதிகமாகக் குற்றம் கூறுமல் ஆசரிக்க வேண்டியதுதான். மற்றபடி, இக்கதையினுள் காணும் கருத்துகளேயும் கொள்கைகளேயும் அப்படியப்படியே பச்சை பச்சையாக ஏற்றுக்கொள்வதற்கு நாம் "சுயமரியாதை"க் கக்ஷியைச் சேர்ந்திருக்கவில்லை யென்பதை நமது சகோதரியாரவர்கள் அறிவாரென்றே நம்புகின்றோம்.

[இந்நூல்கள் "அமிர்த குண போதினி" ஆபீஸில் கிடைக்கும்.]

## உறவில் பகை, பிரிவில் லாபம்.

அன்னியோன்னியப் பான்மையில் நாம் இருக்கப் போக, அந்த சாக்கிட்டுக்கொண்டு நம்மிடமே வந்து பல முறை தங்க முயல்வதில் நமக்கு வெகு செலவுகளை வைத்து விடுகிறார்கள். இதில் வளருகிற கடன்களோ—கடன் ஜெயிலே அன்னியோன்னியத்தின் லாபமாகும் கடைசியில் நற்பெயரும் கிடையாது இதைவிட பகைபோலும் விரோதமாகவே வெளிக்கு நின்று அந்த வகையில் அவர்கள் வாராதுபோக, செலவுகளும் சுருங்கித் தான் க்ஷேமமாய் வாழ்வது மேல். பிரிந்த வாழ்விலுள்ள மதிப்பு அன்னியோன்னியமா யிருக்கும் வாழ்வில் உண்டாவதில்லை. அன்னியோன்னியத்தில் கலகமே—பகையே—சொட்டுச்சொல்லே, விரோதத்திலோ எந்த சொல்லும் கிடையாது. சொல்லினும் அதற்கு மதிப்பும் கிடையாது. ஆனல் விரோதம் எனில் வெளிக்குமட்டும் விரோதமாம். உள்ளுக்கோ களங்கமற்று அவர்களும் வாழட்டும் என்று விரும்பி நிற்றலாம். அவர்களைச் சேர்த்துக்கொள்ளாமை முக்கிய கருத்தேயன்றி அவர்கள் விரோதிகளா யிருப்பினும் அந்த விரோதம் முக்கிய கருத்தல்ல.

| | | |
|---|---|---|
| விவேகம்<br>விநோதம்<br>விசித்திரம்<br>விகடம் |  | அநுபவம்<br>அற்புதம்<br>ஆச்சரியம்<br>ஆநந்தம் |

# நரகலோக தர்பார்!



**கேளீர்** என் விகட பக்தர்களே! பழய நாளில் ருக்மாங்கத மகாராஜன் ஏகாதசி விரதத்தை ஆரம்பித்து நரகலோகத்தைப் பாழடையச் செய்தா னென்ற கதையொன்று உண்டல்லவா? அப்படி ஏதாவது நரகலோகம் இப்போது பாழடைந்துபோய் அதைக்குறித்து விகடன் தொனப்பவந்தானுக்கு மென்று நினைக்கிறீர்களோ? அப்படியெல்லாம் ஒன்று மில்லை. கடவுளே கிடையாது என்று சொல்லித் திரியும் இந்தக் காலத்திலே நரகலோகத்தின் நாலு கோட்டை வாசல்களும் நன்றாகவே திறந்திருக்கு மல்லவா? பின் என்ன கோணல்வந்து பொத்திக் கொண்டது, எதற்காக விகடன் இந்த தர்பாரைப்பற்றிச் சொல்ல முந்திக்கொண்டது என்றாலோ, அதையும் அடுக்கடுக்காகவே சொல்லுகிறேன், நீங்களும் மிடுக்காகவே கேளுங்கள்!

மரணத்தின் தேவதை யாரப்பா? அதன் பெயர்தான் எல்லோருக்கும் தெரிந்தே யிருக்கிறது! எதுமறியாத சிறு குழந்தைகளுக்குக்கூடப் பாடம் சொல்லிப் படிப்பித்து வைத்திருக்கிறார்களே! எமன்தான் மரணத்தின் தேவதையென்று யாருக்குத்தான் தெரியாது? "பாம்பென்றால் படையும் நடுங்கும்" என்பது பழமொழி. பாம்புக்கே இவ்வாறானால் "சாவு" என்பதற்கு உலகமே நடுங்கும் என்று சொல்வதில் யாது தடை? எறும்பு முதல் பிரமன் வரைக்கும் இந்த "சாவு" அல்லது "மரணம்" என்னும் விஷயத்துக்கு அஞ்சி நடுங்கி அகம் கலங்காதவர்கள் யாவராயினும், அல்லது எவையாயினும் இருக்கின்றனரா—இருக்கின்றனவா என்று விகடன் கேட்கிறேன்! அதிகமான வியாதிப்படுக்கையி லுள்ளோருக்கு இந்த மரணத்தின் நினைவே பெரிதாகி கோரரூபத்துடன் எமன் எதிரே நிற்பதுபோன்ற தோற்றங்கள் நேர்ந்து அலறுவதும், நல்ல நித்திரையிலிருந்து கதறிக்கொண்டு விழித்து நடுங்குவதும் என் நஞ்சான் குஞ்சான்கள் கண்டும் கேட்டும் அறிந்த சங்கதிதானே! எமனைப்பற்றி வெகுவாகப் பேசுகிற கருடபுராணக் (கட்டுக்) கதையை யாரே அறியார்?

ஃ

"யானேதும் பிறப்பஞ்சேன், இறப்பதனுக் கென்கடவேன்" என்றார்

இணையாருமில்லாத மணிவாசகப்பெருமான். இறப்பு என்பது வெகு சுறுசுறுப்புடன் உற்றார், பெற்றார், மக்கள், மனைவி முதலானவர்களுடைய கண்ணின் அழுகையையும், கவலையின் குரலையும், கவனிக்காது சொக்குப்பொடிக்காரன் சொகுசாய்ப் பறிப்பதுபோல், உடலினின்றும் உயிரைப் பறித்து ஒரே ஓட்டமாய் ஓடி ஆகாத்தியம் விளைக்கும் ஆகா வழிப் பையல்! மரணதேவதையாகிய மகா பாதகன் வருகிற சமயமும் தெரியாது, போகிற வேளையும் தெரியாது. இருந்தாற்போ லிருந்துவந்தாலும் வருவான்! ஆறு மாதம் ஆரவாரம் காட்டி நோயாளிகளைப் பாயும் படுக்கையுமாய் அழ வைத்து அவஸ்தைப்படுத்தி அப்புறம் வந்தாலும் வருவான்! அவன் செயல் இன்னதென்று தெரியாது! இதனால் தான் 'பின்னால் தர்மம் செய்வோம்' தள்ளாத வயதினில் தர்மம் செய்வோம், ரத்தத்திமிரில் மெத்த அக்கிரமஞ் செய்தாலும் போகப்போகப் பார்த்துக்கொள்ளலாம்—என்று தாமதம் செய்தலாகாது; அப்போதைக் கப்போதே தர்மம் செய்யவேண்டும், கடவுளைத் துதிக்கவேண்டும் என்று வழுக்கைத் தலைகளான பெரியோர்கள் கூறியிருக்கிறார்கள்! வனங்களில் தங்கிய நீண்டதாடி ரிஷிகளும் ஞானிகளும் சொல்லியிருக்கிறார்கள்!

ஃ

"அப்போதைக் கிப்போதே சொல்லிவைத்தேன் அரங்கமா நகருளானே" என்றார் பெரியாழ்வாரெனப் பெயர்கொண்ட பேருளாளர். "மரணவேதனை சொல்லமுடியாத துன்பம் கொடுப்பதொன்றாதலால் அத்தருணம் என் இறைவா! உன்னைச் சிந்தனைசெய்ய முடியாது; ஆதலால், என் குறைகளை இப்போதே உன்னிடம் முறையிட்டுக் கொள்கிறேன்; கேட்டு ஆதரிக்கவேண்டும்" என்று அவர் பிரார்த்திக்கின்றார். மரணம் என்பது நம் கழுத்தின்மீது கத்தியைப்போல் எந்நேரமும் தொங்கிக் கொண்டிருக்கிற மகிமையை அறிந்தவர்கள் யார்தாம் உலகத்தையே பெரிதென்று மதித்து உலகத்திலுள்ள துச்ச வஸ்துக்களை உச்சந்தலைமேல் வைத்துக்கொள்வார்கள்? மரணதேவதை வருவதற்குமுன்பே தங்களின் எல்லாக் கடமைகளையும் (ஏற்கெனவே உயில் முதலியன எழுதிவைப்பதுபோல்) சரிவரச் செய்துவிட்டுத் தயாராய் விடுவார்கள்! அதுதான் ஒழுங்கும் நேர்மையுமாகும். அவ்விதமின்றி ஆங்காலமெல்லாம் அவிசாரியாடி, சாங்காலத்தில் சங்கரா சங்கரா என்பவர்கள் ஏமாறிய கட்டைகளே!

ஃ

மரணம் யாது? மரணம் யாது?
கோவைதலைதல், கோப்பைஉடைதல்
அல்லல் நீங்குதல், ஆன்மா விடுதலை,
மீளவும் துன்பில், விழாது கிளம்பி
நாளை எழுந்து, நன்று விளங்குற
இன்று சூரியன், ஈந்து மறைதல்,
இதுவே மரணம்! இதுவே மரணம்!

ஃ

மரணம் யாது? மரணம் யாது?
களைத்தவர் உறங்குதல்—இளைத்தவர் அயர்தல்—பயந்தவர்க்கு அபயம்—புயல் நடு அமைதி—வீட்

---

உண்மை நண்பர்கள் கடிதம் எழுதாவிடினும் அவர்களின் குணம் சந்தேகிப்பதற்கில்லை. முக்கிய காரியங்களில் அவர்களின் கடிதம் வாரத்தவறுவதில்லை. போலிகள் தான் தங்களைச் சந்தேகியா திருப்பதற்காகக் கடிதம் அடிக்கடி வரைவர். அவ்விதம் வரையினும் அவர்களின் குணம் தெரிந்தே விடுகிறது.

டினை அடைதல்—விதிப்படி உழன்று வருந்திய மக்களைத் தம்பால் வரச்சொலும் கருணைக் கடலாம் கடவுளைச் சேருதல்—இதுவே மரணம்; ஆம், இதுவே மரணம்!

ஃ

மரணத்தின் தத்துவங்கள் எப்படியிருந்தாலும் அது கேட்கச் சகிக்காத ஒரு கசப்பான சங்கதிதான்! ஆனால், எல்லா வேதாந்தமும் இந்த மரண பயத்திலிருந்தே உற்பத்தியாயிற்றென்பதை விகடன் சொல்லவும் வேணுமோ? 'இப்பவோ, பின்னையோ சற்றுநோத்திலோ' என்றும், 'காடோ செடியோ, கடற்புறமோ, கனமே மிகுந்த நாடோ, நகரோ, நகர்நடுவோ, நலமே செறிந்த வீடோ, புறந்திண்ணையோ—தமியேன் உடல் வீழுமிடம்' என்றும் இன்னும் எத்தனையோ கோடிக்கணக்கான பாடல்களும் புறப்பட்டுக்கொண்டிருக்கின்றன. பிச்சைக்காரனுக்கு ஒரு காசுபோடு, அது புண்ணியம், அது மரணத்திற்குப் பிறகு உனக்கு நல்லது செய்யும்; பார்ப்பானுக்குத் தக்ஷிணை கொடு, இங்கே இவனுக்குக் கொடுக்கிற தக்ஷிணை அங்கே கடவுள் இருக்கிற உலகத்திலே நல்ல சோபா நாற்காலியில் சுகமாகக் குந்தவைக்கும் என்றும் சொல்லுவதெல்லாம் இந்த மரண பயத்தைக் காட்டித்தானே! புரோகித வகுப்பார் பொய்யும் பித்தலாட்டங்களும் செய்து வயிறு பிழைப்பதும் இந்த மரண அச்சத்தை ஜனங்களுக்குப் புகட்டித்தானே?

ஃ

இவ்வாறான பயங்கரப் பிரதாபங்கள் படைத்த மரணதேவதையாகிய எமதர்மனின் நரகலோகத்திலே பெரிய தர்பார் ஒன்று கூடிற்று. மஹா கொடூரமான மரணதேவதைக்கு மஹா சமர்த்தனான காரியஸ்தன் யாவனென்றும், எவன்பால் அத்தேவதை மஹா அன்புவைத்திருக்கிறதென்றும் அறியவேண்டி விகடனும் இந்த ஊனுடலோடே அங்கு போயிருந்தேன். நரகலோக தர்பார் கூடியதும் மரணதேவதை மஹா அட்டகாசத்தோடும் ஆர்ப்பாட்டத்தோடும் கொலுவமர்ந்தது. அஞ்சா நெஞ்சு படைத்த அரசனுக்கெதிரில் பார்க்கப் பதங்குறையான பாதகநோய்களும், நினைக்க நினைக்க நெஞ்சை வருத்தும் நீங்காத நோய்களும், இன்னும் எல்லாவித நோய்களும் உல்லாஸமாக உயர்ந்த மக்மல் தைத்த நாற்காலிகளில் உட்கார்ந்துகொண்டு விளங்கின. மஹாராஜனாகிற மரணதேவதை கையில் ஒரு தந்தத் தடியைக்காட்டி, "யாவன் இன்று எனக்கு மந்திரியாக நியமிக்கப்படுகிறானோ அவனுக்கு இந்தத் தந்தத்தடி பரிசாகக் கொடுக்கப்படும். இது விலை மதிக்கப்படாத வைர ரத்னங்கள் இழைத்ததாகும். அவனவன் சாகசங்களை அவனவன் கூறட்டும். எவன் தக்கானோ—மிக்கானோ அவனையே நான் தெரிந்தெடுப்பேன்" என்று கூறிற்று.

ஃ

ஆசைக்களவில்லை என்கிறபடி அரிய மந்திரிப்பட்டத்தை உரியபடி பெற்றுக்கொள்ள அநேகர் ஆசைப்பட்டார்கள். அவர்களிலே ஜுரம் என்னும் சுடுமூஞ்சிப்பையல் முதன்மை

அதிகக் கபடமுள்ளவன் தன்னோடு மற்றவர்கள் களங்கமற்றுக் கலந்து நேசித்தபோதிலும், தன் கபட குணத்தாலே அவர்களுடன் சேரப் பின்னடைந்து பிரிந்து விடுகிறான். குற்றமுள்ள நெஞ்சு தன்னையே கொல்லுகிறது.

பெற்றவனென்று தன்னைத்தான் கருதி "என் பெருமை தெரியாதவனும் உலகத்திலிருக்கிறானா? எந்த நோய் வந்தாலும் என் நோய் கூடவேயில்லாது ஒரு காரியமும் சாயாது. வாராவாரம் கணக்கெடுத்துப் பார்த்தால் எந்த நோய் முந்தியதென்றும், எந்த நோய் ஆவேஸத்தோடும் விடாமுயற்சியோடும் பிடிக்கிறதென்றும் நன்றாய்த் தெரியவரும். எவ்வளவு பலத்த வலியுள்ளவனையும் சோர்ந்து படுக்கையில் விழும்படி செய்கிற என் சாமர்த்தியம் என்ன லேசா? எனக்கு ஆஸ்பத்திரியில் கொயினா தூளைத் தந்து போக்க நினைக்கிறார்கள்! நாட்டு வைத்தியர்கள் என்னென்னவோ தந்து என்னைத் துரத்தப் பார்க்கிறார்கள்! இவற்றிற்கெல்லாம் நான் அசைகிறேனே! கடைசியில் இரத்தம் வற்றச்செய்து எமலோகத்திற்கு எவ்வளவோ பேரை யனுப்பியிருக்கிறேன். ஆதலால், எனக்கே அந்த மந்திரி வேலை கொடுக்கவேண்டுமென்று பிரஸங்கம்செய்து மனுப்பண்ணிக் கொண்டது!

ஃ

இதற்குப்பின் வயிற்றுப்போக்கு நோய் எழுந்து தலையாட்டிக் கொழுத்துத் தன் பிரதாபத்தைப் பேசியது! கேளீர் எங்கள் மன்னர்பிரானே! நான் சாதாரண வயிற்றுப் போக்கு போலக் காட்டி, அதிலிருந்து "அதிசாரம்" என்ற வியாதியில் இறங்கி, மனித சத்துவத்தையெல்லாம் மலத்தின் மூலமாக வெளியேதள்ளி எலும்பும் தோலுமாக இளைக்கப்பண்ணி, ஆளின் அடையாளத்தையே முழுதும் மாற்றி, இரவுபகலாகக் கழியச்செய்து படுக்கையில் வீழ்த்தி வீக்கமும் தேகத்தில் அதிகப்படவைத்துக் கடைசியில் எந்த மருந்துக்கும் வசப்படாமல் எமபுரிக்குப் பிரயாணப்பட வைத்துவிடுவேன். ஆதலின், எனக்கே மந்திரி வேலை தரும் என்று பிரார்த்தித்தது!

ஃ

பிரகு தமிழில் 'வயிறு' தெலுங்கில் 'கடுப்பு'—இந்த இரண்டும் ஜோடியான வயிற்றுக்கடுப்பு எழுந்து தான் எத்தகையோரையும் கதறவைப்பவனென்றும், 100-மருந்துகளில் ஒன்றுக்கே வசப்படுபவனென்றும், அத்துடன் வீக்கத்தையும் காட்டி மரணபுரம் ஓட்ட வல்லவனென்றும் தன் பெருமைகளைக் கூறிற்று!

ஃ

அதன்பின் எக்கம் எழுந்து தான் செய்யும் வேலையில் எத்தனையோ பேரைத் தூக்கிட்டுக்கொண்டு சாகச் செய்திருப்பதாயும், மனோவியாதியில் மெலியச்செய்து பலரை மண்ணில் புதைத்திருப்பதாயும் தன் பிரதாபம் பேசியது!

ஃ

பின் ஸ்திரீரோகங்கள் எழுந்து தம் வல்லமைகளைப் பேசிக் கடைசியில் வேப்பிலையைக் கையில் கொடுத்துக் கண்ணைமூடச் செய்வதில் தம்மைவிட சமர்த்தரில்லையென்று பிரசங்கித்தன!

இதைக் கேட்டதும் ஆத்திரத்தோடும் தோத்திரம் செய்து ஷேல்வாயு என்னும் பரீர்நோயும் தன் பெருமை பேசத் தலைப்பட்டது. "மஹாராஜா!"

---

மனைவிமக்கள் வெளியூர் சென்றிருக்கையில் தனக்குப் பணச் செலவுகள் மிச்சமானபோதிலும், அதற்காக அவன் கொள்ளும் சந்தோஷம் அதிக நேரம் நிற்பதில்லை. எவ்வளவு பணச்செலவுகள் நேர்ந்திடினும் அதற்கு இசையச் சம்மதித்து மனைவி மக்களுடன் வாழவே அவனுக்குப் புத்தி போகிறது.

என் பெருமை உனக்கன்றி யாருக்குத்தெரியும்? காலிலிருந்து தலைக்கு ஓடுவதும், தலையிலிருந்து காலுக்கு ஓடுவதும், உலகமெங்கும் சஞ்சரித்து ஊர்கோலம் வருவதும், கணுக்களில் தங்கிக் கவலை விளைப்பதும், ஒன்றுமில்லாததுபோலிருந்து ஒரேயடியில் சரேலென்று கிளம்புவதும் பட்டவர்களுக்குத் தெரியும்; உனக்குந்தெரியும். ஆதலால், மந்திரி வேலைக்கு நானே லாயக்கானவன் என்று திடசித்தத்தோடும் கூறியது!

ஃ

என் ஸாகசம் எவனுக்கு வரும் வரும் என்று தள்ளாடி மெள்ள எழுந்தது, லையாடியான க்ஷயநோயும், 'ஆத்திரக்காரனுக்குப் புத்திமட்டு' என்பார்கள். அதுபோல், தலைவிரித்துக்கொண்டு நிலை தெரியாமலாடுகின்ற சுரநோய்க்கும், வாதநோய்க்கும் என்ன தெரியும்? 'அடங்காப் பிடாரிக்கு ராஜாமூங்கில்தடி' என்கிறபடி பலத்த மருந்தைப் பக்குவமாய் ஏற்றிவிட்டால், மந்திரக்காரனிடம் பேயடங்குவதுபோல் ஆட்டம் அடங்கி, ஓட்டம் ஒடுங்கி, வாட்டம் தொடங்கவேண்டியதுதான்! நானோ அப்படியல்லன். மெள்ள மெள்ள இருமித் துள்ளத்துள்ள உயிரை உண்பேன். எந்த வைத்தியனாலும் என்னை வெல்லமுடியாது; எந்த மந்திரக்காரனாலும் என்னைக் கட்டுப்படுத்த ஆகாது. எனக்கே மந்திரி வேலை கொடுக்கவேண்டும் என்று கூறிற்று! ஃ

இவ்விதமே பிளேக்கும், வாந்திபேதியும், ஜன்னியும், மகோதரமும், இன்னும் பலநோய்களும் எம்வன்மை எவர்க்கு வரும்?—ஒரு க்ஷணத்தில் ஊரையெல்லாம் நாசப்படுத்தமாட்டோமா?—என்று தம்மைப் புகழ்ந்து கொண்டன! ஃ

கடைசியாக, மதுபானப்பெரியார் எழுந்தார்! என்னை உலக முழுதுக்கும் நேசிக்கிறார்கள். சில ஆஸ்பத்திரிகளில் டாக்டருக்கு மிக வேண்டியவர்களாயிருந்தால் அவர்களுக்குத் தரும் மருந்தில் பிராந்தி சேர்ப்பது வழக்கம். பெரும்பாலும் இங்கிலீஷ் மருந்துகளில் நான் கலவாமலில்லை. பிரஸவ காலத்தில் பெண்கள் நன்றாக என்னை ருசி பார்க்கிறார்கள். நான் இல்லாத விருந்து ஒரு விருந்தாகத் தோன்றாது. மார்கழி மாதத்தில் பாகவதர்கள் என்று போலிப் பெயர் வைத்துக்கொண்டோரிற் சிலர் தங்களின் ததியாராதனையில் என்னை வெகு பிரியமாய் வரவேற்கிறார்கள். நான் இருந்தால்தான் ததியாராதனை சிறப்பாக நடக்கும் என்பார்கள். மது மாமிசமற்ற ததியாராதனை எதுக்கு என்பார்கள்! அதுமட்டுமா? பெரிய மனிதன் என்ற அந்தஸ்தைக் கொடுப்பதும் நானே! திடீரென்று பெரிய பதவிகளில் ஏறிவிட்டோர் முதன் முதலாக என்னை நேசம் செய்துகொள்வது வழக்கம்! நீலகிரிபோன்ற குளிர்ந்த இடங்களிலிருப்போர் என்னைவிடாமல் கைப்பற்றிக்கொள்வார்கள். நடுங்கவைக்கும் குளிருக்கு நான் வாய்க்குள்போனதும் எவ்வளவோ சூடு கொடுக்கிறேன். இயேசு நாதர் பிறந்தார்—கேசுபுட்டி திறந்தார் என்று சொல்வதும் என்னைப் பெருமைப்படுத்தியேயல்லவா? கிறிஸ்மிஸ் பண்டிகை நான் இல்லாவிட்டால் கம்பீரமாக சோபிக்குமா? நான் ஏழைகளுக்குக் கள்ளாகவும்,

---

ஒரு தாசியைவிட ஒரு சிறு குழந்தை மற்றவர்களை அதிகமாக மயக்கிவிடுகிறது. தாசி கபடத்தால் மயக்குகிறாள். குழந்தையோ தனது நிர்மலமான உள்ளத்தால் உலகத்தை வசீகரிக்கின்றது.

கொஞ்சம் காசு சேர்த்தோருக்குப் பட்டைச் சாராயமாகவும், அதிகம் கொழுத்து மிஞ்சிப்போனவர்களுக்குச் சீமை பிராந்தி ஒயின் விஸ்கிபாகவும் மாறி ஏழை முதல் தனவந்தர்கள் வரையும் கொண்டாடப்படுவோனுயிருக்கிறேன். நான் செய்யும் ரகசியக் கெடுதியும் குடும்ப நாசமும் படுகொலையும் வெளிக்கு ஒருபோதும் தெரியவராது. நல்லவன்போலிருந்து நேசித்து நடுத்தெருவில் விடுகிறவன் நானே! ஆதலின், எனக்கே மந்திரி வேலை தரும் என்று பேசினர்!

ஃ

அதிகப் புத்திசாலியாகிய எமதர்ம மஹாராஜா எல்லாவற்றையும் தீர்க்காலோசித்துவிட்டு, "உங்களுக்கெல்லாம் மந்திரிவேலை கொடுப்பதில்லை; உங்களை யெல்லாம் மனிதர்கள் அனைவரும் முதலிலேயே விரோதிகளாய்ப் பாவிக்கிறார்கள்; எவ்விதமும் உங்களைத் துரத்திவிட நினைவாகிறார்கள்! உங்களை வெறுக்கிறார்கள்! குடி-மிதமற்ற குடியோ சகுனி மாமனைப் போல் ஒக்க இருந்து ஊரைக்கெடுப்பதாகும். சிரித்துக்கொண்டே கழுத்தறுப்பதாகும்; குடியினல் நேருகிற கலகங்களும், குடித்தன நாசங்களும் மரணங்களும் கணக்கிலடங்குமா? எவ்வளவு புஷ்டியுள்ளவனும் குடிக்க ஆரம்பித்தால் சீக்கிரமே மரணலோகத்திற்கு வந்து விடுகிறான்! மனிதர்களுடைய உத்ஸவங்களிலும் கொண்டாட்டங்களிலும் தீபாவளிகளிலும் கூட இருந்து குளிர்ந்து குலாவிக் கொல்லுகிற மேன்மையான கருவி! அந்த மதுவாலேயே வியாதிகளாகிய உங்களுக்கெல்லாம் வேலை ஏற்பட்டு உல்லாஸப்படவும் முடிகிறது. மதுபானத்தின் ஸாகசம் உங்களுக்கெல்லாம் வாராதாதலால், மந்திரி வேலையை உயர்திருவாளர் திருமிகு மதுபானப் பெரியார்க்கே கொடுத்தேன்" என்று தீர்மானம் செய்துவிட்டது. உடனே மதுபான மகிபரை எமதர்மனுக்கு அருகேயுள்ள ஸோபாவில் வீற்றிருக்கச்செய்து தந்தத் தடியையும் மந்திரிப் பட்டத்துக்குரிய ஸன்னத்துகளையும்கொடுத்துக் கௌரவித்தது. தங்களுடைய பரம மித்திரனே மந்திரி பதவியை வகித்ததைக் குறித்து எல்லா வியாதிகளும் ஒன்று கூடி மங்களம் லாலி பாடி ஹாரத்தி எடுத்து வாழ்த்திற்று. இவற்றையெல்லாம் விகடனும் பார்த்துவிட்டு உங்களிடம் வந்து யாவற்றையும் கொட்டிவிட்டேன். குடித்தனத்துக்குச் சனியன் எது என்பதை இதிலிருந்தும் தெரிந்துகொள்ளுங்கள்! உள்ள உண்மையைக் கண்டு தெளியுங்கள். ராம்! ராம்! சுபம்! சு!! சுவாஹா!!!

---

புத்திசாலிகள் இல்லாத வீட்டில் புஸ்தக பீரோக்களும் பெட்டிகளும் சாதாரணமாகத் திறந்து கிடக்கலாமாம். ஏனெனில், அங்குவரும் சாமான்யர்களுக்கு அதிற்கண் போகாதாம். புத்திசாலி யொருவன் வரின் மேஜைமீதுள்ளதை வெகு ஜாக்கிரதையாக எடுத்து மறைக்கவேண்டுமாம். அப்படியே புஸ்தக பீரோக்களையும் பூட்டு போடவேண்டுமாம். இல்லாவிடில் அவைகட்குப் புத்திசாலியால் ஆபத்து உண்டாகுமாம்!

---

எந்தக் காரியமும்தான் செய்து பார்த்துப்பட்டிராத விஷயத்தில் அது புதிதாகவே பிரமையாகவே தோன்றுகிறது. ஒரு முறை பழகிவிட்டால் பிறகு அனுபவமேற்பட்டு விடுகிறது. முதலில் அனுபவ மில்லாமலேதான் ஒவ்வொருவரும் ஒவ்வொரு வேலையில் தலையிடுகிறார்களென்றும், பிறகே அதில் பட்டுத் தேறுகிறார்களென்றும் அறியவேண்டும்.




எப்போதாவது உதவுமென்று பெட்டிகளின் அடியிலே போட்டு வைக்கிற பணத்தை உடனுக்குடனே மறந்துபோகாவிட்டால், அதையே பிறகு குறிப்பாய்த் தேடி எடுத்துக் கொள்ளச் செய்துவிடுமாம்!

ஃ

தன் காலின்கீழ் அடங்கி மிதிபட்டுக் கிடந்தவன் தலைநிமிர்ந்துவிட்ட பிறகு அவனே தன்னிடம் வலியப் பேசவந்தாலும், தான் அவனைப்படுத்திய கொடுமைக்கு அவனிடம் பேச நாணமா யிருக்குமாம்!

ஃ

எவன் வலியவந்து உதவிகள் செய்கிறானோ அவன் தன்னிடம் மட்டும் குலாவுகிறானா, தன் வீட்டுப் பெண்களுடனும் குலாவுகிறானா என்று ஒரு சந்தேகக் கண் போடவேண்டுமாம்!

ஃ

ஊரில் சுறுசுறுப்பு அதிகரிப்பதற்கு ஆங்காங்கு சோம்பேரி மடங்கள் ஏற்படவேண்டுமாம்!

ஃ

கணவன் மறந்துவிட்ட பழைய சிறு சிறு நகைகளெல்லாம் பெண்டாட்டியின் சொந்தச் செலவு சௌகரியங்கட்கு வெகு உதவியா யிருக்குமாம்!

ஃ

அவர் ரொம்பவும் நல்லவர், மகா பெரியவர்; ஆனால், இரவு வந்ததும் 'தண்ணி' போடத் தவறமாட்டாராம்!

ஃ

காலமுழுதுக்கும் ஒருவனுடைய சோற்றையே தின்றுவிட்டு அவனுக்கே துரோகமும் செய்தவர்கள், அவன் விழித்துக்கொண்ட பின், அவன் கண்ணிலேயே தென்படமாட்டார்களாம்!

செலவிடுகிற வீடு இருந்தால், வந்து குந்துகிறவர்களும் இருப்பார்களாம்! ஏமாறிய வீட்டுக்காரன் அவர்கள் வந்துபோவதை ஒரு கௌரவமென்று நினைத்துக்கொள்வானும்!

ஃ

அந்த அல்ப சின்ன சங்கதியிலே ஏன் சண்டையிட்டுவிரோதப்பட்டாய் யென்றதற்கு, அந்த விரோதத்தாலாவது என் வீட்டிற்கு வராதிருந்து பணம் மிச்சப்படாதா என்றுதான் என ஒருவன் பதில் சொன்னனும்!

ஃ

சபையில் பேச நடுங்குகிறவனுடைய படிப்பைவிட, எதுங் கல்லாது பேசுவோனின் பேச்சே மிக மதிப்புதருமாம்!

ஃ

கர்ப்ப எண்ணெய் சாப்பிட்டோர் கணவனில்லாமலே கர்ப்பமாகலாமாம்!

ஃ

விபசாரிக்கள்ளிகளுக்குத் தன் கணவனோடு கோயில் குளங்களுக்குப் போவது அவமானமா யிருக்குமாம்.

---

சிலர் பாதி கதையைக் கண்டு பின்னுவென்று எழுதிப்பிறரிடம் காண்பித்து அவர்களிடம் மற்ற பாக்கிக்கான விஷயங்களைப் பெற்றுச் சரிசெய்து எல்லாம் தாங்களே எழுதியதாகப் பத்திரிகைகளுக்கு அனுப்பிப் பெருமைப் பட்டுக் கொள்கிறார்கள்.

கள்ளக் காதலனுடன் செல்வதாகில் அது வெகு கௌரவமா யிருக்குமாம்!

ஃ

எம்.ஏ., பி. ஏ. பட்டம் பெற்றவர்களைவிடப் பெருதவர்களே மிக்க மேதாவிகளாகவும் கல்விமான்களாகவும் இருக்கிறார்களாம்!

ஃ

ஒரு வீட்டில் பெண்ணைக் கட்டிக்கொண்டவனுக்கே அதிக செல்வாக்காம். அப்பெண்களைக் கட்டிக்கொள்ளாதவன் எவ்வளவு நெருங்கிய உறவாயினும் அவனுக்கு அங்கு அத்தனை மதிப்பில்லையாம்! ஃ

எவ்வளவுக்குக் கபடம்ஏறுகிறதோ அவ்வளவுக்குப் பெரிய மனிதராகலாமாம்! ஃ

சிலர் சாமர்த்தியமாகப் போடுகிற முடி கோர்ட்டாரால்தான் அவிழ்த்து நீதியைக் கண்டுபிடிக்கவேண்டியிருக்கிறதாம். ஆனால், இந்த முடிபோட்டவர்கள் அதிகநாள் வாழ்ந்ததில்லையாம்.

ஃ

என்னுடைய பெண்டாட்டிக்குப் பக்கத்தில் என் அப்பன் அவள் மேல் கால் போட்டுத் தூங்கக்கூடாது; ஆனால், நான் என் அப்பனின் பெண்டாட்டிமேல் கால் போட்டுத் தூங்கலாம் என்று ஒருவன் விகடனிடம் சொன்னானாம்! சென்ற பத்திரிகையின் [636-ம் பக்கத்திலுள்ளதை இவ்விதம் திருத்திக்கொள்க.]

---

## துள்ளும் ஆட்டுக்குட்டி.

துள்ளாதே! துள்ளாதே ஆட்டுக்குட்டி என் கையில் இருக்கிறது சூரிக்கத்தி! சத்தியத்தை எதிர்த்து எவரும் வெற்றி கண்டதாக இதுவரை காணலை. வெளிக்கு ஜெயம் பெற்றதாக முதல் தோற்றம் உண்டாகினும் பிறகு சர்வநாசமயம்தான். எங்கிருந்தோ வந்து பரதேசிபோல் புசிப்புக்குக் காத்திருந்தவன் பின்பு அன்னமிட்டவரையே அதிகாரம் செய்யத் தொடங்கிவிடுகையில் அவன் ஜீவியமும் சுருங்கிவிடுகிறது. எவ்வளவு கபடமோ அவ்வளவுக்குத் தரித்திரமே வமிச நாசமே. "அடே! பதரே! துள்ளு! இன்னும் துள்ளு! உன் அழிவுக்காகவே துள்ளுகிறாய்" என்றும் சொல்லும்படியாகவே தற்போது துள்ளுகிற ஆண் பெண்களின் பிற்காலமும் இருக்கும்படி கடவுள் பண்ணிவிடுகிறார். துள்ளித்துள்ளி பின் ஏங்கி மசானபூமி சேர்ந்தோர் எத்தனையோ பேர்! துள்ளுவோர் தம் ஜீவிய அலங்கோலத்தைச் சீக்கிரம் பரிசாகப் பெறுவர். கடவுள் சாபம், சத்தியத்தின் சாபம் தப்பாது.



# ஹாஸ்ய சஞ்சீவினி





"என்னங்காணும் ஓய் குடியரே! என் காணும்உமக்கு இந்தக்கேடு? சம்பளம் வந்தால் குடிப்பதும் சாராயக்கடைக்குக் கொடுப்பதுந்தானு உமக்கு வேலே? நேற்று அநியாயமாய் என் முதுகில் இரண்டு போட்டீரே. ஓய், யாரிடத்தில் சிநேகஞ்செய்தாலும் குடியரிடத்தில் சிநேகமாகாது. இவர்கள் "மேட்டிலிருந்தால் தன் மகள், பள்ளத்திலிருந்தால் அத்தைமகள்"—என்கிற இரு சுபாவமுள்ள சண்டாளர்கள். குடித்து விடிந்த வீடு எது? எங்காணும் இப்படி சொத்தை சாராயக்கடைக்கும் அந்தக் கடன்களுக்கும் அழுதுவிட்டு ஓட்டாண்டியாய் விடுகிறீர்கள்?"

குடியன்:—அடப்பா! மகா யோக்கியன்; புத்தி சொல்லுகிறுன் கேளுங்களடா! அடா! தன் தாரத்தை இகழ்ந்து பிறர் தாரத்தை இச்சித்துத் திரியும் பேயாண்டிப்பயலே! நீயா எனக்குப் புத்தி சொல்லுகிறுய்? நீ ஊசிமுதல் ஒன்பதையும் வேசைக்கு அழுத ஊதாரிப்பயலாச்சுதே! அவள் என்ன அழகாயிருக்கிறுளென்று அவளோடு அழுகிறுயடா? பஞ்சவர்ணக் கிளியை வீட்டில் வைத்துவிட்டு, அந்தப் பாபிஷ்டிமுண்டையோடு சகவாசம் செய்கிறுயே? உனக்கென்ன கேடு?

வேசிக்கள்வன்:— போதும் அடக்கு ஓய்! வெகுசாய் முண்டையைக் கண்டாய்! உனக்கு அதின் அருமை தெரியுமா? பன்றிக்குத் தெரியுமா பன்னீர்வாசனே? உன்னைப்போலக் குடிகாரப்பயல்களோடு சேர்ந்துகொண்டு, கண்டதையெல்லாம் குடித்து, வந்ததை எல்லாமா உளறித்திரிகிறேன். உனக்கு என்ன தெரியும் என் சுகுண சுந்தரத்தின் அழகு? உன் கண்ணைப் பிடுங்கிப்போட்டு என் கண்ணைப் பிடுங்கி உன் கண்ணிருந்த இடத்தில் வைத்துப் பார்த்தாலல்லவோ அந்த மாதுசிரோமணி—மரகதவடிவு—பத்தரைமாற்றுப் பசும்பொன்—பெண்கள்நாயகம்—பேரின்பப் பொக்கிஷத்தின் பெருமை தெரியவரும். உனக்கென்னடா தெரியும் குடிகாரப் பயலே!

குடியன்:—"பொரிமாவை மெச்சினும் பொக்கைவாயன்' என்பது போல, நன்றுய்ச் சொன்னுயடா! என்ன அழகு சுந்தரத்தைக் கண்டானப்பா! கால் நொண்டிக்கால், கையில் வெண்குஷ்டம், சரீரமெங்கும்ரோகம், மூக்கோ சப்பட்டை, கழுத்திற் கண்டமாலை, புண் சிறுத்த கைகள், குட்டையும் தடிப்புமான தேகம், என்ன ஆச்சரியமான சிருஷ்டி! இந்த அழ

---

*பிறர் மீது அசங்கிதமான புகார்களையே சதா கூறிக் கொண்டிருப்பவன் அதைக்கேட்கும் பிறராலும் வெறுக்கப்படுவான். குணத்தைக் கண்டு அந்தப் பிறரும் இவனிடம் நெருங்காமல் ஒதுங்கி விடுவர். நெருங்கினோரைப் பற்றியும் இவன் வேறோரிடத்தில் தப்புந்தவறுமாக நிந்தைகள் கொட்டியளக்கலாம். தூற்றும்வாய் கூற்றெனத்தகும்.*

யையா நான் உன் கண்ணை இரவல் வாங்கிக்கொண்டு பார்க்கவேண்டும்? போதுமப்பா உன் சுந்தரத்தின் பெருமை! யாருக்கும் சொல்லாதே; இச்சிக்கப் போகிறார்கள்! வேசைக்கு இட்டு எண்டா விறகாய்ப் போறே?

வேசிக்கள்வன்:—போடா போ! உனக்கு அதில் அனுபவம் இருந்தால் இப்படிச் சொல்லமாட்டாய். அவ்வளவு நயமான குட்டி அகப்படுவது வெகு கஷ்டம். உன் குடியால் குடி கெடுவது தெரியவில்லை. அவன் கெட்டான் குடிகாரனென்று எனக்கு உபதேசிக்க வந்துவிட்டாய்.

☞ இச்சம்பாஷணை முடியவில்லை. பாக்கியை நீங்களே சேர்த்துக் கோர்த்துக்கொள்ளுங்கள். இதில்-சேர்த்தல்-கோர்த்தல் என்ற இருபதங்களில் எந்தப் பதம் முன்னே வரவேண்டுமென்பது வினு? ಃ

பருவமடைவதற்குமுன் விதவையாய்விட்ட ஒரு பெண் பாடசாலை உபாத்தினியாக இருந்தாள். ஒரு தினம் ஏதோ படிக்கவில்லையென்று ஒரு பெண்ணைக் கண்டபடி முறட்டுத்தனமாக அடித்துவிடவே, அப்பெண்ணின் தாய் அங்குவந்து, இப்படித்தானா பெண்ணையடிப்பது?—உமது குணத்தைக்கண்டுதான் பகவான் உமக்கு மருமகளைவைத்து வாழ இடம் தாவில்லைபோலும் என்றாளாம். ಃ

எதிர்வீட்டுக் குழந்தை:—நான் உன்னிடம் பால் கறக்க வந்ததும் நீ பாத்திரத்தில் மூத்திரம் இருந்துவிட்டாயே! அட முட்டாளே!

பக்கத்துவீட்டுக் குழந்தை:--நான் என்ன செய்வேன். நீ பால் கறக்க அதைத்தொட்டதும் எனக்கு உடனே 'ஒன்றுக்கு' வந்துவிட்டது!

ಃ

சுந்தரி:—உன் புருஷன் என்னவோ உன்னிடம் சொல்லிக்கொண்டிருந்தாரே, அது என்னடி?

சுப்பு:—என்னைவிட நீ ரொம்ப அழகென்றும், உன்னைக் கட்டிக் கொள்வதற்கில்லாமற் போயிற்றே யென்றும், உன்னை இந்த ஜென்மத்தில் எப்படிப் பெறுவதென்றும், என் சகாயம் இருந்தால் ஒருதினத்துக்காவது இரவலாகப் பெற்றுவிடலாமென்றும் சொன்னார்.

சுந்தரி:--போடி, வாயாடி! உனக்கு எப்போதும் இதே மாதிரிப்பேச்சு தான். அதுவே உனக்கு நினைவு.

ಃ

மணியன்:—இந்த விவாகக்கூட்டத்தில் அந்தப் பெண்தான் வெகு கெட்டிக்காரி.

மாதவன்:—எப்படி அவளைக் கெட்டிக்காரி யென்று கண்டுபிடித்தாய்?

மணியன்:—என் மனைவியோடு கூடிக்குலாவுகிறாளேயன்றி நான் எவ்வளவு கண் ஜாடைகள் போட்டும் சிரித்தும் என்னுடன் பேசக் காணோம். மயங்குகிறவளாகவுமில்லை. அவள் புருஷன்யாரோ, எந்தத் தடியனோ தெரியவில்லை.

மாதவன்:—நான்தான்— இந்தத் தடியன்தான்—அவள் புருஷன்!

ಃ

—"நீ என் அந்த வேலையை ஒப்புக்கொண்டு செய்யக்கூடாது?"

---

அவள் கணவன் அனாவசியமாய் வெளியில் திரிந்து கொண்டிருந்த தெல்லாம்நின்று வீட்டில்தானே இருக்கத் தொடங்கிக் கொள்வானும்.

—"எனக்கு அதில் அவ்வளவு அனுபவம் கிடையாது"

—"எவ்வித அனுபவமுமில்லாமல் தானே முதலில் உள்ளே போகிறீர்கள்?"

—"அதில் ஒருவருக்கொருவர் உதவியாக இருவராய் இருக்கிறார்கள். தவறினாலும் நஷ்டமில்லை. இதிலே நான் ஒருவனே துணிந்து செய்ய வேண்டியிருக்கிறது.

ஃ

விவாகமானபோதிலும் சாந்தி முகூர்த்தத்தை மூன்றாவது மாதம் வைத்துக்கொள்வதென்று பேசிவிட்டு மணமகன் வீட்டார் தங்களின் ஊர் சென்றனர். இரண்டாவது மாதத்தின் முதலில் மணமகன் தன் மனைவியிருக்கும் ஊரின்பக்கமாகவந்தபோது அந்த இடத்தில் வண்டி மாறி ஏற வேண்டியிருந்ததில் ஒரு மணிநேரம் தாமதிக்கும்படி நேர்ந்தது. புதிய மனைவியின் ஞாபகம்வரவே, அவளது முகத்தாமரையைக் கண்டுகளித்துச் செல்ல விரும்பி அவசாம் அவசரமாய் மிட்டாய்களும் பழங்களும் வாங்கி ஒரு சிறு மூட்டை கட்டிக்கொண்டு மனைவியின் வீட்டிற்குச் சென்றான். தெருத்திண்ணையில் மாமி உட்கார்ந்திருந்தாள். அவளது கணவன் விவாகத்திற்கு நான்குமாத முன்புதான் இறந்ததால் அவள் தன் பெண்ணின் விவாகத்திற்கு வரவில்லை. மருமகனையும் கண்டவளல்ல. ஆதலின், மருமகனைப் பார்த்து யார் என்றாள். மருமகனுக்கும் அவளைத் தெரியாது. பத்மாவதியைப் பார்க்கவந்தேன் கூப்பிடுங்கள் என்றான். நீங்கள் யார் என்றாள் மாமி. நான் பத்மாவதியின் கணவன்; அடுத்த வண்டிவர அதிகநேர மிருந்ததால் பார்க்க வந்தேன் என்றான். உடனே மாமி ஓடி ஒளிந்தாள். பத்மாவதி நாணத்துடன் எதிரே வந்தாள். அவளிடம் தன் சிறுமூட்டையைக் கொடுத்துவிட்டுக் கண்குளிரப் பார்த்து மகிழ்ந்து, ரயிலுக்கு நேரமாயிற்று, போய் வருகிறேன் என்று சொல்லிக்கொண்டு புறப்பட்டான். பத்மாவதி அன்புடன் வணங்கி விடை தந்தாள். மருமகனும் விரைந்து ரயிலுக்கு வந்து வேறு வண்டி ஏறினான். இது இனியதோர் சந்திப்பன்றோ? இந்த இளக்காதலர்களின் நெஞ்சில் சந்தித்தபோது உண்டான எண்ணங்களின் அலைகளை எழுதவுங் கூடுமோ?

ஃ

மகாதேவன்:—என்ன, உங்கள் பெண்ணின் முகத்தைத் தடவிப் பார்த்துப் பிறகு விளக்கையும் கொண்டு வந்து பார்த்தீர்களே? ஏனோ?

சாமிநாதன்:—என்மகள் தானா அல்லது வேறு பெண்ணா என்று அறிவதற்குத்தான். என்மகள் இரவில் சுழற்றி என்னிடம் தந்த கடியார கொலுசை அதிகாலை யிருட்டில் அவள் கழுத்தில் போட்டேன். பிறகு வேறு அன்னியரின் கழுத்தில் போட்டு விட்டேனோ என்று விளக்குடன் ஓடி வந்தேன்! சந்தேகம் பெரிய பிராணவஸ்தையடா அப்பா!

---

எவ்வளவு நாள் வரைக்கும் அவர்கள் விரோதப்பட்டு விலகியிருக்கிறார்களோ அவ்வளவு நாள் வரையில் அவர்களுக்குச் செய்யவேண்டிய போஜனச் செலவுகளும் மற்ற செலவுகளும் உழைப்பாளிக்கு லாபமே. ஒரு முறை விரோதப்பட்டு நன்றி கெட்டுத் துரோகியானோர்க்குப் பிறகு எவ்வளவு செய்யினும் வியர்த்தமே. அவர்களும் விசுவாச முள்ளவர்களாகப் போவதில்லை.




## தகப்பனாரின் கடிதம்

அன்புள்ள குமாரனுக்கு ஆசீர்வாதங்கள்.

1. நீ எழுதிய கடிதம் இராத்திரி கிடைத்தது. அப்போது தான் நான் வெளியிலிருந்து வீட்டுக்கு வந்தேன். உன் கடிதத்தைப் படித்து முகத்தில ஒத்தி முத்திட்டேன். இரண்டு மாசத்தில் இவ்வளவு அழகாய் எழுதக் கற்றுக்கொண்டதைப்பற்றி எனக்கு மிகவும் சந்தோஷம். மற்றவர் என்ன நினைத்தாலும் நான் மாத்திரம் நீ உன் அண்ணனைவிட நன்றாய்ப் படிப்பாயென்றே எண்ணுகிறேன். உனக்குக் கடவுள் நீண்ட வயதைத் தரவேண்டும்.

2. "நாயனா, நான் பெரியவனானால் பணம் சம்பாதித்து உன்னிடம் கொடுப்பேன். அம்மாளுக்கும் பட்டுப் புடவைகள் வாங்கித் தருவேன்." என்று நீ ஒருநாள் தாடிபத்திரியில் சொன்னபோது, உன் அம்மாள் என்னைப் பார்த்து, "மகன் சம்பாதித்துப் போடுவான், நீங்கள் குந்திச் சாப்பிடலாம்" என்று சந்தோஷ மிகுதியால் பரிகாசமாய்ச் சொன்ன சொல் என் நெஞ்சில் என்றும் பதிந்திருக்கிறது. உன் அம்மாள் இக்கடிதத்தைப் பார்த்தால் எவ்வளவு சந்தோஷப் படுவாள்? உன் அம்மாள் தன் உயிரை உன்னிடம் வைத்திருந்ததை என் உள்ளம் அறியும். பேச்சு மூச்சு யற்று உயிர்போகும் தருணத்தில், நான் "குலசேகரனைப் பார்க்க ஆசையா" என்று கேட்டபோது, உன் அம்மாள் ஆம் என்று தலையை ஆட்டியதையும், நான் உன்னைத் தூக்கி எதிரில் கிடத்த, உன்னை அன்போடு உற்றுப் பார்த்ததையும் நான் மறவேன். உன் அம்மாள் உன்மேல் வைத்த ஆசையை நீ என்றும் மறக்கலாகாது. பெரியவனானாலும் நீ அடிக்கடி உன் அன்புள்ள தாயை நினைக்கவேண்டும். அவ்வளவு நல்ல தாய் உனக்கு எப்பிறப்பிலும் கிடைப்பதரிது.

3. கிருஷ்ணம்மாள் அக்காளை நீ அடிக்காதே. அடித்தால் அக்காளுக்கு நோகுமே.

4. உன் சிநேகிதன் சீனிவாசராவு—பங்களூரிலிருந்து கடிதம் எழுதினான். அவன் நன்றாய்ப் படிப்பதாயும், நான் சொல்லி வந்த புத்திமதிப்பிரகாரம் நடந்து கொள்வதாயும், தாய், தந்தை, தம்பி—தங்கைமார்களிடம் அன்பாயிருப்பதாயும் எப்போதும் உண்மை பேசுவதாயும் எழுதுகிறான். நீயும் அவனைப்போல நல்லவனாக

வேண்டும். உன் அக்காள் அண்ணன் முதலியவர்களை அடிக்கலாகாது. அவர்கள் சொல்லும் சொற்படி நடக்கவேண்டும்.

5. ஞாயிற்றுக்கிழமை முதலிய விடுமுறை நாளில் வெயிலில் வெளியில் திரியாதே. இருட்டில் எங்கும் போகாதே. உன் உபாத்தியாயரிடத்தில் நல்ல கதைகள் கற்றுக்கொண்டு நான் வரும்போது எனக்குச் சொல்லவேண்டும்.

உனக்கு ஆசீர்வாதங்கள்.

உன் அன்புள்ள தந்தை.

## இருவர் நட்பு பலப்படுவதற்கு இன்னொருவரின் உதவி.

ஏற்கனவே ஒருவருக்கு ஒரு அன்பரைத் தெரியும். அவ்விருவரும் கூடிக் குலாவிப் பேசி மகிழ்வதுண்டு. ஆயினும் அவ்விருவரின் இடையே ஆழ்ந்த அன்பின் ஊற்றும் அன்னியோன்னிய நெருக்கமும் அதிகமில்லை. அல்லது இருவரிடத்தும் அவரவர் தம் மனத்துள்ளே தானே அந்த அன்பு மறைந்திருந்து வெளியாகவில்லையோ யாதோ? இவ்வித நிலையில் இருவரும் ஒருவரையொருவர் மிக மிக விரும்பியதாகவே நெடுக நினைத்தும் நடந்தும் வருகின்றனர். ஆனால் இந்த மலரில் வாஸனை மட்டும் கமழ்வதில்லை. இதன் மத்தியிலே இருவரும் விரும்பிய ஒரு புதுமனிதர் வந்து கூடுகின்றார். அப்புதியவர் பட்டும் படாமலும் தூரவிருக்கும் இவ்விருவரையும் ஒன்றுசேர்த்து இவ்விருவரின் நட்பையும் அதிக அன்பும் இன்பும் நெருக்கமும் உடையதாசப் பரிமளப்படுத்திவிடுகிறார். ஏற்கெனவே காதலர்களாயிருப்பினும் அவ்விருவரையும் மணமக்களாக்கி ஈருலக வாழ்விலும் சம்பந்தப்படுத்த ஒரு பாதிரியார் புரோகிதர் தேவையாகிறது. வெறுமனே காதலர்களாகமட்டுமிருந்தால் பயனில்லை. கடவுள் முன்னிலையில் மணமக்களாக்கப்பட்டால்தான் பயனுண்டு. இவ்விதமே பரஸ்பரம் ஏற்கெனவே தெரிந்த அன்பர்கள் இருவரையும் அல்லது அறிமுகஸ்தர்கள் இருவரையும் இன்னும் ஆழ்ந்த அன்பராக்க புதிதாக ஒருவர் தோன்றவே, அவ்வித காலமும் பொருந்திக்கொள்ளவே இவ்விருவர் நட்பும் பலப்பட்டுவிடுகிறது. இது அநுபவித்தறிந்த சுவை.

# சம்பளம் அல்லது கூலி.



வேலைக்குப் பிரதியாகக் கொடுப்பது கூலி. கிரயம் கொடுத்துப் பொருள்களைக் கொள்ளுகிறது போல வேலையையும் விலைக்கு வாங்கிக் கொள்ளுகிறோம். அன்றன்று கொடுக்கும் வேலையின் விலைக்குக் கூலி என்றும், மாதாமாதம் கொடுக்கும் மொத்த வேலையின் விலைக்குச் சம்பளம் என்றும் பெயர். பொருள்களின் விலைகள் காலாகாலத்துக்குத் தக்கபடி நயமாகவும் நஷ்டமாகவும் இருக்கின்றனவே, அதுபோலேதான் வேலையின் கூலியுமாகும். ஒரு வர்த்தகனுக்கு ஒரு வேலைக்காரன் தேவையாயிருக்க, ஆறு வேலைக்காரர் வேலைக்காகத் திரிந்து கொண்டிருந்தால், ஒவ்வொருவனும் போட்டி போட்டுக்கொண்டு வருவானுகையால் கூலி குறைந்து போகும்; அப்படியின்றி ஆறுவேலைக்காரர்கள் தேவையிருக்க இரண்டே வேலைக்காரர் அகப்படுவதாயிருந்தால், அப்பொழுது கூலி உயரும்.

ஃ

பதார்த்தங்களின்-குறைந்த-அதிக விலைகளுக்கும், வேலையின் கூலிக்கும் நேரான சம்பந்தம் கொஞ்சமுமில்லை. பதார்த்த நய நஷ்டத்தினால் வேலையின் கூலி நிர்ணயமாகிறதில்லை. வேலை யென்றும் பொருளின் இருப்பு இவ்வளவு, செலவு இவ்வளவு என்பதின் பேரில்தான் கூலி தீர்மானமாகிறது. தேக சக்தியைவிட மனோ சக்தி எப்படிப் பெரியதோ, அதே விதமாக, தேக உழைப்புக்குக் கொடுக்குங் கூலியைவிட, மனோ உழைப்புக்காரருக்குக் கொடுக்குங் கூலி அதிகம். தேக உழைப்பு இருந்த இடத்தில் மட்டும் வேலை செய்ய, மனோ உழைப்போ எவ்வளவு தூரமானாலும் சென்று வேலை செய்யும். ஒரு வக்கீல் ஒரு மணி நேரம் பேச இரண்டாயிரம் ரூபாய் வாங்குகிறார். இது மனோ உழைப்பின் விலை. ஒருதின முழுதும் தேக உழைப்பால் கஷ்டப்படுவோனுக்கு எட்டணாதான் கூலி. எஜமானன் அதிகமாக சம்பாதித்துக் கொண்டு தன் கீழ்வேலை செய்வோரைச் சொற்ப கூலி தந்து வஞ்சிப்பானாயின் அவன் விருத்தி சீக்கிரம் கெட்டு விடுகிறதென்பது அநுபவம்.

ஃ

கூலியில் தார தம்மியங்கள் ஏற்பட்டிருப்பதற்குப் பல காரணங்களுண்டு. நியாயமாய்ப் பார்த்தால் வேலையின் சுலபத்திற்கும் கஷ்டத்திற்கும் சுத்தத்திற்கும் கௌரவத்திற்கும் அகௌரவத்திற்கும் ஏற்றபடி கூலி அமையவேண்டும். பொன் வெள்ளி முதலிய மேலான உலோகங்களைக் கையாடுகிற தட்டார் முதலான நகை வேலைக்காரர்கள் நம்பிக்கையுள்ளவர்களாயிருக்க வேண்டியது அவசிய மாதலாலும், அது யுக்தி சாத்தியமான வேலையாதலாலும் அவர்களுடைய கூலி அதிகமா யிருக்கின்றது.

---

நன்மையுஞ் செல்வமு நாளு நல்குமே
தின்மையும் பாவமுஞ் சிதைந்து தேயுமே
சென்மமு மரணமு மின்றித் தீருமே
இம்மையே ராமவென் றிரண்டெழுத்தினால்.

நம்முடைய சரீர சௌக்கியத்தை வைத்தியனிடத்தில் ஒப்புவிக்கிறோம். நம்முடைய ஆஸ்தியையும் நமது ஜெயம்—அபஜெயம் இரண்டையும், கௌரவத்தையுங் கூட வக்கீலிடத்தில் விட்டு விடுகிறோம். மிக்க அபாயமான தொழிலாகிய பத்திரிகைத் தொழிலை ஒரு பத்திராசிரியரிடத்தில் அப்பத்திரிகையின் சொந்தக்காரர்கள் முழுப் பொறுப்பையும் நம்பி ஒப்புக் கொடுத்து விடுகிறார்கள். இப்படிப் பட்ட அபாரமான பெரிய நம்பிக்கைகள் வைப்பதற்கு அற்ப மனிதர் கூடாது. தகுந்த கண்ணிய முள்ளவர்களா யிருக்கவேண்டும். அவ்வளவு பெரிய காரியங்களைச் செய்வதற்கான அந்தஸ்தும் கல்வியும் நெடுநாளைய அனுபவமும் அவர்களுக்கு இருக்கும்படியாயும், அவர்களுக்குக் கொடுக்கும் கூலி அல்லது சம்பளம் அவர்களை உலகம் மதித்து உயர்வாகக் கௌரவிக்கும்படியானதாக இருக்கும்படியாயும் அதற்குத்தகுந்த விதமாய் பிரதிபிரயோஜனம் அதிகமான தொகை மதிப்புள்ளதாக இருக்கும்படிக் கொடுக்க வேண்டும். அந்தத் தொகை மதிப்புக்கு ஆயிரம் பங்கு அதிகமாகவே அவர்கள் வேலை செய்வார்கள் என்பதும் திண்ணம்.

ஃ

மனோ உழைப்புக் கூலியாள் சொற்ப நேர வேலைக்கு எவ்வளவோ சம்பாதிக்க, மிகவும் அருவருப்பும் சிரமும் வெகு பாடுமுள்ள வேலைக்குத் தாழ்வான கூலி கிடைப்பதற்குக் காரண மென்ன? அப்படிப்பட்ட வேலைகளைச் செய்பவர்களுக்கு மனோ உழைப்பு வேலை செய்யத் தெரியாததும் தவிர, வேறொரு வேலையும் செய்து பிழைக்கத்தெரியாது; கல்வியறிவும் அதிகமிராது. அவர்களை லட்சியம் பண்ணுவோ ரில்லாததுபற்றி வேலை எப்படியாவது அகப்பட்டாற் போதுமென்று எண்ணி விடுகிறார்கள். ஆகவே, அவர்களுக்குக் கூலியும் குறைந்து போகிறது.

ஃ

எந்தக் காலத்திலும் கிடைக்கத் தக்க வேலைகள் சில உள; மற்றவைகள் அவ்வளவு நிச்சயமாய் நினைத்த பொழுது கிடைக்கமாட்டா. மூட்டை சுமக்கிறவனுக்கு வருஷம் முந்நூற்றறுபது நாளும் வேலை அகப்படுமென்கிற தைரியமுண்டு. கொல்லத்துக் காரனுக்கோ மழை நாளில் வேலை கிடையாது. மற்றக் காலங்களிலும் யாராவது வந்து கூப்பிட்டால் தான் உண்டு; இல்லாவிட்டாலில்லை. ஆகையால் அவனுக்கு அநேக நாள் வரும்படி யில்லாதிருக்கும். வேலை செய்கிற நாளில் கிடைக்கிற சம்பாத்தியத்தைக் கொண்டு சும்மாயிருக்கிற நாளைக்கும் ஈடு செய்துகொள்ள வேண்டியிருக்கிறதுபற்றி அவனுக்குக் கூலி அதிகம். இடையிடையே வேலை விட்டுப் போகிற நிமித்தம் அதிகக் கூலிகொடுக்கிறதே யல்லாமல் வேலையின் திறமைக்காகக் கொடுப்பதன்று.

ஃ

வேலை கற்கத் தொடங்கி அதில் பயிலுவதனாலேயே தேர்ச்சி உண்மையாயுண்டாகும் என்ற நிச்சயம் எல்லா வேலைகளுக்கு மில்லை; சில வேலைகளில் மட்டுந்தான் உண்டு. இருபது சிறுவர்கள் செருப்பு தைக்கிற வேலையைக் கற்கத் தொடங்கினால் அவர்கள் எல்லாரும் அந்த வேலையில் கெட்டிக்

தந்தைதாய்க்கு உட்படாத குமாரன் ஊருக்கும் உபயோகப்பட மாட்டான். மற்றவர்களுக்குப் பயன்படுவதுபோல் காட்டுவதும் ஒரு கபடவேஷம்தான். கடைசியில் தானும் விருத்தியடைவது கஷ்டம்.

காரர்களாவார்களென்று நிச்சயமாய் நம்பலாம். ஆனால், இருபது பேர் சட்ட கலாசாலையில் சேர்ந்து சட்டம் அப்பியசித்தால் அவர்களுள் ஒருவன் நியாயவாதத்தில் பூரண ஞான மடைந்து வக்கீல் வேலையை வெகு திறமையுடன் ஜீவனோபாயமாகப் பிடிப்பானேயானால் அது அதிசயமும் அபூர்வமுமேயாகும். அந்த இருபது பேர்களுக்கு வரவேண்டிய சம்பாத்தியத்தையும் ஜெயம் பெற்ற இந்த ஒருவனே அடைகிறான். பாக்கி பத்தொன்பது பேரும் பக்குவமற்றுத் தோல்வி அடைகின்றனர். ஜெயம் என்பது ஒரு நிச்சயமும் உறுதியும் அல்லாததா யிருந்தால் அப்பொழுது கூலி உயருமென்பதற்கு இதுவே திருஷ்டாந்தம்.

ஃ

கூலியாக இருப்பவன் என்றைக்கும் தான் கூலியாகவே இருந்து சாக வேண்டுமென்று நினைத்து விடில் அவன் ஒருபோதும் முன்னுக்கு வர மாட்டான். அவனுக்கு விருத்தியு மில்லை. இப்போது கூலியாக இருந்தாலும், இனிமேல் வருங்காலத்தில் உயர்ந்த நிலையை யடையலாமென்று நினைத்து ஆவல்கொண்டு பெரிய எண்ணங்களை வளர்த்து நாள்தோறும் கல்வியிலும், வேலைத் திறமையிலும் தன்னை அதிகமாகப் பழக்கிக்கொண்டே போய் ஓயாமல் உழைக்கவேண்டும். அச்சுக்கோர்ப்பினனாய்க் கூலி வேலை செய்தவன் பெரிய அச்சுக்கூடத்திற்கும் பிறகு எஜமானனான சம்பவங்களுமுண்டு. பெரிய பதவிகளை வகித்தோரிற் பலர் அற்பத்திலும் அற்ப கூலிகளாகவே இருந்திருக்கிறார்கள். எதற்கும் சலியாத முயற்சியும் சுறுசுறுப்பும், சோம்பலற்ற தன்மையும், விவேகத்துடன் கூடிய பெரிய புத்தியும் வேண்டும். எப்பொழுதாவது நற்காலத்தையும் பெரிய உன்னத நிலையையும் அடையக் கூடுமென்று ஒவ்வொரு கூலியும் நம்பி, எஜமானனுக்காக உழைக்காமல், கடவுளுக்கு முன்பு தான் பரிசுத்தனாயிருந்து உண்மையான உழைப்பு உழைத்தால் எப்போதாவது ஒரு நாள் மேன்மை யடையலா மென்பது நிச்சயம்.



## மோசக் கருத்து நிறைவேறிற்று?

சிலர் தங்களை மகா சாமர்த்தியசாலிகளாக நினைத்துக்கொண்டு கொக்கரிக்கின்றார்கள். தங்களுக்கு வேண்டியவனாக இருந்தவனையும், தங்களை நம்பி நின்றவனையும் நண்பனையும் ஆபத்தில் சிக்கவைத்து தாங்கள் லாபம் அடையப் பார்க்கிறார்கள். இவர்கள் கருத்து அப்போது நிறைவேறுவதுபோல் தோற்றினும், அப்பால் இவர்களால் விபத்துக்காளானவர்கள் தெய்வ கிருபையால் தப்பிவிடுகிறார்கள். கடைசியில் நாசமடைவது இவர்கள்தான். என்றைக்கு யோக்கியதை தவறி மோசம் செய்ய நினைவு உண்டாயிற்றோ அன்றுமுதல் அழிவுகாலம்தான். மோசம் செய்து நெடுநாள் வாழ்ந்தவர் எவருமில்லை.

# வாக்குத் திறமை.



வாக்குக்கு அதிகப் பயனில்லையென்றும், அந்த வாக்கை உபயோகிக்கிற பத்திராசிரியர், உபந்யாஸகர், நூலாசிரியர் முதலாயினோர் செய்யும் வேலைகளால் உலகத்துக்கு விளையும் நன்மையைக் காட்டிலும், உடனே செல்வத்தைத் திரட்டக் கூடிய முயற்சியாளரான வியாபாரிகள், கைத்தொழில் அதிபதிகள் முதலியோரே அதிக நன்மையை விளைவிக்கிறார்களென்றும் ஒரு சாரார் நினைக்கிறார்கள். பத்திராசிரியர் முதலாயினோர் பச்சைச் சோம்பேறிகளன்றி வேறில்லையென்றும், இவர்கள் "சாய்வு நாற்காலி ராஜதந்திரிகள்" என்றும், அதாவது ராஜாங்க நிருவாகத்தில் எவ்விதமான பொறுப்புமில்லாமல் வெறுமனே பொழுதுபோக்காக ராஜரீக விஷயங்களைக் கவனிப்போர் என்றும் ஒரு சிலாது அபிப்பிராயம். இது உண்மைதானா என்று ஒரு சிறிது ஆராய்வோம்.

ஃ

வேதகாலத்து ரிஷிகள் முதலாக, நேற்றைய ஸ்வாமி விவேகாநந்தர் வரை கைம்மாறுவேண்டாமல் உலகத்திற்கு உழைத்தவர்களாலேயே உலகம் அதிக நன்மையை அடைந்திருக்கிறதென்பது—மனிதசரித்திர ஆராய்ச்சியில் மிகத் தெளிவாக விளங்குவதோர் பொருளன்றோ? ஓயாது வாக்கை உபயோகித்துச் செல்லும் பத்திராசிரியர், நூலாசிரியர் போன்றோருக்குத் தங்களின் கடமையாகிய கர்மத்தில் இருக்கும் சிரத்தையில் நூறிலொரு பங்கேனும் அவர்களைச் சுற்றி நிற்போருக்கு உண்டாகியிருக்குமாயின், நம்முடைய பூலோகம் இதற்குள் எத்தனையோ அதிக மேன்மையை யடைந்திருக்கும். மேற்சொன்ன வாக்கு அமிஸம் நிறைந்த அறிவுத் தொழிலாளரின் காரியங்கள் ஒருபோதும் வீணாகிவிடாது. அவர்களின் செயல் விதையைப் பூமியிலிட்டு மண்ணைக்கொண்டு மூடியது போலாகும். இந்த மண்ணால் மூடிய செயலின் பலன் பிற்காலத்தில் அது பெரிய மரமாகும்போது தெரியும். வாக்குக்குள்ள சக்தி எந்தத் தொழிலுக்கும் கிடையாது; எந்த வியாபாரத்துக்கும் கிடையாது; எந்த யந்திரத்துக்கும் கிடையாது. கடைசிவரை உலகம் வாக்கினால்தான் ஆளப்படுகிறது. வாக்கு நேரே ஸரஸ்வதியின் பிரஸாதம். ஸரஸ்வதியே சிருஷ்டி சக்தி. எனவே, வாக்குக்குப் புதிதான ஸம்பிரதாயங்களையும், நூதனமுறைகளையும் படைக்குந் திறமையுண்டென்று நம்முன்னோர் கண்டுபிடித்திருந்தார்கள். ஒரு குடும்பத்தையோ, ஒரு கிராமத்தையோ, ஒரு ராஜ்யத்தையோ எப்படி வேண்டுமானாலும் செய்யவல்ல சக்தி வாக்குக்கு உண்டு.

ஃ

ஆசிரியர்கள்—அதாவது வாக்கை உபயோகிப்போர்களின் மூலமாகத்தான் உலகத்தில் ஒரு சுறுசுறுப்பு

---

சமயம் பார்த்து எய்த்து இரவலில் புஸ்தகம் பெற்றுச் சென்ற பாவிகள் பிறகு திரும்பிக்கொண்டு வந்து தருவதுமில்லை. அவர்கள் வீடுதேடிச் செல்லினும் அகப்படுவதில்லை. இது மிக்க அநியாயச் செய்கையாகும்.

தொடங்கிற்று. ஸ்வாமி விவேகாநந்தராலே—அவர் வாக்காலே இந்தியா முழுமைக்கும் தன் மதிப்பு உண்டாயிற்று. வாக்கு வன்மையால் இயற்கையின் சாதாரண விதிகளை மாற்றக் கூடிய மந்திரசக்தி ஏற்படுகிறதென்று நம்முன்னோர் கருதிச் சில குறிப்பான ஒலிகளை மீட்டும் மீட்டும் உச்சரிப்பதனால் அமானுஷ்யமான காரியங்களையும் நிறைவேற்றலாமென்று நம்பினார்கள்; இன்றைக்கும் நம்பி வாக்கின் ஒலிசக்தியாகிய மந்திரங்களை உச்சரித்து வருகிறார்கள். வாக்கின் வலிமையால் எதையும் செய்யலாமென்பதில் ஸந்தேஹமேயில்லை. ஒரு கற்பரசியினுடைய வாக்குக்குள்ள மகிமை சொல்ல முடியுமோ?

ஃ

மேலும், மேற்கூறிய பத்திராசிரியர், நூலாசிரியர் முதலிய அறிவுத் தொழிலாளர்களில் பெருந்தன்மையுடையோர் அனைவரும் தங்களின் வாக்குத்திறமையை எப்போதும் உண்மையின் — தர்மத்தின் சார்பிலேயே பயன்படுத்த முயலுகிறார்கள். உண்மையின் சக்திக்கு எல்லையே கிடையாது. உண்மையின் பலம் கடவுளுடைய பலம். எனவே, வாக்கை உபயோகிக்கும் அறிவுத்தொழிலாளர்களை ஆதரியாமல் இகழ்ச்சிசெய்வோர் தமது ஈனமான தன்மையையே வெளியிடுவோராவர். சூரியன் மேகத்தினிடையே மறைந்து கிடக்கும் சொற்ப நேரத்திலே, அங்கொரு விட்டிற்பூச்சி தன் வாலொளியைக் கண்டு வியந்து சூர்யனொளியை நகைப்பது போலவேதான் இருக்கும் இந்த இகழ்வோரின் நகையாடல். உலகமே வாக்கின் மயமாகும். வாக்தேவி வாழ்க.

## பகைத்த நண்பன் மறுபடியும் கூடாது.

முதலில் நட்பாக இருந்து நம்பவைத்துப் பிறகு நம்பியதற்கு நடுச்சந்தியில் இழுத்துவிட்டு அலங்கோலமாக்கிய பாவி, மறுபடியும் உன்னிடம் நெருங்கிப் பழய அன்பு குலாவ வருவானாகில் ஒருபோதும் அவனைச் சேர்க்காதே. ஒருமுறை வஞ்சனையில் பழகிய மனம் பிறகு என்றைக்கும் வஞ்சனையாகத்தான் நடக்கும். ஒருதரம் ஏமாற்றியவனும், ஒருதரம் சாக்குபோக்கு சொன்னவனும், ஒருதரம் கழுத்து அறுத்தவனும், ஒருதரம் திருடக் கையிட்டவனும் பிறகு திருந்துதல் என்பதே கிடையாது. ஒருதரம் பகைத்துக் கெடுதி செய்த பாவி மறபடியும் நெருங்கி வருவது யதார்த்தமாகவல்ல—கபட மனத்தோடேதான். ஆகவே, பழய பகைவனிடம் மயங்காமல் எச்சரிக்கையாயிரு.

ஒரு அல்ப மனிதனும் சில சமயத்திற்கு உதவுவான். அவன் தயவை நாடி இதற்குமுன் அலைந்தும் இருப்போம். இனியும் அவனிடம் போய் அலையவும் வரும். ஆதலின், எவரையும் அலக்ஷியம் செய்து விடக்கூடாது.

# தமிழ்மொழி



நம் தமிழோ மிகவும் முற்காலத்தது. வரையறைக்கு உட்படாதது. எக்காலத்தில் முதலில் உண்டானதென்று திட்டமாய்க்கூற ஒருவராலும் இயலாது. போலியாய்த் திட்டம் கூறுவோரும் அவரவாது உத்தேசமெனவே கூறியிருக்கின்றார்கள். தென்தேசத்தில் அகத்திய முனிவர் செல்வதற்கு முன்னரே தமிழ் இருந்ததென்றும், முனிவர் தமிழ் மொழிக்கு முதல்வர் அல்லர் என்றும் வெளியாகின்றது. அகத்திய முனிவர் தமது இலக்கண நூலால் ஒருவாறு தமிழைச் சீர்ப்படுத்தினவரென்று கொள்ளக் கூடுமேயன்றி அவரே இத்தமிழுக்கு முதல்வர் எனக் கொள்ளல் ஒருவாற்றானும் சாலாது. இன்னும் இலக்கியம் கண்டதற்கு இலக்கணமாதலான் முனிவர் இலக்கணத்துக்கு முன்னரும் இலக்கியம் இருந்திருத்தல் வேண்டும். "அகத்தியம்" பல சூத்திரங்களால் எண்ணக் கூடியவண்ணம் அகவற்பாக்களால் இயற்றியிருப்பதாலும், யாப்பின் இலக்கணங்களும், அமைக்கப்பட்டிருப்பதானும், கவியொன்றும் முன்னிராயல் அதன் பெருக்கும் இலக்கணமும் அமைத்திருத்தல் கூடாததாலும், முனிவர் இலக்கணத்துக்கு முன்னரும் கவி இலக்கியங்கள் இருந்தனவாகவே ஊகித்தல் தவருகாது. ஆதலால் முனிவராலே "நெடுங்கணக்கு" அதாவது "அரிச்சுவடி" ஏற்படுத்தப்பட்டதென்ற கொள்கை தவறென்றல் கூறாதேயமையும். தமிழைக் கடவுள் நேராய் அருளினர் என்பதை ஆராயும் வேளையில் இயற்கையில் உண்டானதெனவே கொள்ளலாம். இயற்கையைக் கடவுளெனக் கூறல் இயற்கையே. ஃ

அகத்தியர் இயற்றிய அகத்தியத்தைப்பற்றி ஒரு கதை உலாவுகின்றது. அகத்தியனார் மாணக்கரான தொல்காப்பியர் அவ்வகத்தியத்தைச் சபித்தனரென்றும், அதனாலே அவ்வகத்தியம் தலையெடாதொழிந்ததென்பதுமே. அக்கதை உரையாசிரியர் ஒருவரும் சொல்வதாய் எமக்குப் புலப்படவில்லை. அங்ஙனமே கூறியிருக்கினும் 'சாபமிட்டார்' என்பதால், அகத்தியம் மிகவும் பெரிய நூலென்றும், அதில் அடங்கியவையனைத்தும் தொல்காப்பியத்தில் உளவென்றும், அவ்வகத்தியத்திற்குச் சரியான சுருக்கம் தொல்காப்பியமென்றும், ஆன்றோர் இவை கருதித் தொல்காப்பியத்தையே கற்றனரென்றும், இக்காரணங்களால் அங்ஙனம் ஒழித்தமை தொல்காப்பியர் அகத்தியத்துக்குச் சாபம் இட்டதுபோலுமென்றும் ஆகிய இவையே விளங்குகின்றன. ஃ

முதற் சங்கம் இருந்த தென்மதுரையும், இடைச்சங்கம் இருந்த கபாடபுரமும் கடல் கொண்டொழிந்தன போலும்! அந்தோ! யாம் யாது

---

நமது மனம் விரும்புவர்களை எதிர்பார்த்து நிற்கையில், எவரெவரோ உள்நுழைந்தும், வெளியில் உலாவித்தம் நிழலைக் காட்டியும், நாம் எதிர்பார்த்தவர்கள் தான் வந்து விட்டனரோவென்று நம்மை எட்டிப் பார்க்கும்படி செய்து ஸஞ்சலத்திற்குள்ளாக்குகின்றனர்.

கூறுவம்? தமிழ் மொழிக்குக் கேடு முன்னரே உற்றது. முதற் சங்கத்தும் இடைச் சங்கத்தும் இருந்து பாடினோர் எண்ணுயிரத்து நூற்று நாற்பத்தொன்பதின்மர். ஆதலாற் குறைந்திடினும் ஒன்பதனுயிரம் நூல்களுக்குக் குறைவுறாது. அந்நூல்களெல்லாம் இக்காலத்தமிருக்குமாயின் என்னென்ன பயன் அடைவம், என்னென்ன தெரிவோம். "கடந்த சொல்லிற் பயனில்லை."

ஃ

பிற்காலத்தில் ஜயினர் தலைப்பட்டு அநேக நூல்களை இயற்றினர். இங்ஙனம் முயன்றவர்க்கும் அக்காலத்தில் இருந்த அரசரே தகுந்த உதவி புரிந்து வந்தனர். அரிய பெரிய நூல்கள் இந்த ஜயினர்களால் இயற்றப்பட்டன. சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி ஆகிய பஞ்சகாவியங்களும், சூடாமணி, நன்னூல் முதலிய நூல்களுமாகிய யாவும் அவர் வழி நூல்களே. இந்த ஜயினரெல்லாம் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனர் காலம் வரையில் இருந்து, பின்னர் மதவேறுபாட்டால் ஒழிவுற்றனர். கடைச்சங்கக் காலத்திலே ஜயின மதம் நிலவியதெனவும், ஜயினரின் நூல் பல அவ்வரங்கேறியவெனவும் உரையாசிரியர்கள் எழுதியவற்றானும், பதினெண் கீழ் கணக்கில் ஜயினர் செய்த நாலடி நான்மணி முதலியவை சேருதலானும், இன்னும் திருவள்ளுவநாயனர் மதம் ஜயினமன்றோ என வாதிப்பதானும் புலப்படுகின்றன. இவற்றினை முற்றும் விவரிக்கிற் பெருகும். இனி, ஜயினர், உரையாசிரியர், இவர்கட்குப் பின்னர்க் கச்சியப்பமுனிவர், கல்வியிற் பெரிய கம்பர், புகழேந்தி, ஒட்டக்கூத்தர், வில்லிபுத்தூரார் முதலாயினோர் கார்த்திகைப் பிறை போன்றுற்றனர். இவரனைவரும் உரையாசிரியர் காலத்திற்குப் பின்னுற்றவரேஎன்றல், அவ்வுரையாசிரியர் தாம் காட்டும் மேற்கோள்கள் இவர்கள் நூலில் இலவாதலின் முடியும்.

ஃ

தமிழ் நாட்டரசர் சபைக் காலத்தின் தமிழ் நிலையை ஒருவாறு தெரிவிப்போம். உக்கிரவழுதியைத் தொள்ளாயிரம் வருடத்தின் முன் முஸ்லிம் அரசினர் விலங்கிட்டுச் சிறைப்படுத்த அதனுட் பாண்டியர் அரசு ஒழிந்தது. ஒழியவே தமிழ் ஓங்கலும் நீங்கினது. நீங்கவே பலரும் பயிறல் நீங்கினர். சேர, சோழ, பாண்டியரென மூவர் அரசு புரிந்திடினும் தமிழின் மகிமையறிந்து அதன் பயனை நுகர்வான் வேண்டித் தகுந்த வண்ணம் முயன்று சங்கங்கூட்டி முடிவில் தாமும் ஒரு அங்கத்தினராய் இருந்து பயிறலும் பயிற்றலும் பாண்டிய அரசரே வகித்திருந்தனர். பாண்டியர் குலம் மாற்றரசரால் முற்றவும் தமிழும் முற்றினது. முற்றினதென்னில் முதிர்ந்ததன்று; முடிந்ததே.

தன் மகனுய அம்பிகாபதியைக் கொல்வித்த அரசன் மகன், மதயானைக்கு அஞ்சி அருகில் நின்றதால் வந்து அடைந்தவனை, மதயானைக் கஞ்சிக் கவியானையிடம் வருகின்றையாவெனக் கூறி எழுத்தாணியாற் குத்திய கம்பரை அரசன் வெகுண்டு வினவ, அதற்கவர் ஓர் பாடல் பாட, "ஆ, இன்னும் ஓர் குழந்தை உளதேல் அதனுலும் இன்னும் ஓர் பாடல் கேட்கலாம்" என மதலையில்லாததையே நொந்தான் எனவும் கேட்டிருக்கின்றோம். இந்நாளிலோ தமிழன் செல்வாக்கெல்லாம் செல்வாக்காய் ஒழிந்தது!

---

# நமது வாழ்வில் சந்தோஷம்.



சிறுவர்களிடத்தில் எழுகின்ற சந்தோஷ எண்ணங்களை வளர்ப்பதே தக்கது அழிப்பதோ மிகவும் பாபகரமான செய்கையாகும்.

வருத்தமும், சினமும் பொருந்திய முகமே சிறுவர் தம் மனதில் படக்கூடாது.

சந்தோஷ மிகுந்தவர்கள் குதூகலமாயிருப்பதோடுகூட நெடுநாள் வாழவும், பிறருக்கு அனேக விதங்களில் உதவவும் ஜெயம் பெறுபவர்களாகவும் இருக்கிறார்கள்.

உன் வேலை எதுவாயினும் சரி, எங்கேயும் சந்தோஷம் காணமுயல்.

நீ ஒரு நல்ல சிரிப்பு தினமும் அடைய முயன்றால் உன் வேலை நீ நினைக்கிறபடி கஷ்டமாக இருக்காது.

குழந்தை ஆயுள் நாளே சந்தோஷ சாகரத்தில் உழலும் நான்கன் என வளர்க்கப்பட்டால் நம் நாகரீகத்தை எளிதில் உயர்த்த முடியும்.

புன்னகை ததும்பும் வதனம் கொண்டுள்ளோனும், பக்ஷமே இருப்பிடமாய்த் தோன்றுவோனும் தனக்குத் தெரியாதோரிடம் பேசச் செல்லுகையில் பிறர் உதவி விரும்பவேண்டுவதில்லை. புன்னகை முகமுள்ள அவனை எல்லோரும் வரவேற்கின்றனர்.

புன்னகைக்கு இருப்பிடமாயிருப்போனின் சகவாசம் ஒருவனுக்குக் கிடைக்கப் பெற்றால், அவன் சந்தோஷப் பணத்தில் நாளுக்கு நாள் செல்வனாய் பிறருக்கும் அச்செல்வத்தை ஊட்டும் வல்லமை பொருந்தியவனாகிறான்.

எப்போதும் பிறரைக்குற்றம் கண்டுபிடித்துக்கொண்டும் திட்டிக்கொண்டும் இருக்கும் பெண்ணுக்கு, புன்னகை ததும்பும் வதனம் பொருந்தியவளும்-நற்குணம் பொருந்தியவளும்-பிறரை வசீகரப்படுத்துபவளுமான பெண்ணின் பத்திலொரு பாக சக்தி கூடக் கிடையாது.

ஒரு கெட்டபெண்ணாவது, சிறுமியாவது தன் வீட்டிற்குப் பழுதான சொல்லைக்கொண்டு வருவதுடன் நில்லாமல் சுற்றம் பக்கத்தாருக்கெல்லாம் இழி பெயர் சம்பாதித்துக் கொடுக்கிறாள்.

இவ்வுலகில் மிகவும் பரிதாபகாமான மனிதன் எவன் எனில் தன்னிடம் அடக்க முடியாத கெட்ட சுபாவங்களைப் பொருந்தியவனே யாகும்.

ஒரு வாலிபன் ஒரு கெட்ட சிறுமியை விவாகம் செய்தால் அவனுக்

---

"அலாவுதீன் அற்புத விளக்கு" தங்கட்குக் கிடைக்க வேண்டுமென்று எவ்வளவோ பேர் எத்துணையோ முயற்சியும் பாடும் படுகின்றனர். ஆயினும் பல்லோர் பரமபதசோபனபடத்திலுள்ள பாம்புகளின் வாயிற்சிக்கி ஏமாறுகின்றனர். எதற்கும் பின்னடையாது முன்னேறினும் அப்படத்திலுள்ள பெரிய பாம்புக்குத் தப்புதல் என்பது அநேகமாய் முடியாததாய் விடுகிறது.

குக்கேடு நிச்சயம். தனக்கு எத்தனை தீய விபத்து சம்பாதித்தா னென்பது சீக்கிரமே தெரியும்.

இனிமையான சொற்களும், அழகுள்ள வதனமும் ஒரு கெட்ட கோபக் காரியிடமிருந்து பறந்தோடிவிடும்.

சுயநலம் கருதுவது தனக்கு அழிவை சம்பாதிப்பதாகும்.

ஒருவருக்கும் ஒரு உதவியும் இயற்றாத மனிதனும், தன்னிடத்தில் வந்து யாசிக்கையில் தன் இரும்புப் பெட்டியைச் சரியாக பூட்டுவோனும், தன் காரியமே தனக்கு என்போனும், தன் அண்டை வீட்டுக்காரனுக்கும் ஒரு சொல்கூட வாயிலிருந்து உதிர்க் காதவனும், தனக்கே பிறர் கொடுக்க வேண்டுமென்றும் தான் ஒன்றும் பிறருக்கு உதவக்கூடா தென்றும் இருப்போனும் — நாளாவர்த்தியில் ரோஜாமொட்டு வாடி வதங்கிப் பிறருக்கு உதவாதது போன்று ஆகி, பிறரால் அல்பனென்றும் பிறருக்கு உதவாதவனென்றும் அவமதிக்கப்படுவான்.

துக்க சாகரத்தில் அமிழ்ந்திருக்கும் எத்தனையோ பேர்கள் பிறரிடமிருந்து பெற்ற ஒரு புன்னகையினுல் சந்தோஷ மடைந்திருக்கிறார்கள்.

மனதில் பரிசுத்தம் பொருந்தியவர்களே கடவுளையும் நல்லதையும் பார்க்க முடியும். மனதில் களங்கமற்றவனும், பாபத்திலிருந்து விலகியவனுமே உண்மைத் தத்துவங்களையும் அவைகளின் அழகையும் காண முடியும்.

ஒவ்வொரு பாப எண்ணமும், ஒவ்வொரு கெட்ட எண்ணமும், ஒவ்வொரு கெட்ட செய்கையும் கண்களில் ஒரு புகைபோல் படர்ந்து கெடுக்கிறது. நாம் அப்புகைகளை கண்களிலிருந்து நல்ல எண்ணங்களாலும், நல் வாழ்வாலும் அகற்றி, கடவுள் எப்படி உலகத்தைப் படைத்தாரோ அவ்வாறு எங்கும் பரிசுத்தமானதையே கண்டு, மனிதன் எவ்வாறு உலகை விரும்பக் கடவுளால் சிருஷ்டிக்கப்பட்டானே அவ்வாறே தூயதன்மையில் உலகைக் காண வேண்டும்.

உண்மை என்னும் தத்துவத்தை அடையுமுன் நாம் நம்மில் எழும் சுய நலத்தையும், தனக்கு நன்மை தேடிக் கொள்வதையும், அயோக்யத்தனத்தையும், பிறர் சொத்தினை அனுபவிக்க எண்ணும் அல்ப குணத்தையும், பிறர் செய்கைகளில் குறுக்காக நிற்பதையும் ஒழிக்கவேண்டும்.

இப்பூவுலகே ஒரு எதிரொலி கொடுக்கும் பெரிய அறை. நாம் செய்யும் குற்றங்களையும் அநியாயங்களையும் நமக்கே திருப்பி ஒலிக்கிறது. அதே எதிரொலியான கண்ணாடி நாம் காண்பிக்கும் முகத்தைத் திருப்பிக் காட்டுகிறது.

நாம் துக்ககரமாகவும் மந்தமாகவும் இருந்தால் இப்பூலோகம் நமக்குத் துன்பத்தையும், நம்பிக்கை இல்லாதவைகளையும் நமக்கு திருப்பிக்கொடுக்கும். ஆனுல், நாம் புன்னகை ததும்பும் முகத்துடன் சந்தோஷமாய் மன சமாதானமாய் இருந்தால் அவ்வாறே நமக்கு உலகமும் தோன்றும்.

---

ஒருவரையே சதமென்று நினைத்தவன் அந்த ஒருவருக்குப் பிறகு பல கஷ்டங்களை யடைகிறுன். அந்த ஒருவர் காட்டிய அன்பைப் பிறகு அவன் உலகில் வேறெங்குமே காண்பதற்கில்லாமலும் போய் விடுகிறது. ஒவ்வொன்றும் ஒவ்வொருவிதமான தனித்த ருசி!

# வட கோடி தாழ்ந்ததும் தென்கோடி உயர்ந்ததும்.

"பொருப்பிலே பிறந்து, தென்னன் புகழிலே கிடந்து, சங்கத்
திருப்பிலே இருந்து, வைகை யேட்டிலே தவழ்ந்த பேதை
நெருப்பிலே நின்று கற்றோர் நினைவிலே நடந்தோர் என
மருப்பிலே பயின்ற பாவை மருங்கிலே வளருகின்றான்."



இறைவனுடைய சிருஷ்டியில் அடங்கிய அநேக கோடி ஜீவராசிகளுள் முதன்மை பற்றிய மானிட சரீரத்தை உடையவர்களும் ஆறறிவுடைடவர் களுமாகிய மக்கள் தம் மனத்தில் தோன்றும் எண்ணங்களைப் பிறருக்குத் தெரியப் படுத்தவும் பிறருடைய கருத்தைத் தாம் அறிந்து கொள்ளவும் உபகாரணமாக இருக்கும் சங்கேத சப்தமே பாஷை எனப்படும். இவ்விதமான பற்பல பாஷைகள் இந்நில உலகத்தில் பற்பல ஜாதியார்களால் பேசப்பட்டு வருகின்றன. இவைகளில் வேதாகமங்களையும் தர்ம சாஸ்திரத்தையும் சரியை கரியையாதி படிகளுக்கு மேல் தாண்ட முடியாமல் தவிக்கும் மாந்தர்களுக்கு கடவுளுடைய பேரற்புதச் செயல்களை நன்கு தெரியப்படுத்தும் அநேக புராணங்களையும் முற்று முடிந்த இலக்கணத்தையும் உடைய தமிழ் பாஷையும் ஒன்று.

இந்தத் தமிழ் பாஷையைப் பற்றிய சுருக்கமான வரலாற்றை மேலே சொல்லப்பட்டிருக்கும் வில்லிபுத்தாரின் பாடலால் தெரிந்து கொள்ளுகின்றோமாயினும் அப்பாடலின் உட்கருத்தை அறியவேண்டுவது முக்கியமாகலான் இதை ஈண்டு வரையலாயினோம். ஃ

மேலே சொல்லப் பட்டிருக்கும் பாடலின் முதல் இரண்டு பதங்களையும்-அதாவது, பொருப்பிலே பிறந்து-என்பதை எடுத்துக்கொண்டு கருத்தை ஆராய்வோமாயின், பொதிய மலையில் பிறந்து என்பது பொருளாகும். பொதிய மலையில் பிறந்தது என்றால் அம்மலையில் தவம் செய்த, இன்னமும் தவம் செய்வதாகவே சொல்லப்பட்டு வருகிற—அகஸ்தியரிடத்தில் பிறந்தது என்பது கருத்து. தமிழ் அகஸ்தியரிடத்தில் பிறந்தது யாங்ஙனமெனின், ஹமவகிரியில் நடந்த பார்வதி தேவியாரின் விவாகச் சிறப்பினைக் கண்ணுேக்க எண்ணங்கொண்டு முப்பத்து மூன்று கோடி தேவதைகளும் நாற்பத்து எண்ணுயிரம் ரிஷீஸ்வரர்களும் தம்தம் பரிவாரங்களுடன் அம்மலையை அடைந்ததாகவும், அக்கால ஏராளமான ஜனத்திரள் ஒரே பக்கத்தில் வந்து சேர்ந்தமையால் வடகோடி தாழ்ந்தும் தென்சோடி உயர்ந்தும் போனதாகவும், இன்னும் கொஞ்சநேரம் அவ்விதமே இருக்குமாயின் பூமி எங்கு தலைகீழாகக் கவிழ்ந்து விடுமோவென்று பயமடைந்ததேவதைகள் சிவபிரானை வேண்ட, அவர் அங்கு சென்றிருந்த அகஸ்திய முனிவரை அழைத்து தெக்ஷிணம் போகும்படி கட்டளை இட்டாரெனவும், அப்போது அகஸ்தியர் சிவபெருமானை நோக்கி, "தென்திசையில் நாகரீக முயற்சி பெற்ற சாதியார்களாகிய திராவிடர் தமிழ் என்னும் பாஷையைப் பேசி வருகின்றார்களாகையால் எனக்கு அப்பாஷ

இலக்கணத்தைக் கற்றுக் கொடுக்க வேண்டும்'' என்று வேண்டி அவ்விதமே தமிழ் இலக்கணத்தை ஈஸ்வரன் மூலமாக அறிந்துகொண்டு தென்னாடு சென்று தமிழிற்கு முடிந்த இலக்கணம் அகஸ்தியர் செய்தா ரென்றும் நாம் கர்ண பரம்பரையாகவும் புராண வாயிலாகவும் தெரிந்து கொண்டிருக்கிறோம்.

ஃ

விவேகிகளாகிய மஹான்களால் எழுதிவைக்கப் பட்ட சாஸ்திரங்களை யாம் மறுக்க வரவில்லையாயினும், மேலே சொல்லப்பட்ட புராண ஐதிகமான கதை, பூகோள, ககோள, வான சாஸ்திர சம்பந்தமான சாஸ்திரங்களுக்கும் இயற்கைச் சட்ட திட்டத்திற்கும் நம்முடைய அனுபவத்திற்கும் இயைந்து வரவில்லை யாகலான் தாக்கிக்கொண்ட பூபாரத்தை அமிழ்த்த அகஸ்தியர் தென் தேசம் வரவில்லையென்றும், அவர் வந்ததற்கு வேறொரு முக்கியமான காரணம் இருக்கவேண்டு மென்றும் ஒருவிதமான முடிவுக்கு வரவேண்டியவர்களாகின்றோம். அக்காரணத்தைப் பின்னர் கூறுவோம்.

ஃ

ஹிமய மலையில் ஜனத்தின் அதிகமானதாகவும் அதன் காரணமாக வடகோடி தாழ்ந்ததும் தென் கோடி உயர்ந்ததும் போனதாகவுமே வைத்துக் கொள்வோம். கன்னியாகுமரியும் ஹிமயமலையும் பூமியாகிய திராசின் இரண்டு தட்டுகளா? ஒருபுறம் கொஞ்சம் பாரம் அதிகமானால் மற்றொருபுறம் தூக்கிக் கொள்ள பூமியின் தென்வட கோடிகள் கன்னியாகுமரியும் ஹிமய பர்வதமும் தானா? இக் கதையை நான்காம் வகுப்பில் படிக்கும் பையன் கேட்ட போதிலும் விடா நகை புரிவானன்றோ? எனெனில் இவ்விந்திய தேசத்தைப்போலப் பல மடங்கு விஸ்தீரணம் வாய்ந்த பூபாகமும், இங்கு உள்ளதைவிட பெரியமலை, நதி முதலியவைகளும் ஹிமயகிரியின் வட பாகத்தில் இருக்கின்றன வென்பதை அவன் அறியாமலிரான். பின்னும் எந்த சக்தியினால் சந்திர சூரிய நக்ஷத்திரங்கள் யாவும் பூமியில் பிரகாசித்துக் கொண்டும் பூமியை விட்டு விலகி ஓடிப்போய் விடாமலும் இருக்கின்றனவோ அந்த பூ ஆகர்ஷண சக்தி (Universal gravitation)யினால் பூமி தாழ்ந்தும் உயர்ந்தும் போகா வண்ணம் காக்கப் பட்டு வருகின்ற தென்பதை ஞாபகத்தில் வைக்கவேண்டும். இவ்விதமான இயற்கைச் சட்ட திட்டங்களை நாம் கூர்ந்து கவனித்தோமாயின் பூமி ஜனக் கூட்டத்தால் உயர்வதும் தாழ்வதும் அசம்பாவிதம் என்பதை எளிதில் அறிந்து கொள்ளலாம். இவ்விதமான நியாயங்களால் வடகோடி தாழ்ந்து தென் கோடி உயரவில்லை யென்றும், அதற்கென்று அகஸ்தியர் தெக்ஷிணம் செல்லவில்லை யென்றும் நிச்சயமாகக் கூறலாம்.

ஃ

அப்படியானால் அகஸ்தியர் தென் தேசம் சென்றா ரென்பதும், இங்கே இலக்கணம் செய்தார் என்பதும் வீண்கட்டுரைகள் தாமோ, எனின் அன்று அகஸ்தியர் தென்திசை வந்ததும் இலக்கணம் செய்து தமிழ் சங்கம் கூட்டியதும் உண்மையே.

ஃ

---

விழித்துக்கொண்டுள்ள குழந்தையைத் தூக்குவதைவிடத் தூங்கும் குழந்தையைத் தூக்குவது அதிக கனமாக இருக்கலாம். இவ்விதமே தூங்கு மூஞ்சியான ஒருவனுக்குச் சோறு போடுவது ஒரு பளுவாகவே தோற்றும்.

மத்திய ஆசியாவிலிருந்து இந்து தேசத்தில் வந்து குடியேறிய ஆரியர்கள் சிந்து நதிக்கரையைத்தாண்டி அங்கு வாஸம் செய்து வந்த இராக்ஷஸர் பிசாசர் முதலிய அநாகரீக ஜாதியாரைச் சண்டையில் வென்று வெகு நாட்கள் வரை வட இந்தியாவில் வசித்துவந்தனர். பிறகு நாளாக ஆக ஜனத்தொகை அதிகமானதால் பின்னும் குடியேறத் தெற்கே வந்தனர். இவ்விதம் இந்திய பர்வதத்தையும் அடைந்தனர். பின்னர் தெக்ஷிண தேசம் நல்ல செழிப்பான தேச மெனவும், என்றும் வற்றாத பல ஜீவநதிகள் அத்தேசத்தில் ஓடுகின்றன எனவும் பசுக்களுக்கு வயிறாரப் புசிக்கப் புற்கள் அதிக மெனவும் கேள்விப்பட்ட ஆரியர் தெக்ஷிணத்தை அடைய அவா மிகக் கொண்டனர். அக்காலத்தில் தென் தேசத்தில் பூர்வீக குடிகளாகிய திராவிடர் நாகரீக முதிர்ச்சி பெற்றிருப்பதையும் வட இந்தியா வாசிகளாகிய அநாகரீக மனிதர்களை வென்றதுபோல திராவிடர்களை வெல்லுவது இயலாத காரிய மென்பதையும் எளிதில் அறிந்துகொண்ட அறிவாளிகளாகிய ஆரியர், தங்களுடைய இனத்தவரில் புத்தி நுட்பம் வாய்ந்தவரும் சமஸ்கிருத பாண்டித்யம் மிகப்பெற்றவருமான அகஸ்தியரைத் திராவிடர்களிடத்திற்குத் தமிழ் அப்பியஸிக்கும் வண்ணம் அனுப்பி இருக்கவேண்டும். ஏனெனில், சண்டை செய்து திராவிடர்களை வெல்லுதற்கு ஆற்றலற்ற ஆரியர் சமாதானத்தால் அதாவது திராவிட பாஷையைக் கற்றுக்கொள்ளும் காரணம் காட்டி செழிப்பு வாய்ந்த தென் தேசத்தில் வசிக்க ஆசை மிகக் கொண்டார்கள். முதலில் அகஸ்தியர் சென்று தமிழ் பாஷாப்பியாசம் செய்து அப்பாஷையில் நிபுணராகவே சமயம் வாய்க்கும்போது உள் நுழையத்தயாராக இருந்த ஆரியரிற் சிலர் தொல் காப்பியனார் போன்றவர்கள், அகஸ்தியரிடத்தில் தமிழ் கற்கும் வியாஜத்துடன் தென் தேசம் சென்றனர். இவ்விதமே கல்வி கற்றுக்கொள்வதை ஒரு காரணமாகக் கொண்டு சில நூற்றாண்டுகளில் தென் தேச முழுவதிலும் ஆரியர் பரவி விட்டனர். இவ்வொரு காரணமே அகஸ்தியர் தென் தேசம் வந்ததற்கு முக்கிய காரணமாகக் காணப்படுகின்றது. இவ்வொரு விஷயத்தை சூசிப்பிக்கவே இவ்வியாசம் வரையலாயினோ மாகையால் இத்துடன் இதை நிறுத்துகின்றோம்.

எமது கொள்கை சரிதானா? இவ்விதமும் ஏன் கருதலாகா தென்பதும் ஒரு வினா?

---

நமக்கு அவசியமான வேலைகள் இருக்கையில், நமது நண்பர்கள் என்போர் நமது கண்ணுக்கு எதிர்படுவதேயில்லை. வேலைகள் தீர்ந்த பிறகு நம்மிடமிருந்து ஏதேனும் இலவசத்தில் பெற்றுப்போக நம்மைச் சூழ்கிறார்கள். இவர்களுக்கு ஒன்றைத் தருவதைவிட நெருப்பில் போடுவது மேல் என்று அவ்வளவு மனக் கஷ்டமாய் அந்தசமயம் நமக்குத் தோன்றுகிறது.

சண்டைசச்சரவுகளுடனாவது தன் மனைவி மக்கள் சூழ வீட்டிலிருப்பதில் ஒரு வித இன்பமே குடி கொண்டிருப்பதாய் எண்ணுகிறான். அவர்களைப் பிரிந்து தனித்து இருக்க சண்டைசச்சரவின் போது விரும்பினும், அவ்விதம் தனித்திருக்க நேர்ந்தகாலத்தில் அந்தத் தனிமையை அவன் நெஞ்சு வெறுக்கவே செய்கிறது.

# மனைவியை யனுப்ப மறுத்தல்.



வெளியூரில் உத்தியோகத்திலிருக்கும் எனது நண்பரின் மாமனுர் தன் மனைவியின் பிரசவத்திற்கு உதவிவேண்டித் தன் மகளை அழைத்துவரும்படி ஓர் அவசரக்கடிதம் எழுதினர். அதன்படி உடனே நண்பர் மனைவியை அவ்விடம் விட்டுத் திரும்பினர். கடவுளருளால் சௌக்கியமாகவே பிரசவமானதாக அவ்விடமிருந்து இவருக்குக் கடிதம் கிடைத்தது. சிலநாட்கழிந்தபின் மனைவியை அழைத்துவரும்படி நண்பர் மாமனுருக்கு பல கடிதங்கள் எழுதினர். தமது மனைவிக்கும் குழந்தைக்கும் உடம்பு பக்குவமில்லாமையால், நீடித்த நாள் கடந்தபின்பே மகளை அழைத்துவர முடியுமென்று மாமனர் பதில் கடிதம் ஒன்று மருமகனுக்கு கிடைத்தது. நண்பனுக்குத் தனித்து ஒண்டிக்கட்டையாய் மனைவியைப் பிரிந்து கிடப்பதில் கனத்த வருத்தமேற்பட்டு, ஸதா மனைவிமீது பிரியமும் நினைவும் அதிகமாகி அவளை அழைத்துவர நேரில் சென்றார். அப்பொழுது அவர் மாமனுர் வேலை நிமித்தம் ஸர்கூட்போயிருந்தார். திடீரென்று போனபடியினல் அவ்விடம் சமயல்வேலை முடிந்து தங்களையொத்த படியாப் பெண்களுடன் கூடிக்கொண்டு ஊர் வம்புப்பேசிக் களிப்பதைக் கண்டார். அவர் மாமியும் குழந்தையும் பிணியொன்றுமில்லாமல் சௌக்கியமாகவே காணப்பட்டார்கள். இவரை மனைவி எதிர்கொண்டழைக்கவில்லை. இவரே வலியப் பேசியபின் பேசினுள். நண்பர் மாமியினிடம் பேசுவதில்லை. சர்க்கூட் சென்ற மாமனுர் வந்ததே மனைவியை அழைத்துவருவது உசிதமென்று சில தினம் தங்கிவிட்டார். போஜன விஷயத்தில் நன்கு கவனிக்காவிடில் கோபித்துக்கொண்டு போய்விடுவாரென்று சிக்கனக் கமிட்டியை சிநேகித்த பெண்டாட்டி ஆத்தாள், பெரிய ஆத்தாள் அவரை ஏமாற்றப் பார்த்தாள். இங்கு இவரது வீட்டில் அன்பும் அடக்கமும் காண்பித்த அவர் மனைவி அங்கு முற்றும் முரட்டுத்தனம் செய்தாள். ஆனல் வெளிக்குப் பயந்தவள்போல பாவனைகாட்டி நடித்தாள். ஓர் புதுப் பெண்போல அபினயித்தாள். அவளால் அன்பில்லா அன்னம் அளிக்கப்பட்டது. பணிவிடை சரியில்லையென்று வெளியில் சொன்னல் அவர் மூஞ்சிக்கே சமாதானம் சொல்ல வருவதுபோல சொல்லலானுர்கள். மாமியின் அதிகாரம் தலைமீறிப் போகவே கூட இருப்பவர்களும் அவள் பக்கமாய்பேச முளைத்துக்கொண்டார்கள். பல்லை கடித்துக்கொண்டு கோபத்தை யடக்கி மாமனுர் வருகையை எதிர்ப்பார்த்திருந்தார். இவ்விடம் போஜன வேளைத் தவிர இரவில் தனியாக நித்திரைப்புரிந்து பகலில் பேபர் படிக்க பிரீ ரீடிங் ரூமுக்குப் போய்விடுவார். இவ்விதம் ஒருவாரம் கழித்தபின்பு ஓர்

---

தனக்குத் தாராத பெண்ணை நேரம் பார்த்திருந்து திடீரெனச் சென்று கெடுத்துச் சிறைக்குப்போகவும் தயாரானவர்களுமுண்டு. சிறையனுப்பத் தாய் மாமன் பின்னடைந்து அவனுக்கே கட்டித் தொலைத்ததுமுண்டு. தான் கெட்டுவிட்டபின்பு இன்னெருவரை மணக்க அப்பெண் மறுத்துவிட, அதன்மேல் தந்தை இணங்கியதுமுண்டு.

தினம் ஸர்கூட்சென்ற இவர் மாமனார் இல்லம் திரும்பினார். மாமனைக்கண்ட வுடன் மனைவியைத்தான் அழைத்துப் போவது நிச்சயமென்று உளமகிழ்ந் தார். இதற்குள் வீட்டினுள் நண்பரின் மாமியார் சீதபேதியென்று பாயைப் பரப்பிவிட்டாள். இவள் மனைவி காலில் காரீகத்தால் (முற்றும் சொஸ் தம்) பாதத்தில் வலி யெடுப்பதாக நொண்டி நடந்தாள். நல்ல நிலைமையி லிருக்கும் குழந்தைக்கு மாந்தம் என்று விளம்பரப்படுத்தினார்கள். மாசிலா மாமனார் மருமகன் வந்திருக் கும் காரணத்தையறிந்து அவ்விடத் தில் கண்ட காட்சியை முழுதும் உண்மையென்று நம்பி, இன்னும் ஓரேமாதம் பொறுத்துத் தானே அவ சியம் தன்மகளை அழைத்துவந்து விட்டுப்போவதாக வணக்கத்துடன் கேட்டுக்கொண்டார். அதற்குமேல் நண்பர் எதிர்த்துப்பேசாமல் சாந்த மாகவே விடைப்பெற்று மனத்தளர்ச் சியுடன் தன் வீடடைந்தார். இத் தகைய அகங்கார மாமிகளின் வீடென் பது மெத்த அசௌகிக்யமே என்றார். இத்துடன் தன்னுடைய பிரலா பத்தை நிறுத்தி நண்பர் மனதில் கொண்ட கீழ்கூறும் இரண்டு கேள்வி கட்கு விடை அமிர்தத்தின் மூலமாக அபிப்பிராயத்தை அறிய விரும்புகி றார். அதாவது (1) மனைவி தன் கண வன் வீடு சேர்ந்தபின்பு எக்கார ணத்தை முன்னிட்டும் பின்னால் அவளைத் தாய்வீடனுப்பாமலிருப்பது சரியா? (2) மனைவி வராவிடில் மீண் டும் அவளை அழைத்துவரப் புறப்படா மல் மனோ உறுதியுடன் காலத்தை கடத்தல் தகுதியா? A. G. L.

[மனைவி தன் தாய்வீட்டுக்குச் செல்ல விரும்பினால் அவளது பிறந்த வீட்டின் ஆசையை நிறைவேற்றுவது தான் தர்மமாகும். தாய்வீடு சென்ற மனைவி வர மறுப்பது அவளது பூர்வ ஜென்ம பாபம். கணவன் எவ்வளவு காலத்திற்கு உயிருடன் இருக்கப்போ கிறான்? எத்தனையோபேர் கணவனை யிழந்து திக்கற்றுத் தவிக்கின்றனர். அவர்களைக் கண்டாவது கணவன் அழைத்தால் வர மறுக்கும் பெண்கள் புத்திபெறக்கூடாதா? ஏதோ அவன் உயிருடனுள்ள வரையில் அவனோடு ஓட்டிச்சேர்ந்து வாழ்ந்து ஆநந்தமாக நாள் கழிக்கப் பார்க்கிறதுதானே? தாலி பாக்கியம் இவ்வுலக செல் வங்கள் யாவற்றிலும் மகா பெரிய பாக்கியமல்லவா? கணவனைத் திருப்தி செய்யாத ஸ்திரீயின் தேகம் இருந் தென்ன பயன்? வாழுகிறபெண்ணைக் கணவனின் வீடு போகவொட்டாமல் தாய்வீட்டார் கெடுப்பது பெரிய மௌடீகம். வரமறுத்த மனைவியை வற்புறுத்தி அழைத்துவந்து திருத்தப் பார்ப்பதே பல சமயங்களிலும் சிலாக் கியம் தரும். தன் தலைவிதி அவ்வா றாதென்று கணவன் கருதிச் சகிப் புடன் தன் மனைவியை மன்னித்து ஆனமட்டுக்கும் திருத்தப் பார்ப்பதே விவேகமாகும். மனைவியை அழைக் காமலே விலகி இருந்துவிடுவதென்ப தைப்பற்றி அந்தந்தக் காலசந்தர்ப்பங் களை தான் ஒரு முடிவுகூட்டுவிக்க வேண்டுமேயன்றி நாம் ஒன்றும் சொல்வதற்கில்லை. ப-ர்.]

---

இலைக்கு வருவதற்கு முன்பே சமையலறைக்குச் சென்று அப்போது ஆக்கியதை எடுத்து ருசிகாண சிலருக்கு அவா. பெண்ணை மணப்பதற்கு முன்பே அவள் முகம் கருப்பா, சிவப்பா, நீளமா, உருண்டையா, மூக்கு சப் பையா எப்படி யிருக்கிறதென்று கண்டுவிடச் சிலருக்கு எண்ணம். சாந்தி முகூர்த்தத்திற்கு முன்பே சுகித்துவிட முயல்வது சிலரது பாபரப்பு.

# சென்றுபோன நாட்கள்.

## ஸ்ரீமான் B. A. A. இராஜேந்திரம்பிள்ளை

சென்னை "மஹாவிகடதூதன்" பத்திராதிபர்.



தமிழ்ப் பத்திரிகைகளே அபூர்வமாயிருந்த பழங்காலத்தில் புதுவிதமாகப் பத்திரிகையை ஸ்தாபித்து, ஆரம்பத்தில் கொண்ட கொள்கையையும், பத்திரிகையின் ஒரு தனி அமைப்பையும் கடைசிவரையிலும் கலக்காது காத்து, ஒரே சீராய் ஒழுங்காய் தலைமையாய் பிரபலமாய் நடத்தி அரும்புகழ்பெற்ற ஆசிரியர்களுக்குள் முதன்மையாக நிற்பவர் "ஜநவிநோதிநி"ப் பத்திரிகையின் ஆசிரியரான திவான்பகதூர் கிருஷ்ணமாச்சாரியார் அவர்களாவர். அவருக்குப்பின் "சுதேசமித்திரன்" ஆசிரியர் ஸ்ரீமான் ஜீ. சுப்பிரமண்ய ஐயரவர்களாவர். அதற்குப்பின் மூன்றாவதாக ஸ்ரீமான் பா. அ. அ. இராஜேந்திரம் பிள்ளை அவர்களைக் குறிப்பிடலாம். அவர் ஆரம்பித்து நடத்திய "மஹாவிகடதூதன்" பத்திரிகை தன்னிகரில்லாப் புகழ்கொண்டு விளங்கியது. பண்டித பாமர ரஞ்சிதமாய் இராஜவிகடமாய்த் திகழ்ந்தது. அநுபவத்தின் ருசிகரம் இன்னவாறு இருக்குமென்பதைத் தமிழ்ஞாலம் நன்குணரும்படி முதன் முதல் எடுத்துக்காட்டியவர் பிள்ளையவர்களேயாவர். மஹாவிகடதூதன் பத்திரிகை நாற்பது வருஷகாலம் வரையில் வாரப்பத்திரிகையாக நடந்ததெனில் அதன் சிறப்பையும் பிரக்யாதியையும் கூறவும் வேண்டுமோ? ஸ்ரீமான் பிள்ளையவர்கள் தம்மிடம் உதவி ஆசிரியர்களாக அமர்வோரைத் திருத்திப் பக்குவவிகளாக ஆக்குவதில் அதிகமான நிபுணத்துவமும் போதனாசக்தியின் திறமையும் பெரிதும் பெற்றிருந்தார். சந்தாதாரர்கள் அவருக்குப் பொன் வைரமணி சங்கிலியைப் பரிசளித்தனர். அவர் வெளியிட்ட "பூலோக விநோதக்கதைகள்" ஐந்து வால்யங்களும் தமிழ்மொழியில் அரியதோர் அனுபவ ஞான நூலாகும். அதற்குச் சமமாக வேறு எதனையும் சொல்லவொண்ணாது. மூன்றாம் வால்யத்தில் வேதாந்திக்கதையில் வேதாந்த சாரங்களை மிகு விநோதமாகவும், அதி சுலபமும் தெளிவுமாகவும் விளக்கியிருக்கும் அருமையை வியவாதார் யாரே? நான்காம் வால்யத்தில் எழு சந்யாசிகளின் கதையும், இரண்டாம் வால்யத்தில் வரும் ஞானப்பெண் தயாநிதிகதையும், அதன் மற்றைய தொடர்ச்சியும் ஆஹா! அருமையினும் அருமையாகும். அவரது வாக்குக்கே ஒரு தனி அழகும் கம்பீரமும் அர்த்தபுஷ்டியுமுண்டு. நடையும் மிகு இனிமை.

ஃ

ஸ்ரீ பிள்ளையவர்கள் 1910-ம் வருஷத்தில் அரசாங்கக் கிளர்ச்சி அதிகமாயிருந்த சமயம் மஹா விகடதூதன் பத்திரிகையை இன்னொருவருக்குக் கொடுத்துவிட்டார். பின்னர் தாம் தமது பத்திரிகையை இழந்ததற்கு வருந்திப் புதிதாக "விநோத பாஷிதன்" என்ற வாராந்திர விகடப்பத்திரிகையைத் தொடங்கி ஒரு வருஷம்

போல் நடத்தினர். பிறகு "மஹா விகடதூதன்" பத்திரிகை தமக்குத் திரும்பவும் கிடைக்கவே, "விநோத பாஷித"னை நிறுத்திவிட்டு மறுபடியும் "விகடதூதன்" பத்திரிகையைத் தொடங்கி நடத்திவந்தார். சந்தாதாரர்களில் வெகுபேர் சந்தா பாக்கிகளை ஏராளமாக வைத்துக்கொண்டு "பட்டுக்குல்லா"வும் சாத்தினர். அதனால் மனம்நொந்து மாதப்பத்திரிகையாகவும் சிலகாலம் "விகடதூத"னை வெளியிட்டார். ஸ்ரீமான் எஸ். ஜி. இராமாநுஜலுநாயுடு "திராவிடாபிமானி"ப் பத்திரிகையை 1907-ம் வருஷத்தில் சேலத்தில் தொடங்கி நடத்திவந்த போது, "விகடதூதன்" பத்திரிகைக்கும் தலையங்கமும் வேறு முக்கிய குறிப்புகளும் எழுதும் பிரதான ஆசிரியராக இருந்துவந்து, கடைசியில் மாதப் பத்திரிகையாகி விகடதூதன் நின்றுபோகும் வரையும் அப்பத்திரிகையில் சம்பந்தப்பட்டிருந்தார். தமது காலத்திலேயே "விகடதூதன்" பத்திரிகை நின்றுபோனதற்குப் பிள்ளையவர்கள் ஆற்றொணுத்துயரடைந்தார். ஸ்ரீமான் எஸ். ஜி. இராமாநுஜத்தைக் கொண்டு மறுபடியும் ஆரம்பித்து நடத்தவேண்டுமென்று அவருக்கு இருந்த ஆவல் அதிகம். கடைசியாக ஸ்ரீமான் இராஜேந்திரம்பிள்ளையவர்கள் 1932-ம் வருஷம் ஜனவரி மாதத்தில் பரந்தாமன் திருவடிநீழலைச் சேர்ந்தார். இத்தனைப் பிரபலமான ஆசிரியரின் மரணத்தைப்பற்றி எந்தத் தமிழ்ப்பத்திரிகையும் ஒரு வரி கூட எழுதாமற்போனதும் விநோதமே. பத்திரிகை நடத்திச் சீமானனவர்களில் ஸ்ரீமான் பிள்ளையவர்களும் ஒருவராவார்.

## அவர்களின் எண்ணம் நல்லதல்ல.

இந்த வீடு எவ்வளவு பெறும், இந்த நிலம் எவ்வளவு பெறும் என்று கேட்பதெல்லாம் தாங்கள் கொடுத்திருக்கும் கடனுக்கு நெடுக வட்டி வளர்ந்து அதற்கு இவைகள் சரியாகித் தங்களுக்கே சேர்ந்துவிடாதா என்ற வஞ்சகக் கருத்தால்தான். வெளிக்கோ வெகு வெகு உறவும் நட்புமாகக் குலாவுவார்கள். உள்ளுக்கோ கடன் வாங்கியவன் அப்படியே முழுகிப்போய்விடானு என்பதே எண்ணம். இவ்விதம் கூடிக் குலாவிக் குடிகெடுத்தோர் எண்ணிலர். கொடுத்த கடனைத் திரும்பப் பெறவேண்டியது நியாயந்தான். ஆனால், கடன்பட்டோன் யாவும் இழந்து ஏமாறட்டுமென்ற நாச எண்ணம் எதற்காகவோ? தன் நெஞ்சில் எண்ணம் நல்லதாக இராவிடில் தன் வாழ்வும் அதற்கேற்றபடி சுருங்கித் தான் போகும்.

உண்மையாக ஒருவன் M. A. என்றும், திவான் பகதூர் என்றும் வைத்துக்கொள்வது பிசகாம். ஆனல் பொய்யாக ஒரு கதையில் ஒருவனுக்கு அப்பட்டங்களை வைக்கலாமாம்.

# ரஸமான குறிப்புகள்.



அடிமேலடி யடித்தால் அம்மியும் நகரும் என்பது பழமொழி.

இடிமேலிடி விழுந்தாலும் ஆங்கிலர்கள் தமது ஷேக்ஸ்பியரை (Shakespeare) இழக்க மாத்திரம் இசையார்கள். அவருடைய சாதுர்யமொழிகளையும் அலங்கார விசேஷங்களையும் உண்ணும்போதும் உலாவும்போதும் எண்ணும்போதும் எழுதும்போதுமெல்லாம் வாயாரப் பேசிப்பேசி உடல் சிலிர்க்கவும் உயிர் மலர்க்கவும் ஆனந்தக் கூத்தாடி அகமகிழ்வார்கள். இந்தியா போனாலும் இவரையிழத்தல் ஈனமென்பார்கள்; இவர் உள்ள இடத்திலிருந்தே ஊரைச்சுற்றி வருவதும் நின்ற நிலையிலிருந்தே நினைப்பெல்லாம் தருவதும் விந்தை விந்தை பெரு விந்தையென்றே சிந்தைகளிப்பார்கள். ஆங்கிலர் இவ்வாறாக, கிரேக்கரோ (Greeks) ஹோமரைத் (Homer) தாங்கிப் பராக்கென்கிறார்கள். லத்தீன் (Latin) பாஷை செத்தேனா பாருமென்று மெத்த மகிழ்வுடன் சித்தங்களித்து வர்ஜில் (Virgil) என்பவர்க்கு அர்ச்சனை புரிகிறது. ஏக குடும்பமாய் நம்முடன் ஸ்நேகம் புரியும் திடமுள்ள வடநூலாரோ, காளிதாசனே, கவி பாடுவதில் யாளிபோன்றவன், அவனுக்கு மிஞ்சியா வேறொருவர் என்று பற்பலவாறு புகழ் கூறுகின்றனர் இஃது ஒரு டில்லி தர்பார்! இன்னிசைப்புலவராகும் மன்னவர் கூட்டம், மணி மகுடங்களோடும், அணி யற்புதங்களோடும், அலங்காரமாய் நாற்புறமும் துலங்கா நிற்ப, அரசனெனப் பெயர் வாய்ந்த அருமைத்தமிழும் சிரசிலொன்றுந் தாங்காது கந்தை சுற்றிக் காவடிதாங்கி கபோதி வீராகவா என்று கலக்கமுற்றுச் செல்வதானால் என்ன பரிதாபம் விளைவிக்கும்! ஃ

இவ்வித அபாய நிலையிலிருந்து நம்மை உபாயமாய்த் தப்புவித்தவன் உம்பர்புகழும் கம்பனேயாவன். கம்பனே கவிச்சக்கரவர்த்தி; கம்பன் பாட்டே கற்றோர்க்கிதயம் களிப்புறப் பண்ணுவது; கம்பன் சூழ்ச்சியே கம்ப சூத்ரமாவது; கம்பன் வீட்டுக்கட்டுத் தறியும் கவிபாடும் யோக்கியதையுடையது. கம்பராமாயணத்தைப்போல் ஆழ்ந்தபொருளும் அலங்காரச் சொற்களும், சாயையைப்போலவே பூமியிலிருந்து வானகந்தாவி அதைப்போனகங் கொள்வதும் வேறெங்கும் காணவும் கிட்டாது. விளம்பவும் ஒட்டாது. அம்மம்ம! அளப்பொணாத அவனுடைய அறிவும்சொல்லொணாத அவன்றன் சுந்தரத்தொடர்களும் தந்திரவகைகளும், பாவிக்கமுடியாத மற்றவர் சேவிக்கவேண்டிய கற்பனாசக்தியின் பொற்பின் திறமும், யாம் அவ்வப்போது கண்டும் கேட்டும், அளவிலா ஆனந்த மடைகின்றோம். மலையை வர்ணிக்கும் மகானுபாவர் சமயச்சண்டையைச் சந்தியிலிழுப்ப

---

ஸ்திரீகளும், சவாரிக்குரிய எருது, குதிரை போன்றவைகளும் நமது அதிகார எல்லைக்கு அடங்கி நடக்கும் வரையில்தான் நாம் அவற்றைக் கட்டி மேய்க்கலாம். நம்முடைய அதிகாரத்துக்கு மீறித்தாண்டி முரட்டுத்தனம் செய்ய ஆரம்பித்து விட்டால் அதற்குப்பிறகு நாம் செய்வதொன்றுமில்லை.

தும், மதிலும் யாறும் இவ்வகைத் தென்பார் கற்றறி மோழைகளின் கதையைப் பரப்புவதும், சரயுவின் சங்கதி சாகசமாய்ச் சொல்வார், தத்துவ உபதேசமாம் சத்தியங்கூறுவதும், இவைபோன்ற இன்னும் பற்பல அற்புதங்கள் அவரிடம் அநேகங் காணக்கிடைப்பன. புத்தகப்படிப்பில் மெத்தக் காலங் கழியாராயினும், கவித்திறத்தில் ஒப்புயர்வில்லாரெனப் புவியெங்கணும் புகழ படைத்தவராதலின் 'கல்வியிற் பெரியன் கம்பன்' என்னப் பட்டார். சுருக்கமாகக் கூறுமிடத்துப் படிப்பினாலேயே வராமல் பிறப்போடே தோன்றியவ்வாகவி, கம்பன்.

ஃ

வான்மீக முனிவர் வடமொழியில் இராமாயணம் செய்தனர், கம்பர் தென்மொழியிலியற்றினர். இவ்விருவரில் கவித்திறத்திலெவர் முந்தினவரென்பது ஒரு அருமையான கேள்வி. தமிழபிமானிகள் கம்பரையே விசேஷித்துக் கூறுவர்.

ஃ

சமயாபிமானங் காரணமாகவோ அன்றிக் குலமுதன்மையின் கொள்கையை யனுசரித்தோ வடமொழியே திடமுளதென்பார் வேறு சிலர். கம்பன் கவிச்சக்கரவர்த்தியாயினும் வான்மீகிமுன் அவன்திறம் செல்லாதென்கிறார்கள். வடமொழி யுணர்ந்தார் தென்மொழி யறிந்திலர்; தென்மொழி தெரிந்தார் வடமொழி யோர்ந்திலர்; இரண்டுங்கற்றார் சிலர் உண்மையைக் கூறாது ஓரஞ்சொல்லுவதே பாலும் பழமுமாகக் கொண்டனர். அந்தோ! நம்மனோர் கதி இவ்வண்ணமாக இவ்விஷயம் எவ்வாறு சீக்கிரத்தில் முடிவுக்கு வரும்? கவித்திறத்தைப் பற்றி மாத்திரமே ஆலோசிக்குங்கால், முன்னர் நூலியற்றினோர் வால்மீகரே யாதலின் அவரே மிக்க சாமர்த்திய முடையவர் என்று கூறுதல் ஒவ்வாது.

ஃ

காலத்தினால் முதன்மையைக் கொண்டே மற்ற எல்லாவற்றிலும் முதன்மை கூற முயல்வது உலகப் பரிணப்புக்கிரமத்தில் மனிதனுக்கு முந்தியது மர்க்கடமாதலின் அஃதே உயர்வென்னும் ஆபாசம்போலும், பிற்காலத்தில் தோன்றினதாலேயே கம்பன் மேன்மை யுற்றானெனக் கூறுதல், முற்காலத்திய காளிதாஸனை விடப் பிற்காலத்திய கட்டைவெட்டி பீடுற்றானென்பது போலாம். வான்மீக மொழிபெயர்ப்பைக் கூடிய வரைக்கும் யாம் பார்த்ததில், முனிவரர் அற்பசொற்பமானவரன்று என்றே ஏற்படுகிறது. கம்பன் கவித்திறம் கணிக்கலாகா அருமையுடைய தென்பதும் அவனால் பண்ணிப்பதித்த பாக்களைப் பார்க்கப் பளிங்குபோல் விளக்குகிறது.

ஃ

இனி சிற்சில விடங்களில் வான்மீகர் கம்பன் மீதுயர்ந்தும், வேறுசில விடங்களில் கம்பன் வான்மீகரை ஆட்டங்காட்டியு மிருப்பதாகத் தோன்றுகின்றமையின், இவர்க்குள் ஏற்றத்தாழ்வு கற்பிப்போர் இரண்டு நூல்களையும் நன்குணர்ந்தவ ராதலன்றியும், தனிமிகச் சுய அறிவு கைவந்தாராய், புத்தகப் பூச்சி அன்றிச் சொன்னதைச் சொல்லுங் கிளிப்பிள்ளை நிலைமையை யுதறிக் கடந்து, தூய்மை யென்னும்

---

தான் கடையில் வாங்கி வரும் சாமான்களுக்கு ஒவ்வொன்றிலும் அரையணா காலணா சேர்த்துச் சொல்லி அதைச் செலவுக்கு வைத்துக்கொள்ளும் சத்தியவான்கள் சிலர் விகட சபைக்கு வேண்டுமாம்.

பட்டணத்தில் வாய்மையாகிய கோட்டையில் முக்குற்றங் கடிந்த முற்றத்தின்கண் அந்தகாரம் போக்கி ஆனந்தங் கொடுக்கச் சந்திரனெழுந்து சுந்தரஞ் செய்போது ஒவ்வொரு சொல்லையும் ஊன்றி யூன்றிப் பார்க்க, உயர்வும் தாழ்வும் ஒருவேளை ஏற்படினும் ஏற்படும்; அன்றி ராமனுக்கு ராமன், கிருஷ்ணனுக்கு கிருஷ்ணன் என்று விடியினும் விடியும். இஃதல்லாமலும் பலர்க்குப் பலவாறு முடிவு ஏற்படவும் கூடும். எஃதெவ்வாறுயினும், தமிழில் கம்பன் கவிச்சக்கரவர்த்தி யென்பதற்கு யாதொரு சந்தேகமுமில்லை.

ஸ்ரீ

பூதப்பொருளைப் பேசுவது போலேயே போதாப்பொருளுக்குச் சாதம்போடுவது கம்பனிடத்துள்ள அபூர்வ சக்திகளிலொன்று. இவ்விஷயத்தில் மகா மேதாவியான கம்பர் போற் புகழ் படைத்தவர் இம்பரிற் கிடைக்கவேமாட்டார். மேலும், அவருடைய அலங்காரநடையும் அதியுன்னத அற்புதகதியும் ஆனந்த சாகரத்தில் அனைவரையும் அழுத்தும் அருமை வாய்ந்தன. பூவைக்கண்டார் புனலைக்கண்டார், மாத்தைக்கண்டார் மயிலைக்கண்டார், ஊரைக்கண்டார் உறவைக்கண்டார், மனலைக்கொண்டார் மனதைக்கண்டார் அங்கங்கே நின்று, அவருள்ளுருவிச்சென்று,வாகனந்தூக்கி வேகமாய்ச் செல்வோர் அதிகாரிகள் வீட்டருகில் 'ஆயக்கால்' போட்டு அரைமணிநேரம் காப்பது போல், நாழிகைக்கணக்காய் நாட்டியஞ்செய்து நாணயம் விளைத்த நல்விசைப் புலவர், கதையின் அவசரத்தால், காதம் கடக்க வேண்டியதாயின், ஆட்டக்குதிரை ஓட்டம் பிடிப்பது போல் பாட்டுப்பாடி பதின் காதம் செல்வாரே! என்ன விந்தை!!

(ஆநந்தகதா கல்பகம்.)

## மோட்டார் யானை.

ஒரு யானையைக் கோயிலில் வைத்து சம்ரக்ஷிப்பதற்கு யானையின் விலையைவிட ஏராளமான செலவு பிடிக்கிறது. அவ்விதமே ஒருமோட்டார் வாங்கிவிட்டால் தினமும் யானையைத் தேய்த்துக் கழுவுவதுபோல இந்த மோட்டாரையும் தேய்த்துக் கழுவ ஒருவன் தனிச் சம்பளத்திலே தேவைப்படும். நாள் முழுதும் வேலை சரியாக இருக்கும். யானைக்குப் பெருந்தீனி போடுவது போல மோட்டாருக்கும் பெட்ரோல் எண்ணெய்த்தீனி இல்லாவிடில் ஓடாது. இப்படியிருந்தும் இந்த மோட்டார் யானை ஏன் வேண்டு மென்றாலோ—மோட்டார் இருந்தால் தான் வக்கீலுக்கும் டாக்டருக்கும் இன்னும் பலருக்கும் பத்து பங்கு அதிக வரும்படி கிடைக்கும். மோட்டார் மூலம் ஆயிரம் ரூபாய் அதிக வரும்படி வருகையில் அதற்கு 500 ,, சல விடுவது ஒரு கஷ்ட மல்லவாம்.

# ஜீவரத்தினம்.



சிற்சில சமயங்களில் நாம் எதாவதொரு காரியத்தைச்செய்யும்பொழுது, நாம் வெகுகாலத்திற்குமுன் இழந்த நம்முடைய நண்பனுடன் அதே காரியத்தை செய்த இடத்தையும், சந்தர்ப்பத்தையும், உல்லாசமாயிருந்த வேளையையும் அந்த நண்பனுடன் ஆனந்தமாக காலங் கழித்த நாட்களையும் திடீரென்று நினைத்துக்கொள்ள நமக்குப்பொறுக்க முடியாத துக்கமும் அடக்கமுடியாத ஆனந்தமும் உண்டாகிறது. நமக்காக உயிரையும்விடத் தயாராயிருந்த நண்பனை இழந்துவிட்டோமென்ற வருத்தமும், அவனைப்போன்ற நண்பன் என்று உபமானிக்கக்கூட நமக்கு நண்பன் கிடையா தவ்வளவு சிறந்த நண்பனை சில காலமாவது நாம் அடைந்தோமே என்ற சந்தோஷமும் நம்மையே மறந்துவிடச் செய்கின்றது. மறுகணம் அந்த நண்பனைவிட்டு நாம் தனியே இருக்கிறோமே நமக்கு வெட்கமில்லையா என்று தம்மைத் தாமே ஒருகேள்வி கேட்கவைக்கிறது. உடனே தலையும் குனிகிறது. ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு குணம். அதுபோல போன நண்பனிடத்திருந்த குணம்போன்ற குணமுடைய இன்னொரு நண்பனை இவ்வுலகில் காணமுடியவில்லை. முடிகிறதுமல்ல. என்னே இவ்வுலகின் மாயை!

ஃ

ஏதாவது ஒரு வஸ்துவை நாம் பெறவேண்டுமானல், எவ்வளவு எளியவர்களாக இருந்தாலும், அவர்களிடம் மிகவும் தாழ்மையாகவே கேட்க வேண்டும். எவருக்கும் தன்னிடமுள்ள ஒரு பொருளைப் பிறர்க்குக் கொடுக்கும்பொழுது ஒரு தனிக் கௌரவம் தானே உண்டாகிறது. இதைக் கண்கூடாக—வோட்டர்களை ஓட் கேட்கும்பொழுது அவர்கள் நடப்பதைக்கண்டு தெரிந்துகொள்ளலாம்.

ஃ

சில சமயங்களில் ஆசிரியர்கள் கூறியதையே கூறிவிடுகிறார்கள். அதற்குப் பல காரணங்கள் உண்டு. வாசிப்பவர் எழுதுவதற்குச் சக்தியில்லாமல் முன் எழுதியதையே எழுதுவதாக நினைக்கிறார்கள். ஆசிரியரால் இன்னின்ன விஷயங்கள் எழுதியாகி விட்டது ஆகையால் அவைகளை எழுதலாகாது என்று மனதில் வைத்துக் கொள்ளமுடியுமா? மேலும் சில விஷயங்கள் எத்தனை தடவை வெளியிட்டாலும் அத்தனை தடவைகளும் புதுச் சுவையைத் தரக்கூடியவையாக இருக்கலாம்.

ஃ

**நா**ம் விளையாட்டிற்காகவும், பொழுது போக்கிற்காகவும் நமது வாழ்க்கையில் சிறிது மாறுதலுக்காகவும், ஏதோ ஒரு சிறிய காரியத்தை ஆரம்பிக்க, அதுபடிப்படியாக விருத்தியடைந்து மிகவும் பெரிய காரியமாகி ஆரம்பித்தவர்களுக்கே வெகு ஆச்சரியத்தை விளைவிக்கிறது. அப்படி அக் காரியம் விருத்தியாவதற்குக் காரணம்

---

பாட்டி தாயார் கடைச்செலவுக்குக் கொடுத்தனுப்பும் பணத்தில் திருடிக் கொள்ளப் புத்தி போகாதாம். ஏனெனில் தான் எவ்வளவு எடுத்துகொண்டாலும் அவர்கள் தடுத்துக் கோபிக்கப் போவதில்லை யானதால் தானும் !

அதை ஆரம்பித்தவரின் நல்லமனதும், அக்காரியத்தின் புனிதமும், மற்றவர்களின் விடாமுயற்சியுமேயாம்.

ஃ

தினந்தோறும் நாம் காணும் நண்பனொருவனை ஒரு நாள் காணவிடின் நாம் படும்பாடு எவ்வளவென்று சொல்ல முடியுமா? அன்றைக்குத் தான் அவனிடம் வெகு முக்கிய வேலைகளைப்பற்றிப் பேசவேண்டுமென்று நினைத்துக்கொள்ளுகிறோம். திடீரென்று அதற்கு முன்நாள் அந் நண்பன் நாம் மறுமுறை எப்பொழுது சந்திப்போமென்று கேட்டதும், பிறகு நாளைக்காலையில் சந்திக்கலாம் என்று கூறியதும் ஞாபகத்திற்குவர மனம் படாதபாடெல்லாம் படுகிறது.

ஃ

நாம் ஒருவரை ஒரு சாமான் கொடுப்பாரென்று வெகு காலமாய் நம்பி இருந்து, பிறகு ஒருநாள் அவரை அச்சாமான் இருக்கிறதா யென்று கேட்க அவரும் இருக்கிறதென்று கூறுகிறார். பிறகு அதை வேண்டுமென்று கேட்க, அவர் அது தன்னிடமில்லையென்றும் தான் முன்பே ஒருவரிடம் கொடுத்துவிட்டதாயும் வீண்சாக்கு கூறுகிறார். இப்படிப்பட்டவர்களிடம் கேட்பதைவிடக் கேளாமலிருத்தலே மேல்.

ஃ

நம்முடைய மனமானது ஒரு நிலைமையில் இல்லாதபொழுது நம்மைப் பிறர் ஏதாவதொரு காரியத்தைச் செய்யும்படி பலமுறை வற்புறுத்த, அதன்மேல் அதை நாம் செய்தாலும் அக்காரியம் சரிவர நடந்தேறுவதில்லை. அது தப்பிதமாகவே முடிகிறது.

ஜெ. சுந்தரரங்கராஜு

சைதாபேட்டை.

---

## வினு விடை

வினு:—ஒரு குடும்பத்தை விருத்திக்குக் கொண்டுவர என்ன செய்யவேண்டும்?

விடை:—குடும்பக் கஷ்டம் அறிந்திருந்தாலும் அறியாதவர்கள் போல் வந்து அடிக்கடி தங்கி வயணமாய்த் தின்றபடி யிருந்தால் விருத்திக்குக்கொண்டு வந்து விடலாம் சம்பாதிக்கும் வீட்டுக்காரனும் பாங்கியில் அதிக பணத்தைச் சேர்த்து விடலாம்!

ரயிலில் வேலை செய்பவர்களுக்கு ஒரு வியாதியுண்டு. யுவதிகள் யாராவது வண்டியில் உட்கார்ந்தால் அவர்களைக் கண் இமை கொட்டாமல் உருட்டி உருட்டிப் பார்ப்பதே அவர்கள் தொழில். அவர்கள் பத்துதரம் பெண்கள் இறங்கும் வண்டியின் பக்கமமாக இப்படியும் அப்படியும் போவார்கள். பெண்களை ஒரு சக்கரை மிட்டாய் போல் எண்ணுவர்.

# மேனாட்டுச் சிறு தொழில்கள்.



ஸ்ரீமான் ரஸ்டோம்ஜி பாபஸோலா "ஸேப்டி ரேஸர்" எனும் க்ஷவரக்கத்தி, குண்டூசி, கிளிப், ஸ்பூன், கருப்புப் பொத்தான், ஸ்டீல் பேனாக்கள் முதலியவற்றை யந்திரங்கள் தருவித்து இந்தியாவிலேயே செய்தால் விசேஷலாபம் உண்டென்று கூறிவிட்டு முடிவில் பின் வருமாறு கூறுகிறார்:—

ஃ

இறக்குமதித் தீர்வையில்லாததும் தொழில் கூலி குறைவாக இருப்பதும் நமக்குள்ள அனுகூலங்கள். ஆயினும் சிலர் கஷ்டப்பட்டிருப்பதற்குக் காரணங்களைச் சொல்லுகிறேன்:—

(1) தொழிலை அமைக்க அறிவில்லை. சரியான இயந்திரம் வாங்கப் படவில்லை.

(2) சரக்கு நாணயமாக விருக்கும்படி ஜாக்கிரதை எடுத்துக்கொள்ளப் படவில்லை.

(3) சரியானபடி முதல் சேர்க்கப் படவில்லை. சிப்பந்திகள் புத்திசாலிகளல்ல. மூலப்பொருள்களை வாங்க நல்ல ஏற்பாடு செய்யப்படவில்லை.

பல தொழில்களைச் செய்ய இந்தியாவில் ஆரம்பம் செய்தவர்கள் வெற்றி பெறாததற்குக் காரணங்களை நான் 20-வருஷங்களாகக் கவனித்து வந்திருக்கிறேன். அக்காரணங்களாவன:—

1. விஷயத்தை நன்கு தெரிந்து கொள்ளாமலும் தகுந்த விசாரணை செய்யாமலுமே ஆரம்பம் செய்து விடுகிறார்கள்.

2. உள்ள முதலுக்கு இயந்திரம் வாங்கிவிட்டு மூலப்பொருள் வாங்கப் பணமில்லாமல் திண்டாடி யிருக்கிறார்கள்.

3. புத்தியுள்ள வேலைக்காரர்களை அமர்த்திக் கொள்வதில்லை. தாங்களும் சரியாக மேற்பார்வை செய்வதில்லை.

4. திடீரென்று வேலையை ஆரம்பித்துவிட்டு மூலப்பொருள் வாங்கப் பணமில்லாமல் கையைப் பிசைகிறார்கள். பிறகு தொழிற்சாலையை அடமானம் வைக்கிறார்கள். அதற்காக வட்டி கொடுக்கவேண்டி யிருக்கிறது. தாகு கொடுக்க வேண்டியிருக்கிறது. கடைசியில் சொத்து ஏலம்போய் விடுகிறது.

5. அநேகர் "லிமிடெட்" கம்பெனிகளை அமைத்திருக்கிறார்கள். அதற்காக முன்வந்து வேலை செய்கிறவர்கள் தங்களுக்குப் பல லாபங்களைத் தேடிக்கொண்டு விடுகிறார்கள். அவர்களுடைய நிர்வாகத்தில் பங்குக்காரர்கள் குறுக்கிட முடியாமல் ஆதியிலேயே செய்தகொண்டுவிடுகிறார்கள். பெரிய பெரிய சம்பளங் கொடுத்துத் தங்களுடைய பந்து மித்திரர்களை

---

"காதலியின் ஒத்தை முத்த மானாலும் அதன் ருசி சொல்லப் பார்றோ? இன்னொரு முத்தம் அவன் இடுவதற்கு முன் எவரோ பாவிகள் அந்தப் பக்கம் வந்து விட்டார்கள். அவளும் சென்று விட்டாள். என் செய்வேன் ஈசா!"

வேலையில் வைத்துக்கொண்டு விடுகி றார்கள்.

6. அப்படிப்பட்டவர்களுக்கு ஏராளமான அதிகாரமிருக்கிறது. பங்குக்காரர்கள் குறுக்கிட முடிகிற தில்லை. டைரக்டர் சபையின் அங்கத் தினர்கள் அவர்களுடைய இஷ்டப்ப டித் தெரிந்தெடுக்கப் படும்படி செய்ய அவர்கள் சக்தி யுள்ளவர்களாக இருக் கிறார்கள்.

7. பங்குக்காரர்கள் சிரத்தை எடுத்துக் கொள்வதுமில்லை. கம்பெனி யின் விதிகளை அவர்கள் படித்துப் பார்ப்பதேயில்லை.

மேற்சொன்னபடி ஊழல்கள் நேராமல் பார்த்துக்கொண்டு தொழில் செய்தால் அது பலிக்கும்.



## பலியின் கோரம்

பலிகொடுக்கப்படும் ஆடு, பன்றி, எருமை, கோழி முதலியவை படும் கஷ்டம் பலருக்குத் தெரியாதிருக்கும். ஆடுகளின் கால்களும் காதுகளும் முதலில் துண்டிக்கப் பட்டுத் தலைகள் உடைக்கப்பட்டுப் பிறகு கொல்லப்படுகின் றன. சில சமயங்களில் ஆடுகளின் சரீரம் 32 இடங்களில் வெட்டுப்பட்டு மாம்சம் துண்டு துண்டாக எடுக்கப்படுகின் றது. பொது ஜனங்கள் பார்க்காமலிருப்பதற்காக இது ஒரு இரவில் நடத்தப் படுகிறது. கருப்பமான ஆடுகளும் பலிகொடுக்கப்படுகின்றன. வயிற்றிலிருந்து குட்டி கையால் பிடுங்கி எடுக்கப்பட்டு முதலில் கொல்லப்பட்ட பின் தாய் கொல்லப்படுகிறது. உயிருள்ள பன்றிகள் தரையில் புதைக் கப்பட்ட ஈட்டிகள் மீது உயரத்திலிருந்து போடப் படுகின் றன அவை இறக்கு முன் பல மணிநேரம் அப்படியே இருந்து மிகவும் கஷ்டப்படுகின்றன. எருமைகள் தனி யாகத் தோண்டப்பட்ட குழிகளுள் ஓட்டப்பட்டுப் பல பக் கங்களிலும் பலர் நின்றுகொண்டு கூர்மையான கத்திகளால் குத்தப்பட்ட பிறகு தலை வெட்டப்படுகிறது. கோழிகள் பலி கொடுக்கப்படும்போது மேலேயும் கீழேயும் தூக்கி எறிந்து ஆட்டப்படுகின்றன. அவை உயிருடனிருக்கும் போது கடிக்கப்பட்டு இரத்தமுறிஞ்சப் படுகிறது.

இம்மாதிரிப் பலி கொடுப்பதைப் பொது ஜனங்கள் எதிர்க்குமாறு அபிப்பிராயம் உண்டுபண்ணக் கொஞ்சம் காலம் பிடிக்குமாயினும் நிரபராதிகளான பிராணிகளுக்கு இழைக்கப்படும் அனாவசியமான அதிகக் கஷ்டம் நீக்கப் படுமாறு செய்ய மனித சமூகத்தினர்களனைவரும் உதவி யளிக்கவேண்டும்.—ஜஸ்டிஸ் வி. எச். பி. ஜாக்ஸன்.

# நாரத மகரிஷி.



நாரதருடைய மகிமையை வர்ணிக்கத் தரமன்று. அவருக்கு விஷயவாதி என்று பெயர். பின்னால் வரப்போவதை முன்னதாகவே அறிந்து எச்சரிக்கை செய்வார். ஸாமத்தில் அதிப்பிரவீணர். மகா லக்ஷ்மிக்கும் ஸ்ரீமகா விஷ்ணுவுக்கும் விவாகம் செய்வித்தார். விஷ்ணுவின் ஆக்ஞைப்படி இந்திரனை அனுகூலமாக்கிக்கொண்டு புரூரவனுக்கும் ஊர்வசிக்கும் கல்யாணம் நடத்தினர். கம்ஸாஸுரனுடைய மதோன்மத்தையும் அகந்தையையும் அடக்கி வதைசெய்ய ஸ்ரீ கிருஷ்ணன் வசுதேவருடைய வீட்டில் அவதரிக்கப்போகிறானென்று ஆகாசவாணி சொல்ல, கம்ஸன் அதை மெய்யென்றெண்ணாமல் பயமற்றிருக்கையில் நாரதர் கம்ஸன் மனதில் ஸம்சயமுண்டாகும்படி போதித்து தேவகியைச் சிறையிடும்படி செய்து அவனுடைய பாபமூட்டையை அதிகப்படுத்தினர். இவர் செய்த காரியங்கள் இவ்வளவு தான் என்றில்லை. சித்ரகுப்த அரசன் புத்திரசோகத்தால் புலம்புகையில் அவனுக்குத் தத்வஞானோபதேசம் செய்து ஞானியாக்கினர். ஸம்ஸார சுகத்தில் யாரும் சொந்தமல்ல; நாம் யார்? எங்கிருந்து வந்தோம், இப்பூமியில் ஏன் இருக்கிறோம், இனி எங்கே செல்லப் போகிறோம்—இவைகளையெல்லாம் நன்றாக விசாரிக்க வேண்டும்; நம்மோடு எது வரப்போகிறதென்று ஆராயவேண்டும்; காலமாகிய பிசாசு மனிதனுடைய ஜீவநாளைக் கொள்ளையடிக்கிறது; அக்ஞானவஸ்தையில் எல்லாவற்றையும் சாசுவதமென்று நம்பி ஏமார்ந்து போகாதீர்கள்; க்ஷணிகஸுகமான உலக வியவகாரத்தில் மூழ்கி நித்ய ஸுகமான மோக்ஷானந்தத்தை மறக்காதே; மாயாமயமான—அசாச்வதமான உலக ஸுகத்தை நம்பி மோசம் போகாதே என்று இம்மஹரிஷி வாசா மகோசரமாய்ப் பிரஸங்கம் செய்து அநேகரை நல்வழிக்குத் திருப்பியிருக்கிறார். ஃ

துருவன், பிரஹலாதன், ருதுத்வஜன், வால்மீகி முதலிய பக்தர்களுக்கு பிரஹமஸ்வரூபத்தை உபதேசித்தவர் இம்மஹரிஷியே. அசாச்வதமான இவ்வுலகத்தை முற்றிலும் மறந்து மனப்பூர்வமாய் ஈசுவரனிடம் பூர்ண பக்திபாவங்களை வைத்து ஸத்கர்மங்களைச் செய்தும் அந்தக்கரண சாந்தியாய் பகவத் தியானம் செய்வோருக்கு மோட்சஸாம்பிராஜ்யம் அதிசீக்கிரம் கிடைக்கும். இதற்கு சத்குருவின் கிருபையும் ஸத்ஸங்கமும் அவசியம் வேண்டும். ஃ

மகரிஷி நாரதர் பிரம்மஞானியாயிருந்தார். ஸத்குருவென்றால் அவருக்கே தகும். அவரால் அநேக ஜனங்கள் உலகத்தில் கஷ்டத்திலிருந்து விடுதலையடைந்தார்கள். அவர் எப்போதும் வீணையைக் கையிலேந்திக்கொண்டிருப்பார். கானத்தில் வீணாகானமே உயர்ந்தது. ஒரு நாள் நாரதர் வீணை வாசித்துக்கொண்டு ஸரஸ்வதி நதிதீரம் வந்தார். அப்போது வியாஸரிஷி அவ்விடத்தில் இருந்தார். தன் ஆச்ரமத்தைத் தேடி வந்த நாரதரை வெகு விசுவாஸத்துடன்வரவேற்று ஸத்கரித்தார். இதைப் பார்த்து நாரதர் திருப்தியடைந்தார். ஆனால், பிரம்மரிஷியான வியாஸர் முகம் கன்றியிருக்கக் கண்ட நாரதர் ஹே பிரம்மரிஷியே! உன் முகம் ஏன் வாடியிருக்கிறது? இதிஹாஸ

திருஷ்டியால் மிகுந்த யோக்கியதை பெற்ற உன் முகம் வாடியிருப்பானேன்? மகாபாரதத்தில் ஏராளமான தர்மநீதி, வியவஹாரம், தெய்வபக்தி ராஜ தர்மங்களை எடுத்தெழுதிய சிரேஷ்டனுன உனக்கு வந்த வருத்தமென்ன? நீ எழுதியிருக்கும் மகாபாரதத்தில் ஏதாவது குறைவுண்டென்று சிந்திக்கிருயோவென்ருர். வியாஸர், நாரதா நீ சொல்வது நிஜம்; என் அந்தக்கரணம் துக்கத்தால் நிறைந்திருக்கிறது. ஹே பரப்பிரம்மாத்மா! நிராகாரனுயுள்ள உன் நிஜரூபத்தை வர்ணிக்காமல் உன் அவதாரரூபங்களை வர்ணித்து தீர்த்தயாத்திரா மூலமாய் உன் ஸர்வ வியாபகத்வத்தை மறைவு படுத்தினேன். விகாரஜனிதமான இத்தோஷங்களைப் பொறுத்துக் கொள்ளென்று வேண்டுகையில் வியாஸருடைய கண்களிலிருந்து ஜலம் தாரைதாரையாய் வழிந்தது. வியாசரைப்பார்த்து நாரதர் பச்சாத்தாபப்பட்டு, ஹே மகரிஷி! உன் விசேஷ துக்கத்துக்கு இது காரணமன்று; நீ செய்துள்ள மஹாபாரதத்தில் பரப்பிரம்ம ஸ்வரூபத்தை விசதப்படுத்தவில்லை. எந்தப் பரப்பிரம்ம நிரூபணையால் ஜகத் பரிசுத்தமாகுமோ —எந்த ஸச்சிதாநந்த ஸ்வரூபத்தில் யோகிகள் ஆநந்தமடைகிருர்களோ—அத்தகைய பரப்பிரம்மத்தை உன் கிரந்தத்தில் தெளிவாக விளக்கினுல் உன் துக்கம் தொலைந்துவிடும் என்ருர். வியாஸர் நாரதரின் உபதேசத்தால் சாந்தியடைந்தார். நாரதர் யோகாப்பியாச பலத்தாலும், தனக்குக் கிடைத்த ஞானத்தாலும் அநேக ஸத் உபதேசங்களை வியாஸருக்கு உபதேசித்தார். நாரதர் புரிந்தவை யாவும் லோக ஹிதத்துக்காகவே தான்.

## ஒரு வீர புருஷனின் உரை.

நான் எது செய்யினும் பஹிரங்கமாகவே செய்வேன். அஞ்சுதல் என்பது இன்னவிதமென்பதையே நான் அறியேன். அச்சம் என்னும் பேயை நான் கண்டதேயில்லை. மறைத்துச் செய்வது என் வழக்கமல்ல. எதற்காக மறைப்பது? ஏன் மறைக்க வேண்டுமோ? அப்படி மறைப்பவன் உண்மை யுள்ளவனுகான். மறைக்கும் கபடனுக்கு உத்தம நெஞ்சோ, உறுதியான மனமோ கிடையாது. என் முதுகின் பக்கமிருந்து மறை முகமாய் என்னைக் கஷ்டத்துக்குள்ளாக்கப் பார்த்தாலும் அப்போதும் கூட அந்த அல்ப பிராணிதோல்வியே யடைவான். எதிர்ப்பவன் நேரில் வந்து தன் வாதத்தைத் தொடங்கக் கடவன். பிறரது வார்த்தையைக்கேட்டு எனக்குத் தீங்கு செய்ய நினைத்து, அதனுல் என் மனஸ்தாபத்தை சம்பாதித்துக் கொள்ளுபவனைப் பார்த்தால் எனக்கு மிக்க பரிதாபமாயிருக்கிறது. ஒரு வீர புருஷன் தன் நெஞ்சில் காயத்தை ஏற்பானே தவிர, தன் முதுகில் காயம் படவிட மாட்டான். எது நன்மையோ அதைச் செய்பவனே வீரன். எவர் வசைகளும் திட்டுகளும் என்னை எதும் செய்யாது. கடவுள் என்பக்கத்தில் எப்போதும் இருந்து வருகிருரென்புதை நான் அறிவேன்.

# குண்டலகேசி



இப்பெயர்கொண்ட நூலானது தமிழில்பெயர் பெற்று விளங்கும் பஞ்சகாவியங்களில் ஒன்று. அப் பஞ்சகாவியங்களாவன:—சிந்தாமணி சிலப்பதிகாரம், மணிமேகலை, குண்டலகேசி, வளையாபதி என்பனவாம். இவற்றுள் முதல் மூன்றும் அச்சிடப்பட்டு யாவருக்குந் தெரிந்திருக்கின்றது. பிந்திய இரண்டும் அச்சிடப்படவில்லை. ஏட்டுப்பிரதிகள்கிடைப்பதும் அரிதாக இருக்கின்றது. ஆகையால், அநேகருக்கு அந்நூல்கள் இருப்பதே தெரியாமல் இருக்கின்றன. இது ஆச்சரியமல்ல. பெருமைவாய்ந்த இவ்விரண்டு நூல்கள் நமக்குக் கிடைப்பதரிதேனும், அவற்றின் கதைகளை அறிந்துகொள்வதற்கு ஒரு மார்க்கமிருக்கின்றது. சூடாமணிப் புலவர் இயற்றிய வைசியபுராணம் என்னும் நூலில் பஞ்சகாவியங்களின் கதைகளையும் சுருக்கமாகக் கூறியுள்ளார். அந்நூலில் 35-வது படல ஆரம்பத்தில் "நேரார் குண்டலகேசிப் பேர் நெடுநூலின் சீருரைத்தா." என ஆசிரியர் கூறியிருக்கின்றாராதலின், 34-வது படலத்துள்ள கதை குண்டலகேசியின் கதையெனவே விளங்குகின்றது. 31-32-33-வது அதிகாரங்களில் சிந்தாமணி—சிலப்பதிகார—மணிமேகலைகளின் கதைகள் கூறப்பட்டிருக்கின்றன. 35-வது படல இறுதியில் "அருமையான வைங்காவியந்தன்னிலே உரிய விக்கதைக் காவியமொன்றரோ" எனவும் கூறியிருக்கின்றது. ஆதலின், 35-வது படலத்தில் வளையாபதியின் கதை கூறப்பட்டுள்ளது. இவ் வைசியபுராணம் சில வருஷங்கட்குமுன் பொழிப்புரையுடன் அச்சிடப்பட்டிருக்கிறது.

ஃ

குண்டலகேசியின்கதை வருமாறு:-

ராஜாதி ராஜனென சோழனும், பெயர்பெற்ற வக்துவன் வமிசத்திற் பிறந்த காவேரியும் வெகு நேசமாக இருந்தார்கள். ஒருவரையொருவர் பிரிந்திருக்க அவர்கள்மனம் சகியாது. இவ்விருவரும் கற்றவர்களால் மெச்சப்படும் மேம்பாட்டினையுடைய 64-கலைஞானங்களையும், மற்றும் பல சாஸ்திரங்களையும் எறக்குறைய முற்றுமே குற்றங்குறைகளின்றி உணர்ந்தவர்கள். இகபர ஞானங்களைக்கூறும் நூல்களை முற்று முணர்ந்தவனும், தனக்கு நிகர் ஒருவனுமிலன் என்ற எண்ணத்தாற் கர்வங் கொண்டிருந்தோனுமாகிய பாண்டியன் அப்பொழுது அயல்நாட்டில் அரசு செலுத்திவந்தான். அவன் பந்தாட்டத்தில் தனக்குள்ள தேர்ச்சியை மிகப் பெரியதாக எண்ணி அவ்வாட்டத்தில் தன்னை வெல்வார் ஒருவருமிலர் என்று தன் வெற்றிக் கொடியில் சித்திரித்து காட்டியதுந் தவிர, தன்னோடு யாவர்வந்து சம்பிரதாயம் கூறினும் அங்குடன் பந்தாடுதற்குத் தான் சித்தனயிருக்கிறதாகவும் தெரிவித்திருந்தான்.

ஃ

அகலங்க சோழனும் தன்னுடைய பராக்கிரமத்தை மிக மதித்துத் தன் சேனைகளையெல்லாம் அணிவகுத்துத் தன்னை ராஜாதிராஜன் என்று ஏற்றுக்கொள்ளாத ஒவ்வொரு சிற்றாசனையும் ஜெயித்து வாருங்கள் என்று அவர்கட்குக் கட்டளை இட்டான். ஃ

இதையறிந்த பாண்டியராஜன் தன்னுடைய கட்டியக்காரனை அழைப்பித்து சோழராஜனிடம்போய் "ஓ சோழா! நீயும் நானும் உண்மையாகவே மிகவும் பெருமையை யுடையவர்கள். நமக்குச் சமமானவர் எவருமில்லை. நாம் இருவருந்தான் ஒருவருக்கொருவர் மூரண்செய்து கொள்ளத்தகும். அப்படி இருக்க நாம் ஏன் ஒருவரையொருவர் எதிர்த்து யார் பெரியவரென்பதை நிச்சயித்துக் கொள்ளக்கூடாது? சாதாரணமாக ஒருவன் யோக்கியதையை அறிவதற்கு ஏதுக்களான சண்டை கல்வி முதலியவையெல்லாம் அவ்வளவு முக்கியமானவை யல்லவாகலின், அவைகளை நீத்து பெருமையுடைய பந்தாட்டத்தில் என்னை எதிர்ப்பாயாக. இப்பந்தயத்தை நீ ஒப்புக்கொண்டால் சரி, நல்லது. இன்றேல் நீ ஒரு பெருமையுடைய அரசன் அல்ல" என்னும் சமாசாரத்தை நான் சொல்லியதாகச் சொல் என்றனுப்பினான். இதைக் கேட்கவே சோழனுக்குக் கோபம் அதிகரித்தது. உடனே மந்திரிகளை அழைத்து நான் காலதாமதமின்றி மதுரைக்குப்போய் துஷ்டனான பாண்டியனது கர்வத்தைப் பங்கப்படுத்தவேண்டு மாகையினால் என் பிரயாணத்திற்கு வேண்டியவைகளை யெல்லாம் வெகு சீக்கிரமாக ஆயத்தப்படுத்த வேண்டுமென்று அவர்கட்குக் கட்டளை இட்டான். அப்போது அவ்விடத்திருந்த காவேரி உடனே எழுந்து மரியாதையுடன் அரசனை விளித்து "ஓரசன் அயலரசன் நாட்டிற்குட் புகுதல் தனது கண்ணியத்திற்குத் தக்கதன்று. பாண்டியனை கர்வபங்கப்படுத்த வேண்டுவது தங்களிஷ்டமே. தங்களுடைய ஊழியக்காரனாகிய நான் இப்போதே மதுரைக்குச்சென்று அவனுடைய தென்றே சொல்லும்படியான அப்பந்தாட்டத்திலேயே பாண்டியனை வென்று அச்சந்தோஷ சமாசாரத்துடன் வெகு சீக்கிரத்தில் இவ்விடம் திரும்பிவருகிறேன்" என்று செப்பினான். ஃ

இதைக் கேட்டவுடன் மந்திரிகள் மிகுந்த சந்தோஷத்துடன் அரசனை நோக்கி "ஓ அரசே! ஒரு பிரஜையினால் ஜெயிக்கப்பட்ட கீர்த்தி நியாயமாக அரசனுக்கே உரியது என்று நூல்கள் கூறுகின்றமையால் தங்கட்குப் பதிலாக காவேரியையே அனுப்ப வேண்டும்" என்றனருடவே அரசனும் அவர்கள் வேண்டுதலுக்கிசைந்து காவேரியை நோக்கி, "நீ பாண்டியனிடம்போய் அவனை வென்று வருவாய்" என்று செப்பினான். ஃ

உடனே காவேரி வீரத்தன்மை பொருந்திய ஏராளமான காவலாளர்களுடனே புறப்பட்டு மதுரைக்குப் போய்ச் சேர்ந்தான் பாண்டியனும் காவேரியைத் தக்க மரியாதையுடன் அழைத்து க்ஷேம சமாசாரங்கள் வினவிப் பின்னர் "நீர் இவ்விடம் வந்தது எதன் பொருட்டு" என உசாவினான். காவேரி தான் சோழனால் பாண்டியனுடன் பந்தாடுதற்கு அனுப்பப்பட்டமையால் மதுரைக்கு வந்ததாகவும் அதைத்தவிர வேறு காரியம் ஒன்றுமில்லையென்றும் கூறினான். உடனே பாண்டியன் கோபித்து வைசிய குலத்திற் பிறந்த காவேரி க்ஷத்திரிய குலத்திற் பிறந்து அரசுபுரியும் அரசனுக்கு

---

முழுச்சோம்பேரியையும் எப்படியோ ஒருநாளில் உழைப்பாளியாக்கி விடலாம். ஆனால் உழைப்பாளியை எந்நாளும் சோம்பேரியாக்கமுடியாது. வெறுமனே படுத்துக்கிடப்பவன் போலிருந்தாலும் அவன் நெஞ்சினது வேலைக்கு ஓய்வேயில்லை.

எதிரியல்ல வாதலால் அவனோடு பந்தாடமாட்டேனென்று சொல்ல, காவேரி அரசனை நோக்கி, "எ அரச! நீர் உமது வெற்றிக்கொடியில் பந்தாட்டத்தில் உம்மை வெல்வார் ஒருவருமிலர் என்று சித்திரித்து நாட்டியதுந்தவிர யார் வேண்டினும் அவ்வாட்டத்தில் உம்மை எதிர்க்கலாம் என்றும் தெரிவித்திருக்கிறீர்; ஆதலின் இப்போது உம்மை யாவர் எதிர்த்திடினும் அவரோடு பந்தாடுவதற்கு நீர் இசையவேண்டுமன்றோ" எனக் கேட்க, அரசனும் வெட்கி இதற்கிசைந்து தம்மிருவருடைய சாமர்த்தியத்தையும் அறிவதற்கு ஒரு நாள் ஏற்படுத்தி மத்தியஸ்தர்களையும் நியமித்தவுடனே ஒவ்வொருவனும் அளவற்ற திரவியத்தையும் பெரிய சேனையையும் பொதுக்கட்டி அவை கெலிப்பவனுக்குக் கிடைக்கவேண்டிய பரிசு எனப் பந்தயம் பேசிக்கொண்டார்கள்.

ஃ

குறித்த நாளும் ஏற்பட்டு ஆட்டமும் ஆரம்பமாய்விட்டது. பாண்டிய ராஜனும் காவேரியும் பந்தயத்தில் தேர்ந்த குதிரைகளின் மீதேறிக் கொண்டு இப்புறமும் அப்புறமும் ஓடியோடி பந்தை அடித்துக்கொண்டிருந்தார்கள். ஆட்டத்தில் இருவர்களும் சமமாகவே இருந்தபடியால் வெற்றி இன்னார்க்கென்று நிர்ணயிக்க முடியாமலிருந்தது. காலங்கழிந்தும் ஆட்டம் முடிவதாகத் தோற்றவில்லை. சிறுநேரம் தாழ்ந்து பாண்டியன் இவ்வாட்டத்தை நிறுத்தி மற்றோராட்டத்தில் நம் சாமர்த்தியத்தைப் பரீக்ஷிப்போமென்று சொல்ல காவேரியும் சம்மதிக்க அவ்வாட்டம் ஆரம்பித்தார்கள். அதெப்படியென்றால் ஒரு சதுர குளக்கரையிலிருந்து குறுக்கே ஒரு பந்தை எறிய அது எதிர்கரையில் நிலத்தில் விழுமுன்னே குதிரைமேற் சவாரி செய்துகொண்டு குளத்தைச் சுற்றிப்போய் அப்பந்தை அடிக்க வேண்டியதுதான். இதில் பாண்டியவன் மிகவும் தேர்ச்சியுடையவனாதலால் காவேரியை வென்றுவிடலாமென்று உறுதியாக நினைத்திருந்தான்.

ஃ

பந்து எறிந்தாய் விட்டது. உடனே காவேரி பாண்டியனைக் காட்டிலும் அதிகமாகச் சவாரி போய் ஆச்சரியப்படும்படியான சாமர்த்தியத்துடன் பந்தை அடித்துவிட்டான். ஆதலின் வெற்றி காவேரி பக்ஷம் ஆகியது மத்தியஸ்தர்களும் அவ்வாறே நீர்மானித்தார்கள். அகந்தையுடைய பாண்டியனுக்கு தனது தோல்வியை ஒப்புக்கொள்ள வேண்டிநேர்ந்ததுந் தவிர தான் பந்தயங் கட்டின திரவியமனைத்தையும் சேனையையும் காவேரிக்கே கொடுக்கவும் நேர்ந்தது. வெற்றியின் கீர்த்தியையும் தான் பாண்டியனிடமிருந்து பந்தயத்தால் ஜெயித்த திரவிய முதலியவற்றையும் தனது நண்பனும் மன்னவனுமான சோழனுக்குச் சேர்ப்பிக்க வேண்டுமென்னும் அவா மேலீட்டால் காவேரி மதுரையை விட்டு சோழ தேசம் செல்லுகையில் இராவைப் போக்குவதற்கு இறங்கினான்.

ஃ

இத்தருணத்தில் இதுகாறும் சோனோடு சண்டை செய்துகொண்டிருந்த பாண்டியன் சேனாதிபதி

---

அச்சாபீஸ் இருக்கிற இடத்தில் கடிதத்திற்குக் குறைவா? ஹோட்டலில் இலைக்குப் பஞ்சமா? யுவதிகள் கூடியிருக்கு மிடத்தில் கண் திருஷ்டிக்குத் தாழ்வா?

யாகிய கௌந்தையன் மதுரைக்குத் திரும்பி வந்து சமீபத்தில் நேர்ந்த தோல்வியால் மன வியாகூலப் பட்டுக் கொண்டிருக்கும் தன் எஜமானனைப் பார்த்து "ஏ மன்னவ! காவேரியைப் பின்தொடர்ந்துபோய் அவனுடன் எதிர்த்துப் போர்புரிந்து அவன் கைப்பற்றிக்கொண்டுபோன திரவியம் சேனை கண்ணியம் கீர்த்தி முதலிய வற்றையெல்லாம் மீட்டுக்கொண்டுவர எனக்கு உத்தரவு கொடுக்கவேண்டும்" என மிகவும் வணங்கிக் கேட்டான். பாண்டியன் இவ்வார்த்தைகளைக் கேட்டவுடனே தனக்குச் சற்று முன்பு நேரிட்ட அவமானம் நீங்கி விடும் என்ற எண்ணத்துடன் கௌந்தையனுக்கு அவனிஷ்டப்படி உத்தரவு கொடுக்கவே, அவன் மிகுந்த சேனையோடு காவேரியைப் பின் தொடர்ந்துபோய் அவனோடு சண்டை தொடுத்தான். அநேகநாள் வரை சண்டை மிக உக்கிரகமாக நடந்து கொண்டிருந்தது. கடைசியில் இருதிறத்தாருடைய சேனைகளும் நெருங்கின. பாண்டியன் சேனை தோல்வியுற்றது. காவேரி கௌந்தையனோடு மற்போர் புரிந்து ஒரே அடியில் அவன் தலையைத் துண்டித்துக் கீழே வீழ்த்தினான். ஆதலாலே பின்னுமொருமுறை வெற்றி காவேரி பக்ஷமேயாயது.

பிற்பாடு கௌந்தையன் தலையை தனது வெற்றிக்குறிகுறியாக எடுத்துக்கொண்டு காவேரி சோழதேசம் புறப்பட்டான். கௌந்தையன் மனைவியார் அரம்பையாதிபை என்பவள் தன் கணவன் இறந்த செய்திகேட்டு மிக்க விசனத்துடன் காவேரியைப் பின்தொடர்ந்து தான் மிகவும் நேசித்திருந்த தனது தலைவனுடைய தலையைத் தனக்குத் தரவேண்டுமென்று மிகவும் இரங்கிக் கேட்டனள். காவேரி அவளோடு பரிதாபப்பட்டபோதிலும் அவள் கணவன் தலை நியாயமாகச் சோழனுக்குச் சேர்ந்த பொருளாகையால் தனக்கு அதைத் தருவதற்குச் சுதந்தரமில்லையென்றும், அவள் தன்னுடன் சோழ தேசம் வந்தால் அரசனிடம் அவள் முறையைத் தானே கூறி கௌந்தையன் தலையை வாங்கித் தரக்கூடுமென்றும் உறுதியாகச் சொன்னான். அரம்பையாதிபையும் அப்படியே அவனுடன் சோழதேசம் சென்றாள். காவேரி தான் முன் கூறிய வார்த்தை பிசகாமல் அரசனிடம் அவள் முறையைச் சொல்லி கௌந்தையன் தலையை அவன் மனைவிக்குக் கொடுக்கும்படி ஏற்பாடு செய்தான். ஃ

இக்கதையிற் பல உண்மைகள் பொதிந்துள்ளனவேனும், எவனேயாயினும் தனக்குள்ள செல்வத்தையேனும் மற்றெதையேனும் மிகப் பெரிதாக மதித்து அகந்தைகொண்டிருப்பானேல் அவன் சீக்கிரத்தில் கெட்டுவிடுவான் என்னும் உண்மையே இதை வாசிப்போர் யாவருக்கும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெளிவாய்த் தெரியும். ஆகவே யாவரும் அகந்தை கொள்ளக்கூடாது. இதுதான் குண்டலகேசியின் சாரம் ஆகும்.

---

முற்காலத் தமிழ் நாட்டுப் பஞ்சாயத்தார் இருவர் தம் சொல்லையும் எழுதரம் கேட்டு, வெகு கவனமாக விசாரித்து, ஏழை வடிக்கும் கண்ணீர் வேந்தனது நீதி முறையை வேரறுக்கும் கூரியவாள் என்று கருதித் தீர்ப்பளித்து வந்தனர். தற்காலத்தில் ஏற்பட்டுள்ள நியாயஸ்தலங்களில் நியாயம் தேடுபவர்களோ என்றால் பெரும் பணச் செலவு செய்து பலநாள் காத்திருந்தும் திருப்திகாமான முடிவைப் பெறக் கூடாத நிலைமையில் சிலர் இருக்கிறார்கள்.

# பாத்தியதையை மறைத்தல்.



ஒரு வீட்டையோ நிலத்தையோ ஒருவர் இன்னொருவருக்குப் பாரம்பரைப் பாத்தியதையுடன் அனுபவித்துக்கொண்டு வருகிறதென்று பத்திரத்தின் மூலியமாய் உரிமை ஏற்படுத்திவைக்கிறார். பரம்பரை பாத்தியதை பெற்ற சோமு சிலகாலத்திற்குப் பிறகு தன் குமாரன் மீது விரோதங்கொண்டு வீடோ நிலமோ அவனுக்குச் சேராதபடி செய்ய விரும்பி அவற்றை இன்னொரு மூன்ருவது மனிதனுக்குப் பத்திரத்தின்மூலம் சொந்தமாக்கி விடுகிறான். மூன்ருவது மனிதனே தன் பேருக்குப் பத்திரம் ஏற்பட்டுவிட்டதால், இனி சோமுவின் குமாரன் அந்த வீட்டில் இருக்கக்கூடாதென்றும், வீட்டை உடனே காலிசெய்து விட வேண்டுமென்றும், வக்கீல் நோட்டீஸ் அனுப்புகிறார். சோமுவும் தான் வீடுநிலம் இவற்றை மூன்ருவது மனிதனிடம் பத்திரத்தின்மூலம் ஒப்புவித்து விட்டபடியால் வீட்டை உடனே காலி செய்யும்படி தன் குமாரனுக்கு வக்கீல் நோட்டீஸ் தருகிறான். மற்றவர்களும் சோமுவின் குமாரனுக்கு இனி வீடுநிலம் கிடையாதுதான் என்றும், எப்போது சோமு மூன்ருவது மனிதனுக்கு எழுதி வைத்துவிட்டானே அப்பொழுதே சோமுவின் குமாரனுக்குப் பாத்தியதை போய்விட்டதென்றும் கருதத் தொடங்குகின்றனர்.

ஃ

இதில் சோமுவின் குமாரனுக்குப் பாத்தியதை போய்விட்டதா என்பது கேள்வி. சோமு மூன்ருவது மனிதனுக்கு வீட்டையும் நிலத்தையும் எழுதி ஒப்புவிக்க உரிமையுண்டா என்பது மற்றொரு கேள்வி. சோமுவுக்கு ஏற்பட்ட பாத்தியதை சோமுவுக்கு மட்டுமே பாத்தியதையாய் இருக்கவில்லை. அவன் காலத்திற்குப் பிறகு அவன் வயிற்றில் பிறந்த குமாரனுக்கும், அந்தக் குமாரனின் சந்ததி பரம்பரைக்குமே பாத்தியதை தொடர்ச்சியாகப் போகின்றது. ஆகவே, சோமு மூன்ருவது மனிதனுக்கு எழுதிவைக்கவோ, சோமுவின் சந்ததி பரம்பரையைச் சேராத மூன்ருவது மனிதனே வேறு யாரோ அந்த வீட்டிலும் நிலத்திலும் எந்தப் பாத்தியதையாவது பெறவோ சுதந்தரமே கிடையாது. எப்பொழுது பரம்பரை பாத்தியதை என்று ஏற்பட்டுவிட்டதோ, அப்பொழுது சோமுவின் குமாரனுக்கும் அவன் பின்சந்ததியாருக்கும் அந்த சொத்தில் மைனர் பாத்தியதை ஏற்பட்டுவிட்டது. இவ்விதமாக மைனர் சொத்தாக, அதாவது பின் சந்ததியாரின் சொத்தாக இருப்பதை இன்னொருவனுக்கு சோமு கொடுக்க எவ்வித உரி

---

*நீங்கள் எப்படிப்பட்டவர்கள் என்பதை உங்களைப்பற்றி நீங்கள் அறிந்திருப்பதைவிட நான் அதிகமாக அறிந்திருக்கிறேன். ஆகவே, என்னுடன் வெகு பிரியமாய்ப் பசப்பிப் பேசுவதை நான் விரும்பவில்லை. உங்களுடைய மயக்கு வித்தைகளில் இது ஒன்று என்பதே என் அபிப்பிராயமாதலால் நீங்கள் அன்புகாட்டிப் பேசும்போதெல்லாம் நான் மிகு விருப்புடன் கேட்பவன்போல் நடிப்பவனாகிறேன்.*

மையுமில்லை. கொடுத்தாலும் அது செல்லாது. ஃ

"ஓ! ஏன் செல்லாது? வீடு, நிலம் சோமுவின் சொத்து. சோமு தன்னுடைய சொத்தை எப்படி வேண்டுமானாலும் செய்ய சுதந்திரமிருக்கிறது. பத்திரம் சாதாரண பத்திரமா? ரிஜிஸ்த்ரார் ஆபீஸில் ரிஜிஸ்தரும் ஆகியிருக்கும்போது மூன்ருவது மனிதனுக்கு ஏன் அது சொந்தமாகாது? ஓ! மூன்ருவது மனிதனுக்கேதான் சொந்தம்! சோமுவின் குமாரன் வீட்டைக் காலிசெய்ய வேண்டியதே! ரிஜிஸ்தரான பத்திரமல்லவா?—என்ன சாமான்ய பத்திரமா?—என்று விஸ்தாரமாய்ப் பேசலாம். சோமுவின் குமாரனைப் பார்த்து "உனக்கு இனி பாத்தியதை கிடையாதப்பா! நீ வீட்டையும் நிலத்தையும்விட்டுவிடவேண்டியதுதானப்பா!" என்று காதில் உபதேசம் செய்யவும் சிலர் புறப்படலாம் இப்படிப் பேசுவதெல்லாம் வெகு சாமர்த்தியமாக வாயடி அடிக்கிற சங்கதிதான். சோமுவின் குமாரனை ஏமாற்றப் பார்க்கிற சங்கதிதான். இவர்கள் அந்தப் "பரம்பரை பாத்தியதை" என்ற வார்த்தையையே மண்ணில் மூடி மறைத்துவிட்டு, அந்த "பரம்பரை" என்ற வார்த்தையையே பிரஸ்தாபத்திற்கு எடுக்காமல் வெகு தந்திரமாய் நடந்துகொள்கிருர்கள். உண்மையாகவும் தெளிவாகவும் நியாயமாகவும் இருக்கிற அந்தப் "பரம்பரை பாத்தியதை" என்ற வார்த்தையையே மறைந்துபோகும்படி செய்யப்பார்க்கிருர்கள். இது வெகு தந்திரமான சமர்த்து வித்தையாகும்.

ஃ

இனி, சோமுவின் குமாரன் செய்யவேண்டியதென்ன? அவன் கோர்ட்டுக்குப் போய்த் தனக்கு சாஸ்வதமாக ஏற்பட்டிருக்கும் பரம்பரை பாத்தியதையைப்பற்றித் தன் தந்தையின்மேலும் மூன்ருவது மனிதன் மேலும் வழக்காடவேண்டியதுதான். "பரம்பரை பாத்தியதை" என்கிற அந்த வார்த்தைக்குள்ள உண்மையான பொருளை சோமுவின் குமாரன் அறிந்தவனும் நம்பியவனும் துணிய வேண்டியதுதான். சோமு மூன்ருவது மனிதனுக்கு எழுதிவைத்ததே முதல் தவறுதலாகும். அந்தத் தவறுதலையே சரியென்று சாதிப்பதற்கு, ஓ! பத்திரமும் ரிஜிஸ்தராய்விட்டதே என்று சொல்வாஞனல் ஒரு தவறுதலான செய்கையை மறைப்பதற்கு இன்னெரு தவறுதலான வார்த்தையை உபயோகிக்கிற மாதிரியாகவே இது இருக்கிறது.

ஃ

இங்கு சோமு தன் குமாரனுக்கு இருக்கும் பாத்தியதையை மறைக்கப் பார்த்தது போலவே, ஒரு மாமி தன் மருகிக்கு இருக்கும் பாத்தியதையை மறைத்துவிட முயற்சிக்கிருள். அந்த மருகி தன் வீட்டின் வேலைக்காரி போன்றவளே என்றும், அவளுக்கு எவ்வித சுதந்தரமுமே கிடையாதென்றும் ஆவாரிக்கிருள்! இவ்விதமே, மாற்ருந்தாய் தன் மூத்தாளின் குமாரனை, உனக்கு இந்த வீட்டில் என்ன சொந்த மிருக்கிறது; போ வெளியே என்ருல் நீபோக வேண்டியவன் தானே; கட்டிக்கொண்ட மனைவியாகிய எனக்கல்லவா பாத்தியதை என்று உறுமிகிருள். ஏற்கனவே, சகோதரர்களுக்குள் பாகப் பிரிவினை ஏற்பட்டான பிறகு அதில் தம்பி காலமாய் விட்டால், தமயனே தன் தம்பியின் சகல சொத்துக்களும் தனக்கே சொந்த மென்றும், தம்பியின் மனைவிக்கு ஜீவனும்சம் கொடுப்பதைத் தவிர சொத்து உரிமை எதுவும் அவளுக்குக்கிடையாதென்கிருன்.

ஃ (தொடரும்.)

# "அமிர்த குணபோதினி"

## பிரஜோத்பத்தி வருஷத்திய தை மாத பஞ்சாங்கம்.

| யோகம் | இங்கி | தமிழ் | வார | திதி, நக்ஷத்திரம், விரதாதிகள் முதலியவை. |
|---|---|---|---|---|
| ஸி | 14 | 1 | வி | ஷஷ்ட 9-22, உட் 32-31, மகாரவி 3-36, உத்தராயனம், கரிநாள் ஷஷ்டி விரதம், பொங்கல்பண்டிகை. |
| அ | 15 | 2 | வெ | ஸப் 16-1, ரே 40-17, கரிநாள், மாட்டுப்பொங்கல், சீவரம் பார்வேட்டை. |
| ஸி | 16 | 3 | ச | அஷ் 22-39, அசு 47-43, அதிதி, கரிநாள், தாத்ரீ, ஸாவித்ரீ, விரதம். |
| பி-ஸி | 17 | 4 (ஸ்ரீருக்கசர (4-45)) | ஞா | நவ 28-33, பர 54-29. திருக்கச்சியூர் பார்வேட்டை. |
| ம-அ | 18 | 5 | தி | தச 33-17, கிரு 59-47, பெண்ணையாரில் தீர்த்தவாரி. |
| அ | 19 | 6 | செ | ஏகா 36-20, ரோ 60-0, ஸர்வைகாதசி. |
| ஸி | 20 | 7 | பு | துவா 37-32, ரோ 3-20, கூர்ம துவாதசி. |
| ம | 21 | 8 | வி | திர 37-0, மிரு 5-11, கும்பாயனம் 11-7, பிரதோஷம். |
| ஸி | 22 | 9 | வெ | சசி 34-48, ஆரு 5-21. |
| ஸி | 23 | 10 | ச | ○ 31-20, புந 4-4, தைப்பூசம், பெருந்தேவித் தாயார் தெப்பம், ஸ்ரீ மூஷ்ணம் தீர்த்தம். |
| ஸி-ம | 24 | 11 | ஞா | பிர 26-46, பூச 1-39, உப 56-42, கரிநாள். |
| ம-ஸி | 25 | 12 | தி | துவி 21-30, மக 54-29, திதிதுவயம். |
| ஸி-அ | 26 | 13 | செ | திரி 15-51, பூா 50-25, சங்கஷ்ட சதுர்த்தி. |
| அ-ம | 27 | 14 | பு | சது 10-2, உத் 46-23. |
| ஸி | 28 | 15 | வி | பஞ் 4-14, உப 54-25, ஹஸ் 42-48, செவிலிமேடு அனுஷ்டான குள உத்ஸவம். |
| ஸி | 29 | 16 | வெ | ஸப் 53-24, சித் 38-51. |
| அ-ஸி | 30 | 17 | ச | அஷ் 48-39, ஸ்வா 35-40, கரிநாள், அஷ்டகை. |
| உ-ம | 31 | 18 | ஞா | நவ 44-21, விசா 32-57. |
| ஸி | பிப்ரவரி 1 | 19 | தி | சத 40-43, அநு 30-46. |
| உ-அ | 2 | 20 | செ | ஏகா 37-29, கேட் 29-12, ஸர்வைகாதசி. |
| ம-அ | 3 | 21 | பு | துவா 35-9, மூல 28-21. |
| ஸி | 4 | 22 | வி | திர 33-46, பூா 28-21, பிரதோஷம், சிவாத்திரி. |
| ஸி-ம | 5 | 23 | வெ | சசி 33-23, உரா 29-23. |
| ஸி | 6 | 24 | ச | ● 34-10, ஹ்ருவ 31-35, தை அமாவாசை, திருப்பக்குழி தெப்பம். |
| ம-ஸி | 7 | 25 | ஞா | பிர 36-19, அவி 35-0, மாகசுத்தம், திருநாங்கூர்கருடன் |
| ஸி | 8 | 26 | தி | துவி 39-50, சத 39-45. சந்திரதரிசனம், கைலாசகௌரி விரதம். |
| ம-அ | 9 | 27 | செ | திரி 44-37, பூட் 45-47, கந்த கௌரீ விரதம், |
| ஸி-உ | 10 | 28 | பு | சது 50-32, உட் 52-46, குந்த—வா—தில—சதுர்த்தி |
| ஸி | 11 | 29 | வி | பஞ் 57-2, ரே 60-0, மதனபஞ்சமி. |
| அ | 12 | 30 | வெ | ஷஷ் 60-0, ரே 0-25, கும்மாகி 36-9, விஷ்ணுபதி. |

| | | | |
|---|---|---|---|
| ரா | | | |
| சுக் | 15உக்கு ராசி. | | குரு |
| சகு ர | | | |
| புத | | | கே |

# “ அமிர்த குணபோதினி ”

## பிரஜோத்பத்தி வருஷத்திய மாசி மாத பஞ்சாங்கம்.

| யோகம் | இங் | தமிழ் | வார | திதி, நக்ஷத்திரம், விரதாதிகள் முதலியவை. |
|---|---|---|---|---|
| சி | 13 (பிப்ருவரி (4-16)) | 1 | ச | ஷஷ் 3-48, அசு 8-12, ஷஷ்டிவிரதம், சந்திரார்க்கவிரதம், ஸ்ரீரங்கபட்டணம் தேர். |
| பி-சி | 14 | 2 | ஞா | ஸப் 10-4, பர 15-29, கிருத்திகை, ரதஸப்தமி, பீஷ்மாஷ்டமி. |
| ம-அ | 15 | 3 | திங் | அஷ் 15-17, கிரு 21-41. |
| அ-சி | 16 | 4 | செ | நவ 18-51, ரோ 26-25, திருக்கச்சியூர் சேஷவாஹனம், |
| சி | 17 | 5 | புத | தச 20-37, மிரு 29-20, தென்னேரி தெப்பம். |
| ம-அ | 18 | 6 | வி | ஏகா 20-24, ஆரு 30-23, ஜீவவார-பீஷ்ம ஸர்வைகாதசி |
| சி-உ | 19 | 7 | வெ | துவா 18-18, புந 29-31, மீனாயனம் 48-18, திதிதவயம், பிரதோஷம், பீஷ்மவராஹ திலபத்ம துவாதசி. |
| சி-ம | 20 | 8 | ச | திர 14-25, பூச 26-54, திருவொற்றியூர் மகிழடி. |
| சி-ம | 21 | 9 | ஞா | சசி 9-5, ஆயி 23-7, ஸ்ரீ முஷ்ணம் தீர்த்தம். |
| ம-சி | 22 | 10 | தி | ○ 2-39, உப 52-45, மக 18-14, மாஹாமாகீ, ராயஜீகுள தெப்பம். |
| சி-அ | 23 | 11 | செ | துவி 47-44, பூர 12-44, திருக்கச்சியூர் பந்தம் பிரி. |
| அ-ம | 24 | 12 | புத | திரி 40-4, உத் 6-55, ஸ்ரீரங்கம் திருப்பள்ளி உத்ஸவம் |
| சி-அ | 25 | 13 | வி | சது 32-43, ஹஸ் 1-21, உப 54-24, சங்கஷ்ட சதுர்த்தி |
| சி | 26 | 14 | வெ | பஞ் 25-58, சுவா 51-9, |
| சி | 27 | 15 | ச | ஷஷ் 19-56, விசா 47-23 திதி துவயம், கெடியாலம் ரதம், கரிநாள். |
| ம | 28 | 16 | ஞா | ஸப் 14-53, அநு 44-37, கரிநாள், ஸீதா ஜனனம். |
| சி | 29 | 17 | திங் | அஷ் 10-57, சேட் 43-5, ராமதாஸநவமி, அஷ்டகை. |
| அ-சி | 1 (1932ஞ் மார்ச்சு மீ) | 18 | செ | நவ 8-11, மூல 42-39, தசமி அசுபம். |
| அ | 2 | 19 | புத | தச 6-39, பூரா 42-42. |
| சி | 3 | 20 | வி | ஏகா 6-24, உரா 45-29, ஸர்வைகாதசி, திருவரங்கம் கருடன். |
| ம-சி | 4 | 21 | வெ | துவா 7-21, ஸ்ருவ 48-36, பிரதோஷம் ஸ்ருவண துவாதசி. |
| சி-அ | 5 | 22 | சனி | திர 9-31, அவி 52-51, மஹாசிவராத்திரி; காளஹஸ்தி ரிஷபவாஹனம். |
| சி | 6 | 23 | ஞா | சசி 12-47, சத 58-10, பச்சைவர்ணர் கருடன். |
| சி | 7 | 24 | திங் | ● 17-8, பூட் 60-0, சோமவார அமாவாசை. |
| ம-அ | 8 | 25 | செ | பிர 22-24, பூட் 4-30, பால்குண சுத்தம் சந்திர தரிசனம் |
| சி-உ | 9 | 26 | புத | துவி 28-23, உட் 11-32, ராஜமன்னார் கருடன். |
| சி-அ | 10 | 27 | வி | திரி 34-52, ரே 19-8, பச்சை வர்ணர் தேர். |
| அ-சி | 11 | 28 | வெ | சது 41-36, அசு 26-56, சாந்த சதுர்த்தி. |
| சி-அ | 12 | 29 | சனி | பஞ் 47-57, பர 34-33. |

| | | | |
|---|---|---|---|
| ராசுக் | | | |
| ர குபு | 15உக்கு ராசி. | | குரு |
| சனி | | | |
| | | | கே |

# " அமிர்த குணபோதினி "

## பிரஜோத்பத்தி வருஷத்திய பங்குனி மாத பஞ்சாங்கம்.

| யோகம் | இங் | தமிழ் | வார | திதி, நக்ஷத்திரம், விரதாதிகள் முதலியவை. |
|---|---|---|---|---|
| | | | | கிருத்திகை வெண்ணெய்த்தாழி. |
| ஸி | 13 | 1 | ஞா | ஷஷ் 53-32, கிரு 41-33, மீனரவி 29-2, ஷடசீதி |
| அ | 14 | 2 | திங் | ஸப் 53-0, ரோ 47-28, ராஜமன்னார் ரதம். |
| ஸி-ம | 15 | 3 | செவ் | அஷ் 60-0, மிரு 51-57. |
| ஸி | 16 | 4 | புதன் | அஷ் 0-49, ஆரு 54-30, புதாஷ்டமி. |
| அ | 17 | 5 | வியா | நவ 1-36, புந 55-12, திருவாரூர், மயிலை, பழனி, |
| | மார்ச் (4-10) | | | மைலம், ரிஷபவாஹனம். [ராயணபுர வைரமுடி. |
| உ-ம | 18 | 6 | வெள் | தச 0-28, உப 56-58, பூச 53-57, கரிநாள் திருநா |
| ம-அ | 19 | 7 | சனி | துவா 52-24, ஆயி 50-49, வைஷ்ணவ வைகாதசி, நர |
| | | | | ஸிம்ம துவாதசி, மயிலை தேர். [அறுபத்திமூவர் |
| ம-ஸி | 20 | 8 | ஞா | திர 45-48, மக 46-10, மேஷாயனம் 47-37, மயிலை |
| ஸி | 21 | 9 | திங் | சசி 38-6, பூர 40-21, திருவாரூர் நடனம், நாமக்கல் |
| | | | | தேர். [திரம், காமதஹனம், ருத்திர பாததரிசனம். |
| அ-ஸி | 22 | 10 | செவ் | ○ 29-36, உத் 33-45, சந்திரக்ரஹணம் பங்குனிஉத் |
| ம-ஸி | 23 | 11 | புதன் | பிர 20-42, ஹஸ் 26-46, திதித்வயம், கந்தபொடி |
| ஸி-அ | 24 | 12 | வியா | துவி 11-41, சித் 19-47. |
| ஸி | 25 | 13 | வெள் | திரி 3-1, உப 52-6, ஸ்வா |
| | | | | 13-11, சங்கட சதுர்த்தி |
| ஸி | 26 | 14 | சனி | பஞ் 48-17, விசா 7-24. |
| ம-அ | 27 | 15 | ஞா | ஷஷ் 42-55, அநு 2-42, |
| | | | | உப 56-45, கரிநாள். |
| ஸி-உ | 28 | 16 | திங் | ஸப் 39-5, மூல 57-52, கரிநாள். |
| ஸி-பி | 29 | 17 | செவ் | அஷ் 36-59, பூரா 58-3, சீதாதேவி விரதம். |
| அ-ஸி | 30 | 18 | புதன் | நவ 36-36, உரா 59-54, அஷ்டகை. |
| ஸி | 31 | 19 | வியா | தச 37-51, ஶ்ரவ 60-0, கரிநாள். |
| ம-ஸி | 1 | 20 | வெள் | ஏகா 40-40, ஶ்ரவ 3-23, ஸர்வைகாதசி. |
| ஸி-அ | 2 | 21 | சனி | துவா 44-43, அவி 8-12. |
| ஸி | 3 | 22 | ஞா | திர 49-47, சத 14-9, பிரதோஷம். |
| ஸி | 4 | 23 | திங் | சசி 55-34, பூட் 20-55, சிவராத்திரி. [டன் |
| அ-ஸி | 5 | 24 | செவ் | ● 60-0, உட் 28-34, மன்னார்குடி கோபாலன் கரு |
| உ-ம | ஏப்ரல் 6 | 25 | புதன் | ● 1-55, ரே 35-54, [சாந்திர ஸம்வத்ஸராதி. |
| அ-ஸி | 7 | 26 | வியா | பிர 8-26, அசு 43-39, சந்திரதரிசனம், யுகாதி |
| ஸி | 8 | 27 | வெள் | துவி 14-53, பர 51-15, ஸௌபாக்கிய உமாமாஸ |
| அ | 9 | 28 | சனி | திரி 21-1, கிரு 58-28, கிருத்திகை. [கௌரீவிரதம். |
| ஸி | 10 | 29 | ஞா | சது 26-33, ரோ 60-0, லக்ஷ்மி கணபதிவிரதம். |
| அ | 11 | 30 | திங் | பஞ் 31-9, ரோ 4-49, வஸந்தபஞ்சமி, மீனபஞ்சமிதிதி |
| ஸி-ம | 12 | 31 | செவ் | ஷஷ் 34-32, மிரு 10-7, மேஷரவி 51-3. |
| | | | | அங்கீரஸஹு சித்திரைமீ |
| ஸி | 13 | 1 | புதன் | ஸப் 36-21, ஆரு 14-3, விஷுவத், ஸந்தான ஸப்தமி. |

| | | | |
|---|---|---|---|
| ர குஜ ரா | புத சுக் | | |
| | 15உக்கு ராசி | | குரு |
| சனி | | | |
| | | | கே |

" அமிர்த குணபோதினி " பிரஸ், 302, தங்கசாலை வீதி, சென்னை—1932